# கல்கி

KALKI
10.9.2000
ரூ. 5.00

## டி.வி. சீரியலுக்கு சென்சார் தேவை?

'சித்தி' புகழ் நீனா பேட்டி!


பட்டில் நெய்த
கனவுகள்...
பலகாலம் தொடரும்
உறவுகள்...
குமரன் சில்க்ஸ்
புதிய ஷோரூம்
இப்பொழுது ஈரோட்டில்!



• ராஜ்குமாருடன் கோபால்

# "அது வேற! இது வேற!"

**ராஜ்குமார் கடத்தல் விவகாரத்தில் மூன்றாவது முறையாக காட்டுக்குச் செல்வதற்கு முந்தைய நாள் சிறிது நேரம் நம்மிடம் பேசிக் கொண்டிருந்தார் நக்கீரன் கோபால். வீரப்பன் பற்றி அவர் சொன்ன சுவாரஸ்யமானத் தகவல்கள்:**

● வீரப்பனுடன் பேச்சு வார்த்தை நடத்திக் கொண்டிருந்தபோது, எங்கள் தலைக்கு மேலே பறவைகள் கத்திக் கொண்டே சுற்றிச் சுற்றி வந்தன. எங்கள் பேச்சுக்களை டிஸ்டர்ப் செய்யும் அளவுக்கு சத்தம் இருந்தது. ஒரு நிமிடம் மேலே பார்த்தான் வீரப்பன். எழுந்தான். எல்லோரையும் மரத்தின் பின்னால் ஒளிந்து கொள்ளச் சொன்னான். அவனும் ஒளிந்து கொண்டான். எல்லோரும் மேலே பார்த்தவாறு இருந்தோம். கத்திக் கொண்டிருந்த பறவைகளில் ஒன்று மரத்தின் மீதிருந்த தனது கூட்டில் இறங்கியது. வாயில் வைத்திருந்த உணவை தனது அலகால் அழகாகத் தமது குஞ்சுகளுக்கு ஊட்டியது. ஒரு நிமிடம்தான்; உடனே பறந்து மறைந்து விட்டது. அந்தத் தாய்ப் பறவை எங்களைப் பார்த்து, பயந்து, மேலே சுற்றிக் கொண்டிருக்கும்போதே அது, குஞ்சுகளுக்கு உணவு கொடுக்கத் தயங்கிக் கொண்டிருப்பதை அதன் குரலில் இருந்து ஊகித்து விட்டான் வீரப்பன். அவனுக்குப் பறவை, மற்றும் பிராணிகளின் மொழி அத்துப்படி. அப்புறம் பேச்சுவார்த்தைக்கு மீண்டும் உட்கார்ந்தபோது, ''பறவைகளுக்கு கருணை காட்டும் நீ, ராஜ்குமாருக்குக் கொஞ்சம் கருணை காட்டக் கூடாதா?'' என்றேன். உடனே குரலை கடுகடுப்பாக்கிக் கொண்டு, ''அது வேற, இது வேற'' என்றான் வீரப்பன்.

● நாங்கள் பேசிக் கொண்டிருந்த இடத்தின் அருகில் ஆடு மேய்க்கும் சிலர் வந்து விட்டனர். உடனே வீரப்பன் யானை பிளிறுவது போல் சத்தம் போட்டான். அவனது தோழர்கள் மரம், செடிகளைச் சடசடவென ஆட்டி விட்டனர். அவ்வளவுதான் ஆடு மேய்த்தவர்கள் பின்னங்கால் பிடறியில் பட ஓடினார்கள்; ஆடுகளும்தான்.

● கர்நாடகச் சிறைகளில் வாழும் 51 பேரை விடுதலை செய்ய வேண்டுமென்பது முதலாவது பேச்சுவார்த்தையின்போது வீரப்பனின் கோரிக்கை. ஆனால் இரண்டாவது சுற்றின்போது, தற்போது கண்டிஷன் பெயிலில் உள்ள எழுபது பேரையும் சேர்த்து 121 பேரை விட்டுவிட வேண்டுமென்று கோரிக்கை வைத்தான் வீரப்பன். "இந்த மாற்றம் எப்படி?" என்று விசாரித்தேன். கர்நாடகச் சிறைகளில் வாடும் தமிழர்களின் நலன்களை ஒரு தன்னார்வ தொண்டு நிறுவனம் கவனித்து வருகிறது. முதல் முறை நான் பேச்சுவார்த்தை நடத்தி முடித்து வந்தவுடன் அந்த நிறுவனத்தின் தலைவர் பி.பி.ஸி. ரேடியோவில், பேட்டி கொடுத்திருக்கிறார். அப்போது அவர் சிறையில் வாடுவது 51 பேர் அல்ல; 121 பேர்' என்று சொல்லியிருக்கிறார். வீரப்பனின் தொடர்பு சாதனம் ரேடியோதானே. அந்தப் பேட்டியை வீரப்பன் கேட்டிருக்கிறான். அவ்வளவுதான். இரண்டாவது முறை நான் காட்டுக்குச் சென்றபோது, 'விடுதலை செய்யப்பட வேண்டியவர்கள் 121 பேர் என்று சொல்லி விட்டான்.

— **கௌசி**

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

**ப**வானி சங்கமம். பவானியும் காவிரியும் அமைதியாக கைகோத்துக் கொள்ளும் இடம். இந்த சங்கமக் கட்டத்தில் கம்பீரமாக நிற்கிறது சங்கமேசுவரர் ஆலயம்.

கருவறை விமானங்கள் புது வண்ணப் பூச்சுக்களுடன் ஜொலிக்க, முன் மண்டபம் எண்ணெய்ப் பிசுக்கும் அழுக்கும் அகற்றப்பட்டு புத்துயிருடன் காட்சியளிக்க, விரிவாக்கப்பட்ட சந்நிதிகளும் உளியோடு பரபரத்துக் கொண்டிருக்கும் சிற்ப வேலைக்காரர்களுமாய் மகா கும்பாபிஷேகத்திற்குச் சுறுசுறுப் பாய்த் தயாராகிக் கொண்டிருக்கிறது இந்தப் பழைமை வாய்ந்த ஆலயம். கும்பாபிஷேகம் செப்டெம்பர் 10ம் தேதி.

இங்குள்ள இலந்தை மரத்தின் கீழே ஜோதி வடிவில் தோன் றும் சிவலிங்கத்தைத் தரிசித்தால் பலன்கள் பல கிடைக்கும் என்று அசரீரி சொல்ல, குபேரன் இங்கு வந்து வழிபட்டார் என்கிறது புராணம். அன்றிலிருந்து அவனுடைய தலைநகரத்தின் பெயரான அழகாபுரி இந்த ஸ்தலத்திற்கு நிலைத்துவிட்டது. சங்கமேசுவரரும் அழகேசன் ஆகிவிட்டார்.

திருப்பணி வேலைகள் பெரும்பாலும் முடிந்துவிட்ட நிலை யில் வேதநாயகி அம்பாளின் சந்நிதிக்கு எதிரில் உள்ள ஒரு சுவரில் காணப்படும் மூன்று துளைகள் மட்டும் அடைக்கப் படாமல் இருக்கின்றன. கேட்டால் அதற்கு ஒரு சுவாரஸ்யமான விளக்கம் தருகிறார்கள்.

அந்தக் காலத்தில் கோயமுத்தூர் சேலம் மாவட்டங்களுக்குத் தலைநகராக பவானி இருந்திருக்கிறது.

அப்போது கலெக்டராக இருந்தவர் வில்லியம் காரோ. ஆங்கிலேயர். ஆனால் தீவிர அம்பிகை பக்தர். கோவிலுக்குள் செல்ல அனுமதி இல்லாத இவருக்கு, அம்பாளைத் தரிசிக்க தாசில்தார் ஒருவர் போட்டுத்தந்த துளைகளாம் இவை!

ஒரு நாள் இந்த வில்லி யமின் கனவில் அலங் காரபூஷணியாய் ஒரு பெண் தோன்றி இருக்கிறாள். அடுத்த க்ஷணமே வீட்டை விட்டு வெளியேறச் சொல்லி எச் சரிக்கை செய்திருக்கிறார். ஒன்றும் புரியாத நிலையில் வில்லியம் வெளியேற, அடுத்த நிமிடமே வீட்டின் கூரை இடிந்து விழுந்து சுக்கு நூறாகி யிருக்கிறது! தன்னைக் காப் பாற்றியது சாட்சாத் அந்த அம்பாள் தான் என்று வில்லியம் புல்லரித்துப் போய், அம்பாளுக்கு ஒரு தந்த தொட்டிலைக் காணிக் கையாக்கி இருக்கிறார். அந்தத் தொட்டில்தான் இன்றுகூட பள்ளி

• வேதநாயகி



• கூடல் கட்டத்தில்...



# விஸ்வரூபமாக்கு அருளிய வேதநாயகி!

யறையில் இடம் பெற்றிருக்கிறது.

சிவஸ்தலம் என்றாலும் கோயிலில் பெருமாள், தாயார், கிருஷ்ணன் சன்னதிகளும் இருக்கின்றன. கல்யாண சுப்பிரமணிய சன்னிதி வெகு பிரசித்தம். செவ்வாய் தோஷம் நீங்க சுப்பிரமணியருக்குப் பரிகாரம் செய்தால் திருமணம் விரைவில் கைகூடுகிறது என்று நம்புகிறார்கள்.

கோவிலுக்குள் இருக்கும் நந்தவனத்தில் ரோஜா செடிகள் பூத்துக் குலுங்குகின்றன. சுவாமி அர்ச்சனைக்காகவே இந்தப் பூந்தோட்டத்தை ஏற்படுத்திக் கொடுத்து பராமரிப்பும் செய்கிறது சக்தி சுகர்ஸ் நிறுவனம்.

அது மட்டும் அல்ல. இந்தத் திருப்பணியைத் தலைமை ஏற்று நடத்துபவரும் சக்தி சுகர்ஸ் உரிமையாளர் பொள்ளாச்சி என். மகாலிங்கம்தான். "மனுஷனை பணம் காசால் எல்லாம் திருப்திபடுத்த முடியாது; வயிறு ஆறச் சாப்பாடு போடணும்; அது ஒண்ணைத் தான் போதும்னு அவனால் சொல்ல முடியும்" என்று அடிக்கடி சொல்லும் என். மகாலிங்கம் கும்பாபிஷேகத்திற்கு வரும் அனைத்து பக்தர்களுக்கும் விருந்தளிக்க பிரும்மாண்ட ஏற்பாடுகள் செய்திருக்கிறாராம்!

— சுப்ர.பாலன்

# கோஷ்டி சண்டைக்கு மாறிய முட்டம்!

• லூர்துமேரி

இரவும் பகலும் உரசிக் கொள்ளும்
அந்திப் பொழுதில் வந்துவிடு..
அலைகள் உரசும் கரையில் இருப்பேன்
உயிரைத் திருப்பித் தந்துவிடு..
தத்தோம்... தகதோம்... தத்தோம்... தகதோம்



- ஜீவனுள்ள இந்தச் சினிமா பாடலை இசைத்தவர், இளையராஜா. பாறைகளில் மோதிச் சிதறும் அலைகளின் அழகை, இந்தப் பாடலுக்காகப் படம் பிடித்தவர் பாரதிராஜா. படம் பிடித்த இடம், முட்டம்!

ஆர்ப்பரிக்கும் ஆளுயர அலைகள், கால்புதைந்து, நடக்கக் கொஞ்சம் மணற்பரப்பு, குமரிக் கடல் கூறும் கதைகளைப் படுத்தபடி கேட்க நிறைய பாறைகள், இப்படி நெய்தல் நிலத்தின் ஒட்டு மொத்த அழகும் ஒரே இடத்தில் கொட்டிக் கிடக்கும் இந்தக் கடற்கரை கிராமம், நிலவியல் அமைப்புப் படி கன்யாகுமரி மாவட்டத்தின், உண்மையான தென்முனை! 'அலைகள் ஓய்வதில்லை' படத்தின் மூலம் பிரபலமான இந்தக் கிராமம், 'கடலோரக் கவிதைகள்' படத்தின் மூலம் ஆப்ரிக்கத் தமிழனுக்கும் அறிமுகமானது. மீன் வாசனையடிக்கும் இந்தக் கிராமத்தின் மண் வாசனையை நுகர்ந்து வரப் புறப்பட்டோம்.

• பாறையடி



• 125 ஆண்டு பழமையான தேவாலயம்

நாகர்கோவில் பேருந்துநிலையத்தில் முட்டம் செல்லும் பேருந்துக்காக காத்துநின்ற நமக்கு ஓர் அதிர்ச்சித் தகவல். "முட்டத்துல கலவரம்! பஸ் போகாது" ஆயினும் ஆட்டோ ஒன்றில் அங்கிருந்து பயணப்பட்ட நமக்கு, வழி நெடுகிலும் பசுமை விருந்து. தென்னையும், சவுக்கும், நெல்லும் வாழையும், மலையக மலையான தேசத்திற்கு வந்துவிட்டது போன்ற பூரிப்பு. இருபது கிலோ மீட்டர் பயணத்திற்குப் பிறகு ஊரின் எல்லையிலேயே ஆட்டோ நம்மை இறக்கிவிட்டுவிட்டு, இறக்கை கட்டிக் கொண்டது. கிடுகிடு பள்ளமாய் இறங்கிய சாலையில் நடக்கிறோம்.

மாடி வீடுகள், ஓட்டு வீடுகள், மருந்துக்கும் கீற்று குடிசைகளைக் காணோம். வீடுகளுக்குள் உருவங்கள் நகர்கின்றனவே தவிர, சாலையில் வெறுமை. கொஞ்ச நேரத்தில் கடலின் கூப்

• அமிர்தய்யா



• பாரதிராஜாதான்

பாடு நம் காதுகளை அடைகிறது. நீண்டு விரிந்து பறந்த கடல், கண்களுக்குக் காட்சி தருகிறது. கடற்கரையை ஒட்டி தேவாலயம். அங்கிருந்து கொஞ்ச தூரத்தில், கலங்கரை விளக்கம். அலைகளை ஒட்டி நீண்டுபோய்க் கொண்டிருக்கும் கடற்கரைச் சாலை, என அந்தக் கிராமத்தின் ஒட்டு மொத்த கோணமும், உயரத்திலிருந்து இறங்கிக் கொண்டிருக்கும் நம் இதயத்தைக் கொள்ளையடிக்கிறது. தேவாலயத்தை ஒட்டி இருந்த படிகளில் எண்பது வயது பாட்டி ஒருவர் அமர்ந்திருக்கிறார். அவர் லூர்துமேரி.

''ஒரு காலத்துல கட்டுமரம்தான் மீன் பிடிக்க. இப்போ மோட்டார் படகு, வல்லம்ன்னு எல்லாம் மாறிபோச்சு. மக்களும் தான். மாசம் பொறந்தா அமாவாசை வருதோ இல்லியோ, அடிதடி நடக்குதுங்கிறேன். நண்டு கொழுத்தா கரைக்கு வரும், கரைக்கு வந்துட்டா சட்டியிலே கொழம்பா கொதிக்கும்ங்கிறேன்'' - பழமொழியால் ஊர் நடப்பைப் பகிர்ந்து கொண்ட பாட்டிக்கு நன்றி சொல்லி பத்தடி நடப்பதற்குள் வீட்டிற்குள்ளிருந்து மற்றொரு குரல்.

குரல் கொடுத்துக் கூப்பிட்டவர், அறுபது வயது அமிர்தய்யா. படுக்கையிலிருந்து மெல்ல எழுந்து அமர்ந்து கொண்டு பேசத் தொடங்கினார்.

''இருபது வருஷமாக சினிமாவுக்கு மட்டுமில்லை, கோஷ்டி சண்டைக்கும் புகழ் பெற்ற ஊராய் முட்டம் மாறிப் போச்சு. வெளிநாடு சென்று, வளமோடு ஊர் திரும்பிய பலருக்கும், பஞ்சாயத்துத் தலைவர் பதவி மேல் ஏற்பட்டுள்ள பாசம்தான் இந்தக் கோஷ்டி மோதலுக்குக் காரணம். கைகலப்போடு சண்டை முடிஞ்சு போச்சுன்னா சரின்னு விட்டு விடலாம். ஆனால் பெட்ரோல் பாம், கையெறி குண்டுன்னு உயிருக்கே ஆபத்து உண்



• சகா

டாக்குறானுங்க.'' என்று மூச்சு வாங்கும் அமிர்தய்யா, ஒரு கமர்ஷியல் ஹாலிவுட் ஆக்ஷன் படம் போல நடந்த, சமீபத்திய கோஷ்டி மோதலை நேரில் பார்த்துக் கொண்டிருந்தபோது, இவருக்குப் பக்கத்தில் ஒரு பெட்ரோல் குண்டு வெடிக்க, அந்த அதிர்ச்சியில் பக்கவாதம் இவரைத் தாக்கியிருக்கிறது.

இன்று இறால், கணவாய் ஆகிய விலையுயர்ந்த கடலுணவுகளை ஏற்றுமதி செய்யும், பல பணக்கார மீனவர்கள் முட்டத்தில் இருக்க, பல தனியார் நிறுவனங்கள் இந்தக் கிராமத்தின் அருகாமையிலேயே தொழிற்சாலை அமைத்துக் கொண்டு மீனவர்களின் வேட்டையை வாங்கி, பதப்படுத்தி ஏற்றுமதி செய்கிறார்கள். ஒரு விசைப் படகு கட்டும் தொழிற்சாலையும் முட்டத்தில் பிரபலம். இந்தக் கிராமத்தில் கப்ரியேல் சபையைச் சேர்ந்த சகோதரர்கள் நடத்திவரும் மேநிலைப் பள்ளி நூற்றாண்டு கண்டிருக்கிறது. அலை கடலை ஒட்டினாற் போல், பிரமாண்டமாய் நின்று கொண்டிருக்கும், சகல புனிதர் தேவாலயம் 1875ல் டச்சுக்காரர்களால் கட்டப்பட்டிருக்கிறது. பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில், இன ஒடுக்குதல்களிலிருந்து தப்பிக்க, ஒட்டுமொத்தமாய் மதம் மாறிய பல கிராமங்களில் இதுவும் ஒன்று.

கோஷ்டி சண்டையையும் மீறி, பாறையடி, லைட்ஹவுஸ், கடற்கரைச் சாலை என்று பாரதிராஜாவின் தயவில் ஒரு சுற்றுலாத் தளமாக மாறிவிட்ட முட்டத்திற்குப் போதிய பேருந்து வசதி இல்லை. வந்துபோகும் ஒரு சில பேருந்துகளும், கலவரத்தைக் காரணம் காட்டி முடங்கிக் கொள்கின்றன. இத்தனைக்கு நடுவிலும் பாரதிராஜா இன்னும் இந்த கிராமத்தை மறக்கவில்லை.

"லைட் ஹவுஸ் பக்கத்தில் பாறையடிக்குப் போங்க, அங்கேதான் "கடல்பூக்கள்" ஷூட்டிங் நடக்கிறது" என்று வழி காட்டிய சிறுவன் முகத்தில் ஷூட்டிங் குறித்த ஆச்சர்யம் கொஞ்சமும் இல்லை. லைட்ஹவுஸிலிருந்து பாறையடி நோக்கி நடக்கிறோம். சினிமா வேன்கள், ஜெனரேட்டர் வண்டி, கேமரா, ரிப் லெக்டர் போர்டுகள், படப்பிடிப்புக் குழு சகிதம், வேடிக்கைப் பார்க்க ஆளின்றி பாரதிராஜா சுறுசுறுப்பாய்ப் படப்பிடிப்பில் ஈடுபட்டிருக்கிறார். முரளி, மனோஜ், உமா, பிரதிக்ஷா என்று பெரிய நட்சத்திர பட்டாளம் அவர் கட்டுப்பாட்டில் இயங்குகிறது. கொஞ்ச நேரத்தில் 'லஞ்ச் பிரேக்' என்று குரல் கொடுத்து விட்டு வருகிறார்.

''முட்டத்திற்கு வந்துவிட்டால் நான் இங்கேயே பிறந்து வளர்ந்தமாதிரி ஒரு சுகமான எண்ணம் என்னை ஆட்கொண்டுவிடும். இங்கிருக்கும் மக்களும் என்னை அவர்களில் ஒருவனாகவே பார்த்துப் பழகிப் போய் விட்டார்கள்'' என்று சொல்லிவிட்டு, பழைய மோட்டார் சைக்கிள் டயர் ஒன்றை உருட்டியபடி போய்க் கொண்டிருந்த ஒரு சிறுவனைப் பெயர் சொல்லி அழைக்கிறார்.

சிறுவன் பாரதிராஜாவிடம் டயரைக் கொடுத்துவிட்டுப் போய்விட, அதை நெடுந்தூரம் உருட்டிக் கொண்டே ஓடி ஒரு சிறுவனைப் போல் குதூகலிக்கிறார். எதிர்ப்படும் ஒவ்வொரு கிராமத்துவாசியின் பெயரும் பாரதிராஜாவுக்குப் பாடம். எல்லாம் சரி, செல்லுலாய்டு வெளிச்சத்தில், புகழ் பெற்றிருக்கும் இந்த கிராமத்திலிருந்து சினிமாவில் சாதித்தே தீருவது என்ற வெறியுடன் யாரேனும் சென்னைக்கு ரயிலேறி இருக்கிறார்களா? கிராம மக்கள் எல்லோரும் சகா என்ற இளைஞரை நோக்கி, சந்தோஷமாய்க் கைகாட்டுகிறார்கள். சில நாள் விடுப்பில் முட்டம் வந்திருந்த அவரை அலைகளுக்கு அருகிலேயே பிடித்தோம்.

"இங்கே 'அலைகள் ஓய்வதில்லை' படம் எடுத்தப்போ எனக்குப் பன்னிரண்டு வயது. என்ன காரணம் என்று சொல்ல முடியவில்லை. ப்ளஸ் டூ முடித்தபிறகு சினிமாதான் என்று முடிவு செய்துவிட்டேன்'' என்று சொல்லும் சகா, இயக்குனர் ஜி.எம். குமாரிடம், உதவியாளராகச் சேர்ந்து பின்னர் தெலுங்குப் பட இயக்குனர் உபேந்திராவிடம் ஆறுவருடமாகப் பணியாற்றி வந்திருக்கிறார். 'இப்போது தனியே படம் இயக்கும் முயற்சியில் இறங்கிவிட்டேன்' என்கிறார் முட்டத்திலிருந்து வந்திருக்கும் இந்த சினிமாக்காரர்.

சகாவுக்கு வாழ்த்துக்கூறி விடைபெற்ற பிறகு நாம் எவ்வளவு தேடியும், முட்டம் ரயில் நிலையத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை. ''கடலோரக் கவிதைகள்'' படத்தில் வரும் சோகம் சூழ்ந்த முட்டம் ரயில் நிலையம் அப்பாவின் படைப்புத் துறைக்குச் சொந்தமானது. இந்திய ரயில்வே துறைக்கு அல்ல'' என்று தோள்தொட்டு மனோஜ் நம்மை தேற்றியபிறகுதான் முட்டத்திலிருந்து மூட்டையைக் கட்டினோம்!

**— ஆர். சி. ஜெயந்தன்**

படங்கள் : **யோகா, வெங்கடேஷ்**

"அமெரிக்கால இருக்கற என் பையன் கிட்ட இருந்து தினம் ஒரு போன் வரும், எனக்கு?"

"அடடே! அவ்வளவு ஃபோனையும் என்ன செய்வீங்க?"

- பா. ஜெயக்குமார், வந்தவாசி



பாதுகாப்பான முதலீடு - நிலையான வருமானம்

# பவர்ஃபைனான்ஸ்

## தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்

நடத்தும்

**உள்ளூர் காசோலை ஏற்றுக்கொள்ளப்படும்**

## டெபாசிட் திரட்டும் முகாம்

**டெல்லி**

**டெல்லி தமிழ் சங்கம்**

**தமிழ் சங்கம் மார்க், செக்டார்-5, R.K.புரம்,**
**புதுடெல்லி - 110 022.**

**தொலைபேசி : 6193964 / 6193966**

**நாள் : 21, 22 & 23 செப்டம்பர், 2000**

**நேரம் : காலை 10 மணி முதல் மாலை 7 மணி வரை**

| 12.12% | 16.34% |
|---|---|
| 12 மாதங்களுக்கு கூட்டு வட்டி 10.59%.<br>24 மாதங்களுக்கு காலாண்டு கூட்டு வட்டி 11.10%<br>36, 48, 60 மாதங்களுக்கு மாதத்திற்கு 12.00%, காலாண்டிற்கு 12.12%. | 60 மாதங்களுக்கு<br>(மாதாந்திர கூட்டுவட்டி<br>ஆண்டிற்கு 12.00%) |



**விண்ணப்ப படிவங்கள் கீழ்க்கண்ட கோ-ஆப்டெக்ஸ் விற்பனை நிலையங்களிலும் கிடைக்கும் :**

● **பாண்டிச்சேரி** : 26, ஜவஹர்லால் நேரு தெரு. ● **பெங்களூர்** : 109, காந்தி பஜார், பசவன்குடி; 315, கே. காமராஜ் ரோடு; ஹோட்டல் மயூரா பில்டிங், டேங்க் பண்ட் ரோடு; 30, 9வது மெயின் ரோடு, ஜெயநகர் V பிளாக், ராஜாஜி நகர்; 2947, ராஜாஜி நகர் II ஸ்டேஜ். ● **மும்பை** : மகாலக்ஷ்மி, 64, டாக்டர் டி.என். ரோடு; 78, ஷிராபாக், M.D.S. மார்க், செம்பூர்; 356, பந்தர்கேஷ் ரோடு, மாதுங்கா; 2, வால்சந்த் ஹீராசந்த் மார்க், ஃபோர்ட்; ● **அகமதாபாத்** : பஞ்சராபோல், அம்பாவாடி. ● **எர்ணாகுளம்** : பள்ளிமுக்கு; சண்முகம் ரோடு; ● **திருவனந்தபுரம்** : கிழக்கு ஃபோர்ட்; M.G. ரோடு ● **ஹைதராபாத்** : அபிட்ஸ் ரோடு; சார்மினார் X ரோடு; நாம்பள்ளி. ● **செகந்திராபாத்** : ஸ்டேஷன் ரோடு ● **புது தில்லி** : கரோல்பாக்; இர்வின் ரோடு; நேரு பிளேஸ்; ஜனக்புரி; 22-பி, கான் மார்க்கெட்.

*மேலும் விபரங்களுக்கு தொடர்பு கொள்ளவும் :*




**தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும்**
**அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம் (பவர்ஃபின்)**

(தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்)

பதிவு அலுவலகம் : எண் 84, டி.டி.கே சாலை, ஆழ்வார்ப்பேட்டை, சென்னை - 600 018.
தொலைபேசி : 4997689, 4995648, ஃபேக்ஸ் : 044-4982894.

28-9-99 தேதியிட்ட எகனாமிக் டைம்ஸ் இதழில் வெளியிடப்பட்ட முதலீடு விளம்பரத்தின் தொடர்ச்சியாக இந்த விளம்பரம் வெளியிடப்படுகிறது.

"Also available on the Internet" www.tn.gov.in www.chennaionline.com www.aaraamthinai.com www.southindia.com

# ஐயாயிரத்தில்

**பணமும் புகழும் கொடுக்கும் வெற்றிப் படங்களை எடுத்து, சேனல்களில் பேட்டி கொடுக்கும் பொற்காலத்துக்காகப் பொறுத்திருக்கும் ஐயாயிரம் இணைத் துணை இயக்குனர்கள் சென்னையில் இருக்கிறார்கள் என்கிறது மார்க் சந்தை ஆய்வு நிறுவனம். அவர்களில் சிலரைப் பார்த்து வரப் புறப்பட்டோம்.**

## இருபத்து நாளும் தெரிந்தபின்...

லியாகத் அலிகான், களஞ்சியம் ஆகிய இயக்குனர்களிடம் இணை இயக்குனராகப் பணியாற்றியிருக்கும் விஷ்வா, 'ராஜ்கபூர் படங்கள், தமிழில் ஸ்ரீதர், கே. எஸ். கோபால கிருஷ்ணன் படைப்புகளால் பாதிக்கப் பட்டேன்' என்கிறார். இன்று மட்டுமல்ல, என்றைக்குமே இவர்களின் சினிமா மொழியைப் பின்பற்றினால் வெற்றி நிச்சயம் என்று சொல்லும் இவர், சென்னை வந்ததும் கொரியர் நிறுவனத்தில் வேலை செய்திருக்கிறார். அங்கிருந்து கொண்டே சினிமாவில் இருபத்து நான்கு யூனிட்டுகள் உள்ளன என்றும், ஒவ்வொரு யூனிட்டும் எப்படிச் செயல்படுகிறது என்றும் தெரிந்து கொண்டு பிறகுதான் வாய்ப்புத் தேடினாராம். முதன் முதலில் ஒரு இயக்குனரைச் சந்தித்து ஒரு கதை சொல்ல, அது இயக்குனருக்குப் பிடித்துப் போய் வேலைக்குச் சேர்த்துக் கொண்டிருக்கிறார். ஆனாலும் இவருக்குப் பயம். காரணம் ஒரு ஹிந்திப் படத்தின் கதையை இவர் சொல்லியிருக்கிறார். ஆனால் கடைசி வரை இயக்குனருக்கு அதுபற்றி தெரியவில்லையாம். இங்கு எல்லோரும் ஆங்கிலப் படத்தைப் பார்த்தே காப்பி அடிக்கிறார்கள் என்கிறார். "உதவி இயக்குனர் என்றால் பட்டினி கிடக்க வேண்டும். எடுபிடி வேலை செய்ய வேண்டும் என்று சொல்பவர்களைப் பார்த்து எனக்குப் பயங்கர கோபம் வருகிறது. பிலிம் சேம்பரிலிருந்து இவர்களை லெட்டர் போட்டுக் கூப்பிட்டு அனுப்பியா இவர்கள் சினிமாவுக்கு வந்தார்கள்? இவர்கள் வெற்றி பெறத்தானே போராடுகிறார்கள். எந்தத் தொழிலில் போராட்டம் இல்லை" என்று கொதிக்கும் விஷ்வா, தமிழகத்தில் முப்பதுகளில் நடந்த ஒரு கதைக்கு அஜீத்தை வைத்து ஒரு பீரியட் படம் இயக்கப் போகிறாராம். அதற்காக கால்ஷீட் கேட்டு அலைந்து கொண்டிருக்கிறாராம்.

## இறக்கை முளைத்து...

புதுவை இசைக் கல்லூரியில் ஆர்மோனியம், சிதார் இரண்டையும் படித்துக் கொண்டிருந்த புகழேந்தி, கடந்த பத்து வருடங்களுக்கு முன்பே சென்னை வந்து டிஎஃப்டி ஆக்டிங் படித்து விட்டு உதவி இயக்குனராகச் சேர்ந்திருக்கிறார். "ஒரு படமோ, இயக்குனரோ என்னை பாதித்து நான் சினிமாவுக்கு வரவில்லை. நிஜ வாழ்க்கையில் நடந்த, நடக்கும் சம்பவங்கள் ஒவ்வொன்றிலும் காவியத் தன்மை இருப்பதாக எனக்குத் தோன்றியதால், அவற்றைச் சிறுகதைகளாக எழுதினேன். ஏதோ ஒரு பெரிய சாதனை செய்து விட்ட திருப்தி ஏற்பட்டது. இந்தச் சிறுகதைகளை சினிமாவுக்கு எடுத்துச் சென்றால் அதிக மக்களைச் சென்றடையும் என்று நினைத்தே சினிமாவைத் தேர்வு செய்தேன்" என்று சொல்லும் இவர், இயக்குனர்கள் எஸ்.டி. சபாபதி, லிவிங்ஸ்டன் ஆகியோரிடம் எட்டரை ஆண்டுகள் பணியாற்றியிருக்கிறார். "உனக்கு இறக்கை முளைத்து விட்டது. இனி நீ தனியாகச் சென்று படத்தை இயக்கலாம்" என்று லிவிங்ஸ்டன் ஆசி வழங்கியதால், தனியே கதை சொல்லி பட வாய்ப்பு தேடிக் கொண்டிருக்கும் புகழேந்திக்கு முப்பத்து மூன்று வயது. ஒரு தயாரிப்பாளரிடம் கதை சொல்வதற்காக இவர் கொடைக்கானல் சென்று விட, இவரது அம்மா இறந்த செய்தி இரண்டு நாட்களுக்குப் பிறகே தெரிந்திருக்கிறது. அவசர அவசரமாக ஊருக்குச் சென்றால், மூன்றாவது நாளாக அம்மாவின் உடலைப் பாதுகாத்து வைத்திருக்கிறார்கள்! "வெற்றிப் படம் எடுத்த பிறகுதான் திருமணம்" என்கிறார் உறுதியுடன்.

## நினைக்காதது நடந்தது!

சினிமாவில் தொடர்பு வேண்டும் என்



• விஷ்வா



• புகழேந்தி



• சரவணன்



• அன்பழகன்



• சுசி

# ஐவர்!

பதற்காகவே சென்னை பச்சையப்பன் கல்லூரியில் எம்.பில் படிப்பில் சேர்ந்து விட்டு கோடம்பாக்கத்தில் சுற்றிவரும் சரவணன் தஞ்சைக்காரர். பாலுமகேந்திராவின் மூன்றாம் பிறை பெரிய பாதிப்பை ஏற்படுத்த, அவரிடமே வாய்ப்பு கிடைக்கும் என்று நினைத்துப் பார்க்கவில்லையாம். ஆனாலும் பாலுமகேந்திரா படம் எதுவும் எடுக்காததால் பணம் கிடைக்கிறதே என்று டீ.வி. சீரியல் ஒன்றுக்கு வசனம் எழுதுகிறார். கிடைக்கிற பணத்தில் பெரும் பகுதியைப் புத்தகம் வாங்கி அதை முழுக்க அடுக்கி வைத்திருக்கிறார். "திரைக்கதை எழுதுவதில் எத்தனை திறமையிருந்தாலும், தொழில்நுட்பம் தெரிந்தால்தான் இயக்குனராக முடியும்... அதைத்தான் இப்போது கற்றுக் கொண்டிருக்கிறேன்" என்கிறார்.

## போராட்டமல்ல; தவம்!

ஜெயங்கொண்டம் அருகேயுள்ள மருத்தூர்தான் அன்பழகனுக்குச் சொந்த ஊர். அம்மா அப்பாவின் சந்தோஷத்துக்காக பி.எஸ்ஸி., பி.எட். முடித்து ஆசிரியர் ஆவேன் என்று வாக்கு கொடுத்து விட்டு, தரமணி திரைப்படக் கல்லூரியில் டிஎப்டி இயக்கம் சேர்ந்து படித்திருக்கிறார்!

''திரைப்படக் கல்லூரியில் படித்த மாணவர்களுக்கு உடன் வாய்ப்பு கிடைத்து விடும் என்று சொல்வதையெல்லாம் நான் ஏற்றுக் கொள்ள முடியாது. தொடக்கத்தில் எல்லா இயக்குனர்களையும் தொடர்பு கொண்டு வாய்ப்புக் கேட்டேன். மறுத்து விட்டார்கள். ஆனால் அகத்தியனை நான் சந்தித்த முதல் நாளே என்னை உதவியாளராகச் சேர்த்துக் கொண்டார். சினிமாவில் வெற்றி பெற காத்திருப்பது அல்லது உழைப்பது ஒரு தவம். வரம் கிடைக்கிற வரை காத்திருக்க வேண்டும்..."

இந்தத் தவத்தை போராட்டம், பட்டினி என்று சொல்லி அவமானப்படுத்துவதில் இவருக்கு உடன்பாடு இல்லையாம்.

## கல்யாண சமையல் கைகொடுக்கும்

பழனியை அடுத்த அமரபூண்டி கிராமத்தைச் சேர்ந்த சுசிக்கு இருபது வயதுதான். பிளஸ்டூ படிக்கிற போது வகுப்பை கட் அடித்து விட்டுப் பார்த்த படங்கள் கோடம்பாக்கத்துக்கு வழிகாட்டியிருக்கின்றன. ஐந்து வருடங்களுக்கு முன்பு சென்னை வந்து விட்டாலும், உறவினர்களோ, நண்பர்களோ இல்லாத நிலையில் ஊருக்குத் திரும்பிச் சென்று, அங்கு நீண்ட நாள் இருக்க முடியாமல் திரும்பவும் சென்னை வந்து விட்டார். தற்போது இயக்குனர் சபாபதியிடம் உதவியாளராக வாய்ப்புக் கிடைத்து விட்டதை சந்தோஷமாகக் கூறும் இவர், "இடைவெளி கிடைக்கும் போது கல்யாண சமையல் வேலைகளுக்குச் சென்று விடுவேன்... என்னைப் போன்ற பல பேரை கல்யாண மண்டபங்கள் காப்பாற்றுகின்றன. எனவே எனது முதல் படத்தில் "சென்னையில் உள்ள கல்யாண மண்டபங்களுக்கு நன்றி என்று டைட்டிலில் போடுவேன்" என்கிறார் இளம் உதவி இயக்குனர் சுசி.

**- விஷுவல்தாசன்**

படங்கள் : **வெங்கடேஷ்**



# நம்மவர்கள்

**பா**கிஸ்தானிலிருந்து இதய அறுவைச் சிகிச்சைக்காக ஒரு குழந்தை சென்னையில் டாக்டர் செரியனிடம் வந்து குணமாகித் திரும்பிச் சென்ற செய்தி, இயக்குநர் மாலியின் கற்பனையை நாடக வடிவமாக்கத் தூண்டியிருக்கிறது. அதன் விளைவுதான் 'நம்மவர்கள்.'

இது ஒரு பாதி என்றால், மீதிக்கு சமீபத்தில் பாகிஸ்தான் இந்தியாவில் தீவிரவாதச் செயல்களை ஊக்குவித்து வருவதை வசமாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்.

பாகிஸ்தானிலிருந்து இப்ராஹிம் அகமது குழந்தை சலீமாவின் சிகிச்சைக்காகச் சென்னை வர நிறையப் பணம் தேவைப்படுகிறது. இதைப் பயன்படுத்திக் கொண்டு தீவிரவாதி சக்லைன் பணம் தர முன்வருகிறான். அதற்குப் பிரதியாக, டிசம்பர் ஆறு அன்று இப்ராஹிம் ரயிலில் வெடிகுண்டு வைத்துத் தகர்க்க வேண்டும்!

ஆனால், சலீமாவுக்குச் சிகிச்சை அளிக்கும் டாக்டர் சாருமதி அந்தக் குழந்தை மீது பொழியும் பாசம்; தன் மீது அந்த டாக்டரின் குடும்பம் மொத்தமும் காண்பிக்கும் பரிவு. எல்லாம் இப்ராஹிம் மனசையே மாற்றிவிடுகிறது. டாக்டரின் குழந்தை ஹரீஷ் கடத்தப்பட, இப்ராஹிம் மீட்க உதவுவதோடு, விபத்தும் தவிர்க்கப்படுகிறது.

பாகிஸ்தான் தீவிரவாதியின் இந்திய ஏஜண்டு பேகம் வசனத்திலும், சக்லைன் பேகம் வசனத்திலும் இந்தியா மீது குற்றச்சாட்டுக்கள் வெளிப்பட, இங்கே இந்து - முஸ்லிம் குடும்பங்களிடையே உள்ள ஒற்றுமையையும் மிகைப்படுத்தாமல் காண்பித்திருக்கிறார் மாலி.

குழந்தை சலீமாவின் பிறந்த நாளை, டாக்டர் சாருமதி குடும்பத்தினர் பாட்டுப் பாடிக் கொண்டாடுவதைக் கொஞ்சம் ஓவர் என்று சொல்லலாம். ஆனால் நடிகர்கள் இயல்பாக நடித்திருப்பதும், சர்ச்சைக்குரிய கதைக் கருவை வெகு கவனமாகக் கையாண்டிருப்பதும் நாடகத்துக்குப் ப்ளஸ் பாயிண்டுகள்!

- **சித்தார்த்**

இலேசாக மழை தூற ஆரம்பித்திருந்தது. மாலை நேர குளிர்கால நீலகிரி மலைகள் குளிருக்கு வெண்பனிப்போர்வையைப் போர்த்திக் கொள்ள ஆரம்பித்திருந்தன. சாலையில் மூடுபனி கவிந்திருந்தது. என் பச்சை நிற ஜிப்ஸியை உருட்டிக் கொண்டு "கல்லட்டி" கிராமத்தைக் கடந்து கொண்டிருந்தேன். வண்டியின் "வைப்பர்கள்" சிதறிய மழைத் துளிகளின்மீது ஒற்றுமை உழைப்பை நடத்திக் கொண்டிருந்தன. உல்லனின் கதகதப்பு ஒரு உற்சாகத்தைக் கொடுத்தது.

நான் மூணார் ரேஞ்சிலிருந்து ஊட்டி ரேஞ்சுக்கு வந்து இன்றோடு இருபது நாள். என்னவோ, கொடைக்கானல் மலைகளைவிட இந்த நீலமலைகள் மனதுக்குப் பிடித்திருந்தன.

மாயாருக்குப் போய்க் கொண்டிருந்தேன். கல்லட்டி தாண்டி மாயார் வரை இறக்கம்தான். பாதி வழியில் அந்தப் பாலத்தருகே சோதனைச்சாவடி இருந்தது. "செக்போஸ்ட்" கருப்பசாமி ஓடிவந்து தடுப்பைத் திறந்துவிட்டு, ஒரு சல்யூட் வைத்தான்.

வண்டியைக் கிளப்பி மெதுவாய் இறங்க ஆரம்பித்தேன். மாலைநேரம். மூடுபனி. ஹெட்லைட்டை ஆன் செய்தேன்.

திடீரென அந்த ஆட்டுமந்தை எதிர்ப்பட்டது. மேலேறி வந்து கொண்டிருந்த மந்தையின் கடைசியில் அந்தச் சிறுமி தெரிந்தாள். கையில்





போட்டிக் கதை – 3

# அந்த புசுபுசு ஆட்டுக்குட்டி

நீண்ட கழியும் மற்றொரு கையில் அணைத்தவாறே அவள் பிடித்திருந்த அந்த புசுபுசு ஆட்டுக்குட்டியும் மூடுபனியில் இலேசாய்த் தெரிந்தன. வண்டியைப் பார்த்தவுடன் அவள் ரோட்டுக்கு ஓடிவந்து ஆடுகளை ஓரம்கட்ட ஆரம்பித்தான்.

அப்பொழுதுதான் அது நிகழ்ந்தது. சட்டென அவள் கையில் பிடித்திருந்த அந்த ஆட்டுக்குட்டி துள்ளித் தரையில் குதித்து நேரெதிரே வண்டியை நோக்கி ஓடிவர ஆரம்பித்தது. மிகுந்த முயற்சி செய்து வண்டியை நிறுத்துவதற்குள் ஆட்டுக்குட்டி வண்டியில் மோதி தூக்கி எறியப்பட்டு அந்த வளைவு எச்சரிக்கை போர்டில் மோதி, பட்டு கிழே விழுந்து துடிக்க ஆரம்பித்தது. இத்தனையும் சில நொடிகளில்.

வண்டியை நிறுத்திவிட்டு ஆட்டின் அருகே ஓடினேன். மஞ்சள் நிற போர்டில் சிவப்புநிற ரத்தம் மழையில் கரைந்து ஆட்டின்மீது விழுந்தது. "செல்வா" என்று கத்திக்கொண்டே ஓடிவந்தாள் அந்தச் சிறுமி. பத்து வயது இருக்கலாம்–

இவளை அடிக்கடி நான் வனத்துள் பார்த்திருக் கிறேன். வாட்சருடன் வலம் வரும்போதெல்லாம் இவள் கண்ணில் படுவாள். என்னைப் பார்த்து பயத்துடன் ஆடுகளை வேறுபக்கம் ஓட்டிப்போய் விடுவாள். அளவுக்குப் பெரிதான ஒரு ஸ்வெட்டரை மாட்டியிருப்பாள். தலைநிறைய கொத்தாக ஏதோ



**ராஜ் செந்தில்ராகவன்**
**(அரிமுக எழுத்தாளர்)**

ஒரு மஞ்சள்நிற காட்டுப் பூவைச் சூடியிருப்பாள்.

ஓடிவந்தவள் கழியால் என்னை ஒரு அடி அடித்துவிட்டு, கீழே கிடந்த ஆட்டைத் தூக்கி மடியில் போட்டுக் கொண்டாள். "செல்லா, செல்லா" என்று கத்தினாள். அடிப்பட்ட ஆட்டின் தலைக்காயத்தை அழுத்திப் பிடித்துக் கொண்டு அழுதாள்.

மழையும், பனியும் சுழன்று சுழன்று அடித்தன. நான் முழுவதும் நனைந்துவிட்டேன். என்ன செய்வது இந்தப் பெண்ணுக்கு?

"ஏய் குத்தா!" ஜீப்பின் பின்னாலிருந்து குரல்கேட்டது. ஹெட்லேம்ப் வெளிச்சம் கண்ணைக் கூசியது. அவன் வண்டிக்கு முன்னே வந்தான். நாற்பது வயதிருக்கலாம். மழையை பற்றிய பிரக்ஞை இல்லாமல் இருந்தான். "இப்படிப் பண்ணிட்டீங்களே சார், அவளோட செல்ல குட்டி சார் அது" என்றான் அவன். அவனைப் பார்த்ததும் அவனிடம் ஓடி வந்தவள், ஏதோ மலை மொழியில் என்னைத் திட்டினாள். "உஷ்.... சாரு பாரஸ்ட் ஆபீசரு" என்றான்.

நான் வண்டியில் ஏறி உட்கார்ந்தேன். பர்ஸிலிருந்து ஐந்நூறு ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்து அவனிடம் கொடுத்தேன். முன்னால் ஓடிப்போய் ஹெட்லேம்ப் வெளிச்சத்தில் ஒருமுறை பார்த்தான். பின் ஓடிப்போய் ஆட்டுக்குட்டியைத் தூக்கி வந்து ஜீப்பின் பின்னால் போட்டான். அந்தச் சிறுமி தேம்பிக் கொண்டிருந்தாள். நான் வண்டியை எடுத்தவுடன் பின்னாலேயே அவள் ஓடிவர முயற்சி செய்வதும், அவன் பிடித்து நிறுத்துவதும் தெரிந்தது.

சற்று தூரம் சென்று, மெதுவாக கீழே இறங்கி ஆட்டுக்குட்டியைப் பார்த்தேன். கால், கையை அசைத்தது. கண்ணைத் திறந்து பார்த்தது. அடடா! இந்த ஆட்டுக் குட்டி இறந்துவிட்டதாக அல்லவா நினைத்துக் கொண்டிருந்தேன். வண்டியை திருப்பி ஊட்டி விரைந்தேன். HPF தாண்டி இந்து நகரில் ஒரு கால்நடை மருத்துவர் இருந்தார். அவரின் பெயர்ப் பலகையை வழியில் பார்த்திருக்கிறேன்.

ஏனோ இறந்துபோன என் செல்ல நாய் "சீசரின்" ஞாபகம் வந்தது. வீட்டிற்குள்ளே என்னுடனே எங்குபோனாலும் ஓடி பின்னாலே வரும். எங்காவது வெளியூர் போய்விட்டு, சில நாட்கள் கழித்து வீட்டிற்குத் திரும்பும்போது, அதற்கு சந்தோஷத்தைப் பார்க்க வேண்டுமே! மேலே விழுந்து விழுந்து புரளும். ஆனந்தமாய் ஊளையிடும். இறந்துபோன என் மனைவி எனக்களித்த பரிசு "சீசர்". ஒரு நாள் சீசரும் இறந்து போனது. அதற்குப் பின்னர்தான் வீட்டில் நமக்காக காத்திருக்க ஒரு ஜீவன் கூட இல்லையென்றால் எவ்வளவு கஷ்டமாயிருக்கும் என்று தெரிந்தது. இப்போதெல்லாம் வீட்டிற்குப் போவதே பிடிப்பதில்லை.

எனக்கு சீசர் என்றால் அந்தச் சிறுமிக்கு "செல்லா". இந்தக் குட்டி, புசுபுசு ஆட்டுக் குட்டி!

**டா**க்டரிடம் ஆட்டுக்குட்டியைக் கொடுத்தேன். அவசரமாய் உள்ளே தூக்கிக் கொண்டு போனார். சிறிதுநேரம் கழித்து வெளியே வந்தார். "உயிருக்கு ஒன்னும் ஆபத்தில்ல, ரிப் ப்ராக்சர் ஆயிருக்கு, இரண்டு வாரம் ஆகும் சரியாக" என்றார். எனக்கு மனத்துள் சின்ன சந்தோஷம் துளிர்த்தது. அந்தச் சிறுமிக்குத் திரும்ப ஆட்டைத் தரப்போகிறேன் அல்லவா?

பின்னர் அந்த நிகழ்ச்சியை நான் முழுவதும் மறந்துபோய் விட்டேன். இரண்டு வாரங்கள் கழித்து ஊட்டிக்குப் பெட்ரோல் போட வந்தேன். சட்டென ஆட்டின் ஞாபகம் வந்தது.

டாக்டர், வீட்டுக்கு வெளியே தோட்டத்தில் புற்களைச் செதுக்கிக் கொண்டிருந்தார். செதுக்கப்பட்ட புல்லை அந்த ஆட்டுக் குட்டி மேய்ந்து கொண்டிருந்தது. கட்டப் பட்டிருந்த நாய் அதை வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்தது. என்னைப் பார்த்ததும், கத்திரியை அப்படியே போட்டுவிட்டு ஆட்டைப்பிடித்துக் கொண்டு என்னிடம் வந்தார். "இப்போ பரவாயில்ல" என்றார்.

ஆட்டுக்குட்டியைப் பார்த்தேன். ஆங்காங்கே முடிகள் நீக்கப்பட்டு ஏறத்தாழ ஆறிய புண்கள் தெரிந்தன. அவலட்சணமாய் இருந்தது அது.

நான்கொடுத்த பணத்தை எண்ணிப்

---

***"கூட்டணி தலைவருக்குத் தடபுடலாக விருந்து தரப்படுகிறதே... என்ன விஷயம்?"***

***"இது உணவு பூர்வமான கூட்டணியாம்!"***

— எஸ். மோகன்



பார்க்காமல் பாக்கெட்டில் போட்டுக் கொண்டார். "என்ன வைத்தியம் பார்த்து என்னப் பண்ண? ஒருநாள் வயித்துக்குள்ள போறதுதானே?" என்று சொல்லிவிட்டு வினோதமாய்ச் சிரித்தார்.

**ம**ழை கவியத் தொடங்கியிருந் தது. கல்லட்டி செக்போஸ்ட் பாலத்தருகே வண்டியை நிறுத்தி அந்தச் சிறுமிக்காக காத்திருந்தேன். பாலத்தின் கீழ் தண்ணீர் சலசல வென ஓடிக் கொண்டிருந்தது. சில் வண்டு களின் மெல்லிய ஓசை கேட்டது. யூகலிப்டஸும், வேறு சில மரங்களும் வழங் கும் அந்த "வன வாசனை" சுகந்தமாய் மூக்கில் பட்டது. வானம் தெளிவாயிருந்தது.

தூரத்தில் மலைச்சரிவில் இருந்து ஆடுகள் ரோட்டில் குதித்து குதித்து இறங்கிக் கொண்டிருந்தன. பின்னால் அந்தச் சிறுமி தெரிந்தாள். கையில் கழியுடனும், கூந்தலில் அந்த மஞ்சள் நிற காட்டுப் பூக்களுடனும்.

வண்டியருகே வந்தவள் என்னையும், ஜீப்பையும் மாறிமாறி பார்த்தாள். "என்னா சார்! ஆட்டை வெட்டித் துன்னிட்டியா?" என்றாள். நான் பின்கதவைத் திறந்து ஆட் டுக் குட்டியை எடுத்து வெளியில்விட்டேன்.

அவள் முகத்தில் சந்தோஷத்தை எதிர் பார்த்தேன். ஆனால் "என்னா இப்படி சொட்ட சொட்டையா இருக்குது?" என்ற வாறே ஒதுங்கிய ஆடுகளைக் கழியில் தட்டி கும்பலில் சேர்த்தாள்.

அந்த ஆட்டைத் தூக்கி அவள் கையில் கொடுத்தேன். "இது தான் உன் செல்ல ஆட்டுக்குட்டிம்மா" என்றேன். அவள் வாங்கிக் கொள்ளவில்லை. "கீழ வுட்ரு" என்றவள் சொன்னாள், "இது என் செல்ல ஆட்டுக்குட்டியில்ல. அதோ அங்க இருக்கே அதுதான்."

கும்பலில் இருந்த இன்னொரு குட்டி ஆட்டை, பிறந்து சில நாட்கள் தான் ஆயி ருக்கும், அதை தூக்கித் தோளில் போட்டுக் கொண்டாள்.

நான் இந்த ஆட்டுக்குட்டியைக் கீழே விட்டேன். அது குதூகலத்துடன் கூட்டத்தை நோக்கி ஓடியது. அவளோ, அதைக் கழியால் தட்டி, தட்டி கும்பலில் சேர்த்தபடியே, ஆடுகளை ஓட்டிக் கொண்டு அந்த மேல் வளைவில் மறைந்து போனாள். மூடுபனி அடர்த்தியாக கவியத் தொடங்கியது. "டைம் என்னா சார்?" என்று கேட்ட செக்போஸ்ட் கருப்பசாமியிடம் "காலம்ங்கிறது ஒரு மோச மான விஷயம் கருப்பசாமி" என்றேன் என்னை வினோதமாகப் பார்த்தான் கருப்பசாமி. ⭘

ரெடியாகிறது

# பறக்கும் சொர்க்கம்!




வானில் ஒரு சொர்க்கம், பறவை போல பறக்கப் போகிறது. அந்த விமானப் பறவைக்கு A3XX என்று பெயர். இரண்டு அடுக்கு கொண்ட, இந்த டபுள் டெக்கர் விமானத்தை உற்பத்தி செய்யப்போகும் நிறுவனம் உலகப் புகழ் பெற்ற ஏர் பஸ் இண்டஸ்டிரீஸ்தான். இப்போது வானில் பறந்து கொண்டிருக்கும் மிகப் பெரிய விமானத்தைவிட இந்த ரக விமானம் பிரும்மாண்டமானது.

பயணிகள் சௌகரியம், பாதுகாப்பு, பொருளாதார ரீதியில் சிக்கனம் என்று பல விதங்களிலும் சிறந்து விளங்கும்படியாக வடிவமைப்பு, கட்டுமானம் ஆகியவற்றில் அதீத கவனம் கொண்டு உருவாக்கப்பட்டு வரும் இந்த விமானத்தில் ஐநூற்று ஐம்பத்து ஐந்து இருக்கைகள் இருக்கும். இப்போதுள்ள பெரிய ரக விமானங்களைவிட நாற்பத்து மூன்று சதவீதம் அதிக தரை பரப்பளவு கொண்டிருந்தாலும், இருக்கைகள் எண்ணிக்கையைப் பொருத்தவரை முப்பத்து ஐந்து சதவீதம்தான் அதிகம். இதனால், ஒவ்வொரு பயணியும் அமரும் இருக்கைகள் அதிக பட்ச சௌகரியத்துடன் வடிவமைக்கப்பட்டுள்ளது.

விமான ஓட்டி மற்றும் ஊழியர்கள் ஓய்வு அறை, படுக்கை அறை, வசதியான டாய்லெட்கள், பயணிகள் விமானப் பயணத்தின் போதே, தமது பிசினஸ் சம்பந்தப்பட்ட வேலைகளைக் கவனிப்பதற்கு உதவியாக பிசினஸ் சென்டர், பார், லைப்ரரி, குழந்தைகளைக் கவனித்துக் கொள்ள ஒரு மினி காப்பகம் இவை அனைத்தும் இந்த விமானத்துக்குள்ளே உண்டு.

விமான ஓட்டியின் அறை லேட்டஸ்ட் தொழில் நுட்பங்கள் கொண்டதாகவும், விமானம் ஓட்டும்போது துளியும் அசௌகரியமின்றியும் இருக்கும். தகவல் தொடர்பு சாதனங்களில் லேட்டஸ்ட் வகை இவ்விமானங்களில் பொருத்தப்பட்டிருக்கும்.

பல்வேறு முன்னணி விமானக் கம்பெனிகளின் விமானங்களை ஓட்டும் பைலட்களின் நுணுக்கமான ஆலோசனைகளைக் கேட்டு, அவை விமான வடிவமைப்பில் சேர்க்கப் பட்டுள்ளதால், விமான ஓட்டிகள் மத்தியில் இந்தப் புதிய விமானம் பற்றிய எதிர்பார்ப்பு ஏற்பட்டுள்ளது.

பெரிய விமானம் என்றால், அதை இயக்க ஆகும் செலவும் அதிகமாக இருக்கும் என்கிற தத்துவத்தையும் உடைத்து, வழக்கமான இயக்கச் செலவினைவிட, புதியரக விமானத்தின் ஆபரேடிங் காஸ்ட் பத்து முதல் பதினைந்து சதவீதம் குறைவாக இருக்கும் என்பது குறிப்பிடத்தக்கது.

இந்தப் புதிய ரக விமானத்தின் விலை 260 மில்லியன் அமெரிக்க டாலர். 2004ம் ஆண்டில் இவை வானில் பறக்கத் தொடங்கும்!

தொகுப்பு: **கௌதம்**









2000 செப்டெம்பர் 10
விக்ரம ஆவணி 25
மலர் : 59
இதழ் : 6

# கல்கி



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.

## போகாத ஊருக்குத் தப்பாக வழிசொல்லும் த.மா.கா

காமராஜ், அண்ணா, எம்.ஜி.ஆர் ஆட்சிகளைத் தமிழகத்தில் நிறுவ பாடுபடப் போகிறதாம் த.மா.கா. "நாங்கள் ராஜராஜ சோழன் ஆட்சியைக் கொண்டு வருவோம்" என்று சொல்லாததுதான் பாக்கி!

சில தினங்களுக்கு முன்புதான் அ.தி.மு.க தலைவி ஜெயலலிதா, பொதுநிகழ்ச்சி மேடை ஒன்றில், த.மா.கா முன்னணி தலைவர்களின் முன்னிலையிலேயே அக்கட்சியை ஓரங்கட்டினார். கூட்டணி ஆட்சியெல்லாம் ஒத்து வராத காரியம் என்று திட்டவட்டமாகச் சொல்லிவிட்டார். த.மா.கா, அ.தி.மு.க.வுடன் கூட்டணி கொண்டாலும் ஆட்சியில் அக் கட்சிக்குப் பங்கு கிடைக்காது என்பதைத் தெளிவுபடுத்திவிட்டார்.

ஆனால், சிதம்பரத்தில் நடந்த த.மா.கா செயற்குழுக் கூட்டமோ, ஆட்சியில் பங்கு உத்தரவாதம் செய்யப்பட வேண்டும் என்று தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறது!

போகாத ஊருக்குத் தப்பாக வழி சொல்லும் இந்த வினோத விளையாட்டை ப. சிதம்பரம் புறக்கணித்ததில் வியப்பில்லை.




ஆட்சியில் பங்கு என்கிற கேள்வி எப்போது எழுகிறது...? ஆட்சி அமைக்க முயற்சி செய்யும் பிரதான கட்சிக்குப் பெரும்பான்மை இல்லாமல் போக, அதைத் தனது ஆதரவு மூலம் கூட்டணி கட்சி வழங்குகிறபோதுதான் அக்கேள்வி எழ முடியும்.

தமிழக தேர்தலில் அ.தி.மு.க.வுடன் த.மா.கா, கம்யூனிஸ்ட் முதலான கட்சிகள் கூட்டணி கொண்டால், அவர்களுக்கு எத்தனை இடங்கள் ஒதுக்கப்படக்கூடும் என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். பெரும்பாலான இடங்களில் அ.தி.மு.க.தான் போட்டியிடும். ஒரு சில தொகுதிகளே கூட்டணியின் இதர கட்சிகளுக்குத் தரப்படும். அவற்றுள் எத்தனை இடங்களில் அவை ஜெயிக்கப் போகின்றன என்பதும் உறுதியில்லை.

இப்படி உறுதியேயில்லாத ஒரு நிலையில், ஆட்சியில் பங்கை மட்டும் உறுதி செய்ய வேண்டும் என்று த.மா.கா எதிர்பார்ப்பது, அதுவும் ஜெயலலிதாவிடம் எதிர்பார்ப்பது என்பது அறியாமையின் உச்சம்தான். - அடுத்த தேர்தலில் அ.தி.மு.க கூட்டணி ஜெயித்து ஆட்சி அமைக்கும்; ஆனால் அ.தி.மு.க.வுக்குத் தனிப்பெரும்பான்மை இருக்காது என்ற இரண்டு அனுமானங்களையும் நிஜமாகக் கருதும் அறியாமை!

காங்கிரஸைப் பிரிந்து வந்து தி.மு.க.வை ஆதரித்தகால கட்டத்தில் ஆட்சியில் பங்கு வேண்டும் என்றெல்லாம் த.மா.கா அடாவடி செய்யவில்லை. கொள்கை அளவிலான ஆரோக்கியமான கூட்டணிக்கு வழி வகுக்கப்பட்டு, அதற்கு மக்கள் ஆதரவு கிடைக்கும் என்பதும் நிரூபணமாயிற்று.




ஆனால், மூப்பனாருக்கு அதெல்லாம் இன்று மறந்து போய்விட்டது. கட்சிக்காரர்களோ, ஆட்சியில் பங்கு வேண்டும் என்று பிடிவாதம் பிடிப்பதன் மூலம் தங்கள் பலத்தை நிரூபிக்க முடியும் என்று கருதுகின்றனர்.

அ.தி.மு.க.வுடன் காங்கிரஸ் கூட்டணி கொள்வதைக் கொள்கையளவில் ஏற்க முடியாமல் பிரிந்து வந்த த.மா.கா.வினர், இன்று அதே அ.தி.மு.க.வுடன் கூட்டணியும் வேண்டும் ஆட்சியில் பங்கும் வேண்டும் என்கின்றனர்!

கொள்கையில் பின்வாங்குவதோடு மட்டுமின்றி, ஜெயலலிதா குட்ட குட்ட குனிவதற்கும் தயாராயிருக்கின்றனர்.

இத்தகைய போக்கு, மக்களிடையே மதிப்பை ஏற்படுத்தி வோட்டுகளைப் பெற்றுத் தரும் என்ற எதிர்பார்ப்பு வேறு அவர்களுக்கு இருக்கிறது.

ஆனால், அ.தி.மு.க.வுடன் சேருவதனால் நற்பெயரும் கிட்டப் போவதில்லை; த.மா.கா எதிர்பார்ப்பதுபோல் ஆட்சியில் பங்கும் கிடைக்கப் போவதில்லை.

இத்தனை தூரம் இறங்கி வந்த பிறகு, த.மா.கா உருவானதற்கான காரணமே இன்று அர்த்தமற்றதாகி விட்ட நிலையில், த.மா.கா என்ற தனிக்கட்சி அந்தஸ்துக்கு எவ்வித அர்த்தமும் இல்லை. பேசாமல் பழையபடி காங்கிரஸுடன் சங்கமமாகி தமிழகத்தில் அந்தக் கட்சியை வளர்ப்பதற்காவது பாடுபடலாம். கோஷ்டிப் பூசல்களுக்கு முடிவு கட்டிவிட்டு, திராவிட கட்சிகளுக்குச் சிறந்த மாற்றாக தேசிய கட்சியான காங்கிரஸைப் பலப்படுத்தும் முயற்சிகளில் இறங்கலாம்.

தி.மு.க.வின் மேல் மட்டப் பிரமுகர்கள் வட்டாரத்தில், 'பரமசிவன் கழுத்துப் பாம்பு', 'ராஜா வீட்டுக் கன்றுக்குட்டி' என்று செல்லமாக அழைக்கப்படுகிறார் அமைச்சர் பொன்முடி. காரணம், அமைச்சரவை ப்ரோடோகால் எப்படியிருந்தாலும், பல முக்கிய விஷயங்களில், கருத்து கூறுவதில் ஆற்காடு வீராசாமி, துரைமுருகன் ஆகியோரை அடுத்து முதல்வருக்கு மிகவும் நெருக்கமாக இவர் இருப்பதுதான்! குறிப்பாகச் சொல்ல வேண்டுமென்றால், தேர்தல் காலங்களில் கூட்டணிக் கட்சிகளுடன் பேச்சு வார்த்தை நடத்தும் குழுவில் ஒருவராக, பொன்முடியும் இருந்திருக்கிறார். ஏன் சமீபத்தில் வீரப்பன் விவகாரத்தில் கூட ஆலோசனையில் கலந்து கொண்டார் இவர்.



அனுபவத்திற்கும் வயதிற்கும் முக்கியத்துவம் கொடுக்கும் தி.மு.க.வில், பொன்முடியின் இந்த வளர்ச்சி பலரது புருவத்தை உயர்த்தும். இதற்குக் காரணம்?

பொன்முடி, ஸ்டாலினுக்கு மிகவும் நெருக்கமானவர். இருபது வருடங்களுக்கு முன்பு இளைஞர் அணியை வளர்க்க ஸ்டாலின் களத்தில் இறங்கிய போது தோள் கொடுத்தவர். அந்த அடிப்படையில், 1989ல் விழுப்புரம் சட்டமன்றத் தொகுதியில் போட்டியிட வாய்ப்புக் கிடைத்தது. சர்க்கரை பந்தலில் தேன்மாரி பொழிந்தது போல் சுகாதார அமைச்சர் பதவியும் 1989லேயே இவரை வந்தடைந்தது. அமைச்சரவையில் மெத்த படித்தவர்களில் பொன்முடியும் ஒருவர்.

1991ல் எல்லா கழகப் பிரமுகர்களும் தேர்தலில் தோல்வியடைந்ததைப் போல பொன்முடியும் தோற்றார். இருந்தாலும் ஒன்றுபட்ட தென்னார்க்காடு மாவட்டத்தில் கட்சிக்காக முழு நேரமும் உழைத்தார். கடுமையான போராட்டத்திற்கிடையில் மாவட்டச் செயலாளர் பதவி வந்து சேர்ந்தது. 1996ல் வெற்றி பெற்ற பின் போக்குவரத்து மற்றும் நெடுஞ்சாலைத் துறைக்கு இவரைப் பொறுப்பாக்கினார் கலைஞர். அதன் பிறகு ஏறுமுகம்தான். அறிவாலயத்தில் நடந்த உட்கட்சித் தேர்தலில், போட்டியிட்ட எதிர்கோஷ்டியினர் ஒட்டம் பிடிக்க, பொன்முடி மீண்டும் மாவட்டச் செயலாளரானார். தலைமை அந்த அளவுக்கு இவருக்கு ஆதரவாக நடந்து கொண்டதாம்! அப்போது தோற்றவர்கள் மாவட்ட அரசியலில் இவரைக் கவிழ்க்க இப்போதும் வேலை செய்து கொண்டிருக்கிறார்கள். அமைச்சர்கள் மாவட்டச் செயலாளர் பதவிக்குப் போட்டியிடக் கூடாது என்ற கழகத்தின் புதிய சட்டத்தால், மீண்டும் மாவட்டச் செயலாளராக முடியவில்லையே என்ற வருத்தம் அமைச்சருக்கு நிறையவே இருக்கிறது.

"இவர் விழுப்புரத்திற்குத்தான் அமைச்சர்" என்று கலைஞராலேயே கிண்டல் செய்யப்படும் அளவுக்கு விழுப்புரத்திற்கு அடிக்கடி போய் வருகிறார் பொன்முடி. வரும் காலங்களில் விழுப்புரத்தின்



வளர்ச்சிக்குக் காரணமானவர்களைப் பட்டியலிட்டால் பொன்முடியின் பெயரும் கண்டிப்பாக இருக்கும். கலெக்டர் அலுவலக வளாகம், பஸ் ஸ்டாண்ட், பெரும்பாக்கம் பாலம் என்று விழுப்புரம் நகரின் வளர்ச்சிக்கு அமைச்சரின் பங்கு ஏராளம்.

விழுப்புரம் நகரில் உள்ள 45 கி.மீ. சாலைகளில் 30 கி.மீட்டருக்குக் காங்கிரீட் சாலைகளாக மாற்றி விட்டார் அமைச்சர். தனியார் சேனல்களில் ஃபோன் மூலம் நேயர்களிடம் பேசி நிகழ்ச்சிகள் ஒளிபரப்புவது போல், விழுப்புரம் மக்களுடன் குறிப்பிட்ட நாட்களில் ஃபோன் மூலம் உரையாடி குறைகளைத் தெரிந்து கொண்டு அவற்றைக் களைகிறார் அமைச்சர்.

''ஏராளமான இளைஞர்கள் வேலை கேட்டு வருகிறார்கள்; அவர்களுக்குத்தான் ஒன்றும் செய்ய முடியவில்லை'' என்பது அமைச்சரின் வருத்தம். முறை வைத்துக் கொண்டு, ஒன்றியம், ஒன்றியமாகச் செல்கிறார் அமைச்சர். ''போன முறை வந்த போது சொன்னீங்களே.. அடிகுழாய். அது போட்டாச்சு பார்த்தீங்களா?'' என்று செய்து முடித்த பல விஷயங்களை மக்களுக்கு நினைவுபடுத்தி பழகுபவர் அமைச்சர்'' என்கிறார் விழுப்புரம் மாவட்ட கழக பிரமுகர் ஒருவர்.

அமைச்சருக்குக் கொடுக்கப்பட்ட கனமான துறைகளில் ஒன்றான நெடுஞ்சாலைத் துறையை இடையிலேயே எடுத்து தா.கிருஷ்ணனிடம் கொடுத்து விட்டார் கலைஞர். ''சாலை போடுவதில் நவீன முறைகளைக் கொண்டு வந்தது பொன்முடியிடம் அந்தத் துறை இருந்த போதுதான்'' என்கிறார் உதவியாளர் ஒருவர். அமைச்சரின் நேரத்தை முழுவதும் எடுத்துக் கொள்வது போக்குவரத்துத் துறைதான். இந்த நான்கு வருட காலங்களில் இரண்டு முறை வெற்றிகரமாக கட்டணத்தை உயர்த்தியிருக்கிறார் அமைச்சர். 'மொத்தம் உள்ள 21 போக்குவரத்து கார்ப்பரேஷன்களில் 15 கார்ப்பரேஷன்கள், கொஞ்சம் வலிமையாக இருக்கிறது' என்று சந்தோஷப்படுகிறார்கள் போக்குவரத்துத் துறை அதிகாரிகள். பஸ்கள் வாங்குவதற்குக் கடன் வாங்குவதன் காரணமாக, கொடுக்கப்

# ஏமசிவன் கடித்துப் பாம்பு!

படும் வட்டி, மற்றும் வண்டிகளின் தேய்மானம் காரணமாகத்தான் போக்குவரத்து நிறுவனங்களுக்கு இழப்பு ஏற்படுகிறது. ''குறிப்பிட்ட கால இடைவெளிகளில் கட்டணத்தை ஏற்றிக் கொண்டே வர வேண்டும். ஆனால் ஜெயலலிதா அரசு அவ்வாறு செய்யவில்லை. எனவே எங்கள் மீது பொறுப்பு விழுந்து விட்டது'' என்று சொல்கிறார் அமைச்சர்.

அ.தி.மு.க. ஆட்சிக் காலத்தில் போக்குவரத்துத் துறையில் உதிரிபாகங்கள் வாங்குவதில் நடந்த ஊழல்களைத் தனி நீதி மன்றத்துக்குக் கொண்டு வந்து ஊழல்வாதிகளுக்குத் தண்டனை வாங்கிக் கொடுத்தது ஒரு சாதனைதான். ''ஆனால் தி.மு.க. ஆட்சியில், முதல் ஒரு வருட காலத்தில் உதிரி பாகங்கள் வாங்கவே பயந்து கொண்டு நூற்றுக்கணக்கான பேருந்துகள் ஓட இயலாத நிலையில் டிப்போக்களில் முடக்கப்பட்டன. இப்போது போலி ஸ்பேர் பார்ட்ஸ் வாங்கப்படுவதாக ஒரு புகார் இருக்கிறது. விடுமுறை நாட்களின் போது நானூறு பேருந்துகளுக்கு மேல் இயக்கப்படாமல் சென்னையில் டிப்போக்களில் நிறுத்தப்படுகின்றன. 'செயல்படாமல் இருந்தாலே சுகம்' என்ற ரீதியில் அமைச்சர் இருப்பதாகத் தெரிகிறது. முன் ஜாக்கிரதையான பழுதுபார்த்தல் என்பதே இப்போது கிடையாது. இதன் காரணமாக பஸ்கள் விரைவாக ஓரங்கட்டப்படுகின்றன. நீண்ட தூர பஸ்கள் பழுதுபார்க்கப்படாமல் ஓட்டப்படுமானால்

என்ன ஆகும்? ஆம்னி பஸ்களுக்கு அமோக ஆதரவு கொடுக்கிறார்கள். மினி பஸ்கள் என்று தனியார்களுக்கு ரூட்டைத் திறந்து விட்டுவிட்டார்கள்" என்று சொல்கிறார்கள் எதிர்க்கட்சி தொழிற்சங்க பிரமுகர்கள். அதே போல் போக்குவரத்து ஊழியர்கள் பென்ஷன் விவகாரத்தில், மத்திய அரசிடம் போராடி மாற்று பென்ஷன் திட்டத்துக்கு அனுமதி பெற முடியாமல் திணறுகிறாராம் அமைச்சர். இப்போது ஜெ. போராட்டம் அறிவித்து விட்டார்.

அமைச்சரிடம் உள்ள மற்றொரு பொறுப்பு சென்னை பெருநகர வளர்ச்சி குழுமம் (CMDA) "இந்தக் குழுமத்தைப் பற்றி அமைச்சர் கவலைப்படுகிறாரா என்பதே தெரியவில்லை. இங்கு அதிகாரிகள் ராஜ்யம் தான். அங்கீகாரம் இன்றி அதிகப்படியான கட்டுமானத்தை ஒழுங்குபடுத்துவது சம்பந்தமாகப் போடப்பட்ட ஆணைகளில் பல முரண்பாடுகள்; குளறுபடிகள். இதே விவகாரத்தில் ஆந்திர அரசும், தில்லி அரசும், பல நூறு கோடி ரூபாய் வருவாய் ஈட்டும்படி ஆணை போட்டன. ஆனால் அமைச்சரின் கவனக்குறைவால் தமிழக அரசுக்கு வருவாய் இழப்பு ஏற்பட்டிருக்கிறது. கடந்த ஆறு மாத காலமாக பலமுறை எடுத்துச் சொல்லியும் எந்த நடவடிக்கையும் காணும்" என்கிறார் ரியல் எஸ்டேட் பிரமுகர் ஒருவர்.

"அமைச்சர் ஆழமாகச் சிந்திப்பது கிடையாது; அதிகாரிகளைக் கொஞ்சம் மட்டமாகப் பேசுகிறார். இதன் காரணமாக, செயல்பட நினைக்கும் அதிகாரிகளும் சோர்ந்து போய் விடுகிறார்கள்" என்கிறார் சி.ஐ.டி.யூ. தொழிற்சங்கப் பிரமுகர் ஒருவர். "அமைச்சர் காட்டும் பந்தாவை விட அவரைச் சுற்றியிருக்கும் உதவியாளர்கள் காட்டும் பந்தா அதிகம். எம்.எல்.ஏ.வைக் கூட சரியாக மதிக்காமல் இருக்கிறார்கள்" என்று சொன்னார் கழகப் பிரமுகர் ஒருவர். எது எப்படியிருந்தாலும் அமைச்சரின் செல்வாக்குக்கு எந்த ஆபத்தும் இல்லை. இதற்கு உதாரணம் சமீபத்தில் நாஞ்சில் மனோகரன் மறைந்த பிறகு நடந்த அமைச்சரவை மாற்றத்தில் இவருக்குப் புதிதாக இலாகா ஒன்று கொடுக்கப்பட்டிருப்பதுதான். அரசியல்ரீதியான அமைச்சரின் கிடுகிடு வளர்ச்சிக்குக் காரணம், அவரின் செயல்படும் திறமைதான் என்பதில் சந்தேகமில்லை. "எல்லோருக்கும் திறமை இருக்கிறது. ஆனால் விசுவாசம் என்பது முக்கியமான ஒன்று. அதுதான் எனக்கு முக்கியம்" - இது அமைச்சரின் கருத்து!

— ப்ரியன்

## நவராத்திரி கொலுப் படிகள்



எங்களிடம் தரமான கொலுப் படிகள் உங்களது தேவைக்கேற்ப, 7 படிகள், 5 படிகள், 3 படிகள் அளவுகளில் கிடைக்கும்

மொத்தமாகவும் & சில்லரையாகவும் கிடைக்கும் இடம்.

**OM SAKTHI METAL CRAFT**

(Manufacturers)
49, perambur High Road, Jamaliya,
Chennai -12.
Ph: 6427719, Fax: 6433984



# "கல்கி ஷாப்பிங்"

**பக்கங்களில் விளம்பரம் செய்ய ரூ.1250/- மட்டுமே. செய்து பயனடைவீர்!**

47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை – 97.
போன்: 2345622, 2345623

"உடனடியாக வீடு கட்டவோ அல்லது விரைவான முதலீட்டு லாபமோ எப்படியானாலும் சிறந்த ஒரு புத்திசாலித்தனமான முதலீடு"

நல்ல வீட்டு மனையை நழுவ விடாதீர்கள்

# சிந்து நகர் - சென்னை -56.

(சவீதா டென்டல் காலேஜ் அருகில்)
CMDA அங்கீகாரம் பெற்ற மனைகள். (ரூ. 65/99.)

- அமைந்துள்ள இடம் ✔
- மாநகருக்கு அருகில் ✔
- பாதுகாப்பு ✔
- முதலீடு செய்யும் பணத்துக்கு தகுந்த மதிப்பு ✔
- வேகமாக உயரும் நில மதிப்பு ✔

**சிறப்பு அம்சங்கள்**

- உடனே வீடு கட்டலாம்/ அருகில் வீடுகள்.
- கோயம்பேட்டிலிருந்து 10 நிமிட பயணம்.
- அண்ணா நகரிலிருந்து 15 நிமிட பயணம்.
- சுலபமான மூன்று வழிப் பாதைகள். கிண்டி, செயிண்ட்தாமஸ் மவுண்ட் போரூர் 100 அடி சாலை அரும்பாக்கம் கோயம்பேடு 100 அடி சாலை அம்பத்தூர் ஆவடி 60 அடி சாலை.
- சென்னை பெங்களூர் (NH4) தேசிய நெடுஞ்சாலை.



- கோயம்பேட்டில் அமைந்துவரும் பிரம்மாண்ட பஸ் நிலையம்
- தாம்பரம் வானகரம் புறவழிச் சாலை.
- மாநகரின் அனைத்து பகுதிகளுக்கும் தாராளமான பஸ் வசதி
- மெடிக்கல், டெண்டல், இஞ்சினீயரிங் கேட்டரிங் ஆர்ட்ஸ் கல்லூரிகள் அருகில்
- சுவையான / மிகுதியான நிலத்தடிநீர்.
- சுத்தமான பத்திரம் / நம்பகமான நிறுவனம்
- உடனடி பத்திரப் பதிவு.
- 5 வருட மனை பாதுகாப்பு சேவை.

மனையை பார்வையிட இலவச வாகன வசதி
காலை 7.00 மணி, 11.00 மணி மாலை 3.00 மணி

**PH: 4 3 5 7 7 21 / 31**
**CELL: 98400 44018**




**BLB Estates (P) Ltd.**
S3, "Ramana Flats"/, 27, Rathna Nagar,
Off : Anna Salai, Teynampet, Chennai - 18.
(Behind Apollo Cancer Hospital)

வர்த்தகத்தில் நேர்மை : பணியில் பொறுப்பு

— நீனா பேட்டி

**சின்னஞ்சிறு பிள்ளைகளைத் தன் மாய இசையால் மயக்கி, பிடித்துச் சென்றவன் பைட்பைப்பர். அவனது வேலையை இன்று மெகா டீவி சீரியல்கள் செய்து கொண்டிருக்கின்றன. ஒரு சின்ன வித்தியாசம். அது ஐரோப்பிய புனைகதை. இது தமிழக நிஜம். இதில் பிடிபடுபவர்கள் பெண்கள்! லேட்டஸ்ட் மாய வலையான சித்தி தொடரில் ராதிகாவுக்கு அடுத்த சக்தியாக நடித்து வரும் நீனா, 'மெகா மெஸ்மரிஸம்' குறித்த நம் கேள்விகளுக்குத் தந்த 'துடுக்' பதில்கள் இவை.**

**மெகா சீரியல் கலாசாரம், தமிழ் நாட்டிற்கு எப்போது வந்ததென்று நினைக்கிறீங்க?**

இதுக்கு முழுக்க, முழுக்க தூர்தர்ஷன் தான் காரணம். இராமாயணம், மகாபாரதம் இரண்டும் மெகா சீரியல்களாக வந்து பெரிய அளவில் வெற்றி பெற்றன. இந்தப் புராணக் கதைகளை, ஏற்கெனவே கேட்டிருந்தாலும், விஷுவல் லைவ்வாக பார்த்த போது, பார்வையாளர்கள் ரொம்பவும் உணர்ச்சிவசப்பட்டாங்க. எனக்குத் தெரிந்து நிறைய வீடுகளில் குளித்து, பூஜை செய்து விட்டு, குடும்பத்தோடு இந்தத் தொடர்களைப் பார்த்தாங்க. அதற்கப்புறம், ஹிந்தியில் ஸ்வாபிமான், சாந்தி என்று நிறைய மெகா சீரியல்கள் எடுத்து, தமிழ் சேனல்களை பிரமிக்க வைத்தார்கள். இப்போது ஹிந்தி சீரியல்களை நாம் ஓரம்கட்டிட்டோம்.



**தமிழில் பிரபலமான முதல் மெகா சீரியல் என்று எதைச் சொல்லலாம்?**

'நீலா – மாலா' தொடர்தான். இதில் நான் நடித்தேன் என்பதற்காக இதைச் சொல்லவில்லை. இதைச் சினிமா போலவே எடுத்திருந்தார்கள். அதுதான் அந்த சீரியலின் வெற்றிக்குக் காரணம்.

**இப்போது வரும் மெகா சீரியல்களைப் பார்க்கும் பெண்கள், ஏதோ ஒரு பொறியில் சிக்கிக்கொண்டது போல மாறியிருப்பதை ஒத்துக் கொள்கிறீர்களா?**

மெகா சீரியல்களுக்குப் பெண்கள் ஆதரவு அதிகம்தான். ஆனால் இது திடீரென்று வந்தது இல்லை. ஒட்டுமொத்தமாகத் தொலைக்காட்சி மீது ஏற்பட்ட ஈர்ப்பின் அடுத்த கட்டம் என்று சொல்லலாம். முதலில் வயது வித்தியாசம் இல்லாமல் எல்லோரையுமே தொலைக்காட்சி பிடித்துக் கொண்டது. தினசரி வாழ்க்கை முறையே, டீவியில் வரும் நிகழ்ச்சிகளை மையமாக வைத்துத்தான் திட்டமிடறாங்க. அதிலும் வீட்டிலிருக்கும் குடும்பத் தலைவியரை இலக்காக வைத்து, எடுக்கப்படும் டெலி ஷாப்பிங் தொடங்கி, மெகா சீரியல் வரைக்கும் எல்லாம் வெற்றியடைகிறது. ஓய்வுக்கென்று இருந்த ஒரே ஒரு ஞாயிற்றுக் கிழமையையும் இப்போது டீவிக்குத் தாரை வார்த்து விட்டோம். காலை எட்டரை மணிக்குப் பாட்டுக்குப் பாட்டில் ஆரம்பிக்கிற 'தவம்', இரவு 'கேள்வி நேரம்' வரைக்கும் கலையாது. இதுக்கு இடையிலேயே சமைத்து, சாப்பிட்டு, வாஷிங் செய்து ஜமாய்ப்பதில், நம்ம அம்மாக்களுக்கு நிகர் அவங்கதான். இப்போது டீவி நிகழ்ச்சிகள்

***

*சீரியல் தயாரிப்பாளருக்கும் இயக்குனருக்கும், தார்மீகப் பொறுப்பு இருக்கிறது. அதை அவர்கள் ஒருபோதும் மறந்துவிடக் கூடாது. இந்தப் பொறுப்பை அவர்கள் மறந்து விட்டு சீரியல் எடுக்கத் தொடங்கினால் சென்சார் அவசியமாகி விடும்.*

***

"டீ.வி. சீரியலுக்கு

தவிர பகல், இரவு என்று எப்போது வேண்டுமானாலும் மெகா சீரியல் பார்க்கலாம். அவ்வளவு தொடர்கள் வருகின்றன.

**இந்தத் தொடர்களின் வெற்றிக்கு, மிகைப்படுத்தப்படும் செண்டிமெண்ட் தானே காரணம்?**

அதுவும் ஒரு காரணம். அதைவிட பெண்கள், குடும்பம் சம்பந்தப்பட்ட பிரச்னைகளை விரிவாக சீரியலில் அலச முடிகிறது. இரண்டரை மணி நேர சினிமாவில் இது முடியாது. மெகா சீரியல்களின் பலமே இதுதான். சினிமாவில் முடியாததை சீரியல் செய்கிறது. மற்றொன்று மெகா சீரியல்களில் நாடகத்தன்மை குறைந்து போய்விட்டது. சினிமாவுக்கும் சீரியலுக்கும் வித்தியாசம் தெரிவதில்லை.

**ஆனால் நிஜ வாழ்க்கையில் தினசரி சந்திக்கிற பிரச்னைகளுக்கு டீவி சீரியலில் தீர்வு கிடைக்குமா என்று தேடும் அளவுக்கு பெண்கள் மயங்கி இதில் கிடக்கிறார்களே?**



# சென்சார் தேவை!”

எல்லாப் பிரச்னைகளுக்கும் சீரியலில் தீர்வு கிடைக்கும் என்று எதிர்பார்ப்பது தவறு. சீரியல்களில் சொல்லப்படும் தீர்வுகள், சரியாகத் தோன்றினாலும் அது நடைமுறைக்கு ஒத்துவந்தால் மட்டும்தான் நிஜ வாழ்க்கையில் கடைபிடிக்கலாம். சில நிஜ சம்பவங்களோடு கற்பனையாக எடுக்கப்படுவதுதான் சீரியல் என்பதைப் பெண்கள் மறக்கக் கூடாது. சீரியல்களில் காட்டப்படுவது போல அதிதமான செண்டிமெண்டுகள் நிஜ வாழ்க்கையில் இல்லை என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

**ஆனால் முந்தானையை அழுதே நனைத்து விடும் அளவுக்கு, சீரியஸாக எடுத்துக் கொள்கிறார்களே? கணவர் அலுவலகத்திற்கும், குழந்தைகள் பள்ளிக்கும் போய் விட, தனிமையில் மெகா சீரியலில் ஆழ்ந்து விடும் பல பெண்கள் மனவியல் நோய்க்கு ஆளாகி இருப்பதாகச் செய்திகள் வெளியாகி இருக்கின்றனவே?**

அது பற்றி எனக்குத் தெரியாது. ஆனால் சீரியஸாக எடுத்துக் கொள்ளும் பெண்கள் அதிகம் என்பதற்கு எனக்கு வரும் ஃபோன் கால்களே சாட்சி. 'சித்தி' தொடரில் ராதி



''நீ பிரசண்ட் பண்ணின பேனாவால் எழுதினேன்.... இந்தக் கவிதை பற்றி என்ன நினைக்கிறே?''

''இப்படி ஒரு கழுத்தறுப்பு வரும்னு தெரிஞ்சிருந்தா பேனா பிரசண்ட் செய் திருக்கவே மாட்டேனேன்னு நினைக் கிறேன்!''

— உ. ராஜாஜி

---

காவுக்கு எதிராக நான் நடித்ததைப் பார்த் துப் பொறுக்க முடியாமல், பல பெண்கள் வீட்டிற்குப் போன் செய்து திட்டினார்கள். 'நீ நல்லா இருப்பியா?' என்று சபித்தார்கள். நிறைய பேர் பாராட்டவும் செய்தார்கள். மனநிலை பாதிக்கும் அளவுக்கு ஆழ்ந்து விடுவது மடத்தனம்.

**இதுபோன்ற தொடர்களுக்கு சென் சார் கிடையாது என்பதால், ஓவர்டோஸ் சீரியலாக மாறி விடுகிறது. எனவே முன் தணிக்கை அவசியம்தானே?**

இப்போதைக்குத் தேவையில்லை என் பதுதான் எனது கருத்து. சினிமாவிற்கு வியா பாரம் என்கிற மிகப் பெரிய நிர்ப்பந்தம் இருப்பதால், அதில் ரசிகர்கள் கேட்கிறார் களே என்று, ஒரு இயக்குனரோ, தயாரிப் பாளரோ பலவற்றைத் திணிக்க முடியும். தொலைக்காட்சிக்கு நல்லவேளையாக அப்படியொரு நிலை இல்லை. ஆனால் சீரி யல் தயாரிப்பாளருக்கும் இயக்குனருக்கும், தார்மீகப் பொறுப்பு இருக்கிறது. அதை அவர்கள் ஒருபோதும் மறந்துவிடக் கூடாது. இந்தப் பொறுப்பை அவர்கள் மறந்து விட்டு சீரியல் எடுக்கத் தொடங்கினால் சென்சார் அவசியமாகி விடும்.

**பல சினிமாத் தயாரிப்பாளர்கள் தொலைக்காட்சிக்கும் படையெடுப்பதால் எதிர்காலத்தில் இன்னும் விபரீதம் நடக்காது என்று என்ன நிச்சயம்?**

மூவி தொடர் தயாரிப்பு, இயக்கம் இரண் டிலுமே பெண்கள் கணிசமாக அதிகரித்து வருகிறார்கள். உணர்ந்து, அனுபவித்த விஷ யங்களை அவர்களால் தொடராக எடுக்க முடியும். குடும்பத் தொடர் என்று சொல்லி விட்டு இனி அரைத்த மாவையே அரைக்க முடியாது. சித்தி தொடரின் வெற்றிக்கு அது முற்றிலும் புதிய கதை என்பது ஒரு கார ணம். கொஞ்ச நாட்களுக்கு முன்பு வரை நிகில், பேய் தொடர்களுக்குப் பெண்கள் ஆதரவு கொடுத்தனர். இப்போது இல்லை. காரணம், அதில் பெண்களுக்கான விஷயம் எதுவும் இல்லை.

**சித்தி தொடரில் ராதிகாவும் நீங்களும் எதிரும் புதிருமாக நடிக்கிறீர்கள்? நிஜ வாழ்க்கையில் எப்படி?**

இப்போது ஏழாவது முறையாக அவர் களுடன் சேர்ந்து நடிக்கிறேன். சின்ன வய திலிருந்தே என்னை ஒரு மகள் போலவே நடத்துவார்கள். பாசப் பறவைகள், கேளடி கண்மணி, மீண்டும் மீண்டும் நான், இப்படி அவங்க கூட நெருக்கமான பாசமும் தொடர்பும் உண்டு. சித்தி தொடரில் அவர் களுக்கு எதிராக நடித்தது ஒரு மாறுபட்ட அனுபவம்... இப்போது தொடரில் நாங்கள் ராசியாகி விட்டோம்.

**சினிமா வாய்ப்புகளை முற்றிலுமாகத் தவிர்த்து வருகிறீர்களா?**

அப்படியெல்லாம் இல்லை. எனது முதல் படமான விடுகதையில் கனமான பாத்திரத்தில் நடித்தேன். அடுத்து வந்த படங்கள், இரண்டு பாடல், ஒரு காதல் என்ற அளவில் இருந்தது. அதில் எனக்கு விருப்பமில்லை. நல்ல பாத்திரங்கள் கிடைத் தால் நடிப்பு. இல்லையென்றால் படிப்பு என முடிவு செய்தேன். இப்போது பி.ஏ. ஆங்கில இலக்கியம், இறுதியாண்டு படிக் கிறேன். கம்ப்யூட்டரில் மல்டி மீடியா முடித் திருக்கிறேன். நான் நிறைய படிக்க வேண் டும் என்பதுதான் அப்பா, அம்மாவின் விருப்பம்.

**நல்ல பாத்திரம் கிடைக்கவில்லை என்று சொல்லிவிட்டு 'நாகலிங்கம்' மாதிரியான மூன்றாம்தரப் படத்தில் ஏன் நடித்தீர்கள்?**

உலகின் முதல் வாசனைப் படம். கின்னஸ் சாதனைக்கு எடுப்பதாகச் சொன் னார்கள். ஆனால் அந்தப் படம் கின் னஸுக்குச் சென்றதாக எனக்குத் தகவல் இல்லை.

சந்திப்பு : **விஷுவல்தாசன்**

அட்டை, வண்ணப்படங்கள் : **வெங்கடேஷ்**

# ஸ்ரீராம பக்த ஹனுமான்

தானோ, அத்தனைக்கத்தனை ராவண சகாயத்தால் அழிந்தான் வாலி.

வாலி அதிபலசாலி. அவனை எப்படியாவது கொன்று விட வேண்டும் என்பதுதான் முதலில் இலங்காபுரி அதிபனான ராவணனின் எண்ணமாக இருந்தது.

ஒரு நாள், வாலி சமுத்திரத்தில் சந்தியா வந்தனம் செய்கையில் அவனுக்குப் பின்புறமாக ராவணன் சென்று, அவனைத் தனது கைகளால் கட்டி வீழ்த்த நினைத்தான். ஆனால் வாலி என்ன செய்தான், தன்னைக் கட்டிய ராவணனது கைகளை தனது இரு புஜங்களாலும் அழுந்தப் பிடித்து நசுக்கத் தொடங்கினான்!

ராவணன் தாங்கமுடியாத வலியினால் கதறி, தன்னை விடுவிக்கும்படி வாலியிடம் மன்றாடினான். வாலியும் கருணை கூர்ந்து ராவணனை விடுவித்து விட்டான்.

இதன் விளைவாக என்ன ஆயிற்று...? ராவணன் வாலியோடு அக்னிசாட்சியாக சினேகப் பிரதிக்ஞை செய்துகொண்டான்.

"நாடு - நகரம், உண்டி - உடை, போக - போக்யங்கள், பெண்டிர் - பிள்ளைகள் - என்று யாவுமே இனி நம் இருவருக்கும் பொதுவாக இருக்கக் கடவன" - இப்படி வாலி, ராவணன் இருவருமே தீர்மானித்துக் கொண்டார்கள்.

- இது ராமாயணத்தில் வரும் உத்தர காண்டத்துச் செய்தி. கிஷ்கிந்தா காண்டத்தில் கூறப்படும் ராம-சுக்ரீவ சக்யத்தை இந்த உத்தரகாண்டச் செய்தியுடன் ஒப்பிட்டுப் பாருங்களேன்...

கிஷ்கிந்தா காண்டத்தில், சுக்ரீவன் ராமனைப் பார்த்துச் சொல்கிறான்: "எனது அருமைத் தோழரே! இனி உமது சுக துக்கங்களும் எனது சுக துக்கங்களும் ஒன்றே.

*எவ்விடத்தும் இராமன் சரிதையாம்*
*அவ்விடத்திலும் அஞ்சலி அத்தனாய்*
*பவ்வமிக்க புகழ்த் திருப்பாற்கடல்*
*தெய்வ தாசனைச் சிந்தை*
*செய்வாமரோ*

★ ★ ★

குருநாதரான சூரிய பகவான் கேட்டுக் கொண்டதன் பேரில் ஆஞ்சநேயன் பூமியில் சுக்ரீவனுக்குச் சகாயம் செய்ய வந்து சேர்ந்தான் என்றேன்.

ஆஞ்சநேய சகாயத்தால் சுக்ரீவன் எத்தனைக்கெத்தனை உயர்வு அடைந்

### கண்கண்ட தெய்வம்

எடுத்த செயல்கள் அனைத்தும் இடையூறின்றி ஈடேற ஆஞ்சநேயரைப் பலரும் வழிபடுகிறோம். குறிப்பாக இளைய தலைமுறையினரை ஆஞ்சநேயர் அதிகமாகக் கவர்ந்துள்ளதைப் பார்க்கிறேன். தமிழ்நாட்டில் மட்டுமின்றி, ஆந்திரா, கர்நாடகா, மஹாராஷ்டிரம் போன்ற பல இடங்களிலும் ஆஞ்சநேயருக்கு ஆலயங்கள் இருப்பதையும் அவரைத் தரிசிக்க மக்கள் திரளாகச் செல்வதையும் காணும்போது கலிகாலத்தில் கண்கண்ட தெய்வமாக, நம்பினோர்க்கு நன்மைகளை நல்கும் நாயகனாக ஹனுமார் விளங்குகிறார் என்றே எண்ணத் தோன்றுகிறது. சந்தேகமிருப்பவர்கள் டெல்லி, கன்னாட் பிளேஸில் உள்ள ஆஞ்சநேயர் கோயிலுக்குச் செவ்வாய்தோறும் வருகிற கூட்டத்தைப் பார்த்தாலே போதும்!

கல்யாணபுரம் ஆராவமுதன்

# 6

என் அண்ணன் என்னை வஞ்சித்து, என் மனைவியை அபகரித்துக்கொண்டான். அவனுக்குப் பயந்து நான் இங்கே வந்து மறைந்து வாழ்கிறேன். உன்னைச் சரணடையும் எனக்கு 'அஞ்சேல்' என்று அபயம் அளிப்பாயாக...'' என்கிறான்.

அண்ணல் ராமன் என்ன பதில் சொல்கிறார்...?

''வானரர் தலைவா! உன் மனைவியை அபகரித்த வாலியை நான் என் பாணங்களால் கொன்று வீழ்த்துகிறேன்'' என்று உறுதிமொழி தருகிறார்.

இந்தச் சந்தர்ப்பத்தில் ராமனுக்கும் சுக்ரீவனுக்கும் கூட அக்னி சாட்சியாக நட்பு ஏற்படுகிறது.

சற்று யோசித்துப் பார்க்க வேண்டும்...

ராமனின் மனைவியை அபகரித்த ராவணனையே நடுங்கச் செய்தவன் வாலி. அப்படி இருக்கையிலே, அந்த வாலியைக் கண்டு பயந்து, மறைந்து வாழும் சுக்ரீவனுடனல்லவா ராமனை நட்பு கொள்ளச் செய்கிறான் ஹனுமான்! இதற்கு என்ன காரணம்...?

ராவணனும் வாலியும் செய்துகொண்ட நட்பு அதர்ம வழியைப் பின்பற்றியது. போக-போக்யங்களையும் பெண்டிரையும் பொதுவாக்கிக் கொள்ளும் 'நட்பு'



எப்படி நட்பில் சேர்த்தியாக முடியும்!

ஆகவேதான் அறமே வடிவான ராமனைச் சேரும்படி சுக்ரீவனுக்கு அறிவுறுத்தினான் ஆஞ்சநேயன். சூரிய பகவானுக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாற்றும் விதமாக சுக்ரீவனுக்கு அவன் செய்த மிகப் பெரிய சகாயம் இதுவன்றி வேறு எதுவாக இருக்க முடியும்!

அதேபோல் ராமனுக்கும் சுக்ரீவன் தொடர்பை ஏற்படுத்திய காரணகர்த்தாவானான் ஹனுமான்.

துளஸிதாஸர் இதுபற்றி மிக அருமையான ஒரு செய்தியைக் கூறுகிறார்:

'இறைவன், ராவணனுக்கு எத்தனையோ உயர்த்தியான விஷயங்களையெல்லாம் கொடுத்தார். அவனுக்கு ஈடான பலசாலி இல்லை என்கிற மாதிரியான பராக்கிரமத்தைக் கொடுத்தார், பெரும் ஐச்வர்யத்தைக் கொடுத்தார், நல்ல மனையாளைக் கொடுத்தார். சகோதரர்கள், வலிமை மிக்க பிள்ளைகள், யாராலும் எளிதில் அழிக்க முடியாத லங்கா ராஜ்ஜியம்... இப்படி அனைத்தையும் இறைவன் ராவணனுக்குக் கொடுத்தார். ஆனால், ஒன்றே ஒன்றை மட்டும் அவனுக்குக் கிடைக்காமல் செய்துவிட்டார் ஆண்டவன்! ராவணனுக்குக் கிடைக்காமல் போன அந்த மேன்மையான விஷயம் ஸத்ஸங்கம் என்பதுதான் - அதாவது நல்லோர் இணக்கம்.

ஆனால் சுக்ரீவன் விஷயத்தில் ஆண்டவனது திருவிளையாடலைப் பாருங்கள் - ராஜ்ஜியத்தை இழந்து, மனைவியை இழந்து, அண்ணனால் அடித்து விரட்டப் பட்டுத் தலைமறைவாக வாழ்ந்தான், சுக்ரீவன். ஹனுமான் உருவில் ஒரு ஸத்ஸங்கத்தை மட்டும் ஏற்படுத்திக் கொடுத்தான் ஆண்டவன். அதன் காரணமாக, இழந்த அனைத்தையும் திரும்பப் பெற்றுவிட்டான் சுக்ரீவன்-

ஸத்ஸங்கம் - நல்லாரிடத்து உறவு - என்பது அவ்வளவு பெருமை வாய்ந்தது என்கிறார் துளஸிதாஸர்!

வடமொழிப் புலவர் ஒருவர் கூறுகிறார்:

"கற்பக விருக்ஷம் விரும்பியதைத்தான் தரும். காமதேனு கேட்டதைத்தான் தரும், சிந்தாமணி என்கிற ரத்தினக்கல் மனத்தில் எண்ணியதை மட்டுமே கொடுக்கும். ஆனால் ஸத்ஸங்கமானது அத்தனையையும் கொடுக்கும்; எண்ணாத உயர்வுகளையும் கொண்டு வந்து சேர்க்கும்."

சுக்ரீவன் எப்பேர்ப்பட்ட பாக்கியசாலி என்று கொஞ்சம் எண்ணிப் பாருங்கள்... ஸத்ஸங்கத்திலும் உயர்ந்த ஸத்ஸங்கம் அவனுக்கு வாய்த்தது - ஆஞ்சநேயனின் ஸத்ஸங்கம்!

## அருள்வாக்கு

சொல்லி ப்ரயோஜனமில்லை என்றாலும் சொல்லாமலும் இருக்க முடியவில்லை. வெள்ளைக்கார அரசாங்கம் வருகிறதற்கு முந்தி ஊருக்கு ஊர், கிராமத்துக்கு கிராமம் பசுக்களுக்கென்றே ப்ரத்யேகமாக மேய்ச்சல் பூமி சாஸனமாக விடப்பட்டிருந்தது. கோக்ஷேமத்துக்குள்ள முக்யத்வம் தெரியாத வெள்ளைக்கார அரசாங்கம் அந்த பூமிகளையும் தர்க்காஸ்தாகக் கொடுத்து விட்டது. பசுவின் வயிற்றில் அதிலிருந்து அடி விழ ஆரம்பித்தது. அதே மாதிரி, மந்தைக் கரைக்குளம் என்று பசுக்களுக்காகவே முன் காலத்தில் இருந்த குளங்களும் இப்போது எடுபட்டு விட்டன. Minor irrigation works - சிறிய நீர்ப்பாசனத் திட்டம் - என்று அரசாங்கத்தில் போடுவதில் இந்த மந்தைக்கரைக் குளத்தையும் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

அநேக க்ராமங்களாக இருந்தவை உரு மாறித்தான் இன்றைய சென்னை மாநகராகியிருக்கிறது. இப்போது மந்தைவெளி என்று இருக்கிற பேட்டை ஆதியில் மேய்ச்

---

ஹனுமானின் உயர்வு அவனது ராம பக்தியில் என்று சொன்னேன். இன்னொரு மகத்தான உயர்வும் அந்த ஆஞ்சநேயனுக்கு உண்டு. தான் யாரை மிகவும் போற்றி பக்தி செய்தானோ அந்த ரகுவம்ச திலகனின் பெருமதிப்பையும் பாராட்டையும் முழுமையாகப் பெற்றவன் ஹனுமான்.

முதன்முதலாகத் தன் முன் வந்து நிற்கும் ஹனுமானைக் கண்டதும் ஸ்ரீ ராமன் என்ன செய்கிறான்? பார்த்ததுமே ஹனுமான் எப்படிப்பட்டவன் என்பது அவனுக்குத் தெரிந்து போகிறதாம். அவனை எப்படி மதிப்பீடு செய்கிறான் பாருங்கள்:

நீதியில் நின்றவன்;

வாய்மை அமைந்தவன்;

நினைவாலும் மாதர் நலம் நாடாத தூய பிரும்மசாரி...

அது மட்டுமா...? ஹனுமானின் பேச்சுத் திறனையும் ஸ்ரீராமன் வாயார புகழ்ந்து கொண்டாடுகிறான். ஒரு சித்திரம் தீட்டும் அழகுடன் வால்மீகி அந்தக் காட்சியை நம்

சல் பூமியாகவே இருந்திருக்கிறது. அமிஞ்சிக் கரையை 'அமைந்தகரை' என்கிறார்களே, அது மந்தைக்கரை குளமாகத்தான் இருந்திருக்க வேண்டும்.

முன்னாளில் மாடுகளிடம் எத்தனை அபிமானம் காட்டி அதை ரக்ஷித்தார்கள் என்பதற்கு ஒரு சான்று சொல்கிறேன். மனிதர்களாகப் பிறந்தவர்கள் கடைத்தேறுவதற்காக செய்ய வேண்டிய தர்மங்களை எண்- நான்கு- அதாவது முப்பத்திரண்டு - அறங்கள் என்று சொல்லியிருக்கிறது. அதை இரட்டிப்பாக்கி அறுபத்து நாலு தர்மங்கள் என்றும் சொல்வதுண்டு. அவற்றில் ஒன்றாக 'ஆதீண்டு குற்றி நிறுவுதல்' என்பதைச் சொல்லியிருக்கிறது. அது என்ன? ஒரு கோவுக்கு உடம்பிலே அரிக்கிறது. நமக்கு எங்கே அரித்தாலும் நாம் கையை வளைத்துச் சொறிந்து கொள்கிறோம். கோவோ பின்னங்காலைக் கொண்டுதான் சொறிந்து கொள்வது. அப்போது சில இடங்களில் அரித்தால் அதற்கு ஸரியாக சொறிந்து கொள்ள வராது. அந்த மாதிரி ஏற்படும்போது அது அரிப்பெடுக்கிற பாகத்தை நேரே வைத்துத் தேய்த்துச் சொறிந்து கொள்வதற்கு வாகாகக் கல்லை நட்டு வைப்பது தான் 'ஆதீண்டு குற்றி நிறுவுதல்'. ஆங்காங்கே இந்த மாதிரி நட்டு வைத்தார்கள். அந்த வழியில் போகிற மாடுகள் அவற்றில் சொறிந்து கொண்டு தினவு தீர்ந்தன. இப்படிச் சின்ன விஷயங்களைக் கூடப் பரம தர்மமாக நினைத்து கோவுக்குச் செய்த தேசத்தில் நாம் அதை எலும்பும் கூடுமாக்குகிறோம். வதையாவதற்கு விடுகிறோம் என்றால் அது நமக்குப் பெரிய அபக்யாதி.



**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

*நன்றி*: **தெய்வத்தின் குரல் ஏழாம் பகுதி**

*தொகுப்பாசிரியர்*: **ரா. கணபதி**

*வெளியீடு*: **வானதி பதிப்பகம்**

கண் முன்னே காட்டுகிறார்.

ஹனுமாருடைய மதுரமான பேச்சுக்களால் மகிழ்ந்து, லக்ஷ்மணனைப் பார்த்துச் சொல்கிறாராம் ஸ்ரீராமன்.

"சுமித்திரை மைந்தனே! இந்த வானரன், பேச்சுத் திறனில் நிகரற்றவனாக விளங்குவதைப் பார்த்தாயா...? இவனது பேச்சிலிருந்து, இவன் ரிக் வேதம், ஸாம வேதம், யஜுர் வேதம் ஆகியவற்றைக் கசடறக் கற்றவனாகத் தெரிகிறது. ஸ்பஷ்டமாகவும் நிதானமாகவும் இலக்கணப் பிழையின்றியும் இனிமையாகவும் மரியாதை கலந்தும் பேசுவதால் இவன் நவ வ்யாகரணம் அறிந்தவனாக இருக்க வேண்டும். தவிர, இவனது பேச்சில் ஒரு இடத்தில்கூட அபசப்தம் (தவறான வார்த்தை) இல்லை பார்த்தாயா?

"இத்தகைய குணங்களையுடைய ஒருவனை தூதனாகவோ, மந்திரியாகவோ யாரொருவன் பெற்றிருக்கிறானோ, அந்த அரசன் எல்லா காரியங்களிலும் வெற்றி பெறுவது நிச்சயம்."

- ராமபிரானே ஹனுமானது பேச்சுத் திறனை இத்தனை தூரம் கொண்டாடுகிறான் என்றால், ஒரு மனிதன் எவ்வாறு பேச வேண்டும் என்பதற்கு ஹனுமானே உதாரண புருஷனாகி விடுகிறான்.

இது மட்டுமா...? ஹனுமானிடமிருந்து அறிந்து கொள்ள இன்னும் எத்தனையெத்தனை குணங்கள் உள்ளன!

கம்பனது காப்பியத்திலும் ராமபிரான் ஹனுமானைக் கொண்டாடும் பாடல் வருகிறது:

*"ஆற்றலும் நிறைவும் கல்வி அமைதியும்*
*அறிவும் என்னும்*
*வேற்றுமை இவனோடு இல்லை"*

என்கிறார் கம்பன். அது மட்டுமல்ல....

*"இல்லாத உலகத்து எங்கும் இவன்*
*இசைகள் கூறக்*
*கல்லாத கலையும் வேதக் கடலே*
*என்னும் காட்சி*
*சொல்லாலே தோன்றிற்றன்றே*
*யார்கொல் **இச்சொல்லின் செல்வன்***

என்றும் பாடுவது கம்பன்தான்.

'சொல்லின் செல்வன்' என்ற பட்டத்தை முதல் சந்திப்பிலேயே ஹனுமானுக்குச் சூட்டி விட்டான் ஸ்ரீராமன்!

(வளரும்)




எங்களிடம் ராசிக்கல் மோதிரம் வாங்கி பயன்பெறும் அனைவருக்கும் எங்களது வாழ்த்துக்கள்

ராசிக்கல் மோதிரம் வாங்க ராசியான கடை P.R. ஜுவல்லரி

# P.R. JEWELLERY

GOLD, SILVER, DIAMOND & BIRTH STONES

102, USMAN ROAD, T. NAGAR, CHENNAI - 600 017. PH: 4344442, 4327764

TUESDAY HOLIDAY (10.00 AM to 1.30 — 3.30 PM to 8.00 PM)



**P.R. ஜுவல்லரியில் ராசிக்கல் மோதிரம் வாங்கி அணிந்துபயன்பெறுங்கள். ஒவ்வொரு ராசிக்கும் மோதிரம் ரூ. 400/-**

| நட்சத்திரம் | ராசி | ராசிக்கேற்றகல் | கல்லின் எடை | வெள்ளி மோதிரம் விலை | இன்சூர் தபால் செலவு |
|---|---|---|---|---|---|
| அசுவினி, பரணி, கார்த்திகை முதல் பாதம் முடிய | மேஷம் | பவழம் | 2 CARAT | 400/- | 50/- |
| கார்த்திகை 2-ம் பாதம், ரோகிணி, மிருகசீரிஷம் 2ம் பாதம் முடிய | ரிஷபம் | வைரம் | 5 CENT | 2250/- | 200/- |
| மிருகசீரிசம் 3-ம் பாதம், திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் முடிய | மிதுனம் | மரகதபச்சை | 20 CENT | 400/- | 50/- |
| புனர்பூசம் 4ம் பாதம், பூசம், ஆயில்யம் முடிய | கடகம் | முத்து | 2 CARAT | 400/- | 50/- |
| மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய | சிம்மம் | மாணிக்கம் | 20 CENT | 400/- | 50/- |
| உத்திரம் 2ம் பாதம் முதல், அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் முடிய | கன்னி | மரகத பச்சை | 20 CENT | 400/- | 50/- |
| சித்திரை 3-ம் பாதம் முதல், சுவாதி, விசாகம் 3ம் பாதம் முடிய | துலாம் | வைரம் | 5 CENT | 2250/- | 200/- |
| விசாகம் 4ம் பாதம் முதல், அனுஷம், கேட்டை முடிய | விருச்சிகம் | பவழம் | 2 CARAT | 400/- | 50/- |
| மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய | தனுசு | புஷ்பராகம் | 1 CARAT | 400/- | 50/- |
| உத்திராடம் 2ம் பாதம், திருவோணம் அவிட்டம் 2-ம் பாதம் முடிய | மகரம் | நீலம் | 20 CENT | 400/- | 50/- |
| அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3ம் பாதம் முடிய | கும்பம் | நீலம் | 20 CENT | 400/- | 50/- |
| பூரட்டாதி 4ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய | மீனம் | புஷ்பராகம் | 1 CARAT | 400/- | 50/- |
| தனுசு, மீன ராசிக்காரர்கள் கனக புஷ்பராக மோதிரமும் அணியலாம் | | | 25 CENT | 500/- | 60/- |
| ராகு, கோமேதகம் | | | 50 CENT | 400/- | 50/- |
| கேது, வைடூரியம் | | | 20 CENT | 400/- | 50/- |
| அனைவரும் அணியக்கூடியது கார்னெட் வெள்ளி மோதிரம் | | | 2 CARAT | 400/- | 50/- |

*** நவரத்தினம் மோதிரம் அணிந்தால் மிகவும் நல்லது. *** WE ACCEPT MASTER CARD/VISA CARDS

அனைவரும் அணியக்கூடியது கார்னெட் மோதிரம் ரூ. 400/- கார்னெட் மோதிரம் அணிந்தால் செல்வ வளம் பெருகும். வியாபாரம், படிப்பு, ஞாபக சக்தி அதிகரிக்கும்.

குறிப்பு : புஷ்பராகம், வைரம், நவரத்தினம், ஆகிய மோதிரங்கள் வெள்ளியிலும், தங்கத்திலும் அணியலாம்.
மீதி அனைத்து ராசிக்கல் மோதிரங்கள் வெள்ளியில் அணிய வேண்டும். வெள்ளியில் அணிந்தால் பலன் அதிகம். மேற்படி ராசிக்கல் மோதிரம் நம்பிக்கையுடன் அணிந்து முயற்சி செய்தால், கல்வி, தொழில், வேலை வாய்ப்பு, வியாபாரம், அனைத்திலும் 100 சதவீத வெற்றி கிடைக்கும்.

* எங்களிடம் நியூமராலஜி படியும் கல் மோதிரங்கள் கிடைக்கும் * திருக்கணித பஞ்சாங்கப்படி கம்ப்யூட்டர் ஜாதகம் ரூ. 50/-

**குறிப்பு: எங்கு ஜோதிடம் பார்த்தாலும் எங்களிடம் வந்து ரூ. 400/-க்கு ராசிக்கல் மோதிரம் வாங்கி பயன்பெறுங்கள். ஒரிஜினல் கல் என முழு உத்திரவாதம் தருகிறோம்.**

முகவரி தெளிவாக எழுதவும். (எமது சிறப்புப் பேட்டியை விஜய் டி.வி.யில் திங்கள், புதன் காலை 9.00 மணிக்கும் ஜெயா டி.வி.யில்

# மௌனத் ஆர்கன் ஆண்டாள்!

• பிறந்த நாள் மெழுகுவர்த்தியை அணைக்கிறது...



"உங்க கண்ணுக்கு வேணும்னா அது யானையா தெரியலாம். எனக்கு அது குழந்தை" என்கிறார் ஸ்ரீதரன். அவர் சொல்வது ஸ்ரீரங்கம் கோயிலின் பதி மூன்று வயது யானையை!

"பொதுவாக, ஒரு யானை கோயிலுக் கென்று வந்தால் சில நாள் பயிற்சி பெற்று பணிகளில் ஈடுபடுத்தப்படும். இந்த யானை அப்படி இல்லை. தன்னோட ஒன்பது வயசுல, புரட் டாசி முப்பத்தியோராம் நாள் இங்க வந்தது. மறுநாள் ஐப்பசி மாதப் பிறப்பு. அன்று துலா ஸ்நானம். காவிரி நதியில் இருந்து பொற்குடம் நிறைய புனித நீர் சுமந்து அரங் கனுக்கு ஸ்நானம் செய்விக்கப்பட, கம்பீரமாய் நடை நடந்து வந்தது" என்கிறார் அதன் பாதுகாவல ரான இந்த ஸ்ரீதரன்.

கோயிலில் தினமும் காலை 6:15 மணிக்கு விஸ்வரூப தரிசனம். அரங் கரின் சன்னதிக்கு எதிரே இருக்கும் சந் தன மண்டபத்தில் நின்று இந்த ஆண் டாள் (யானையின் பெயர்!) ரெங்கா... ரெங்கா... ரெங்கா... என மூன்று முறை குரல் ஒலி கொடுத்து விட்டுத்தான் அன்றைய தினத்தைத் துவக்கு கின்றது.



• சலங்கை கட்டி டான்ஸ்

இதன் உணவுப் பழக் கம் மிகவும் அலாதியானது.

காப்பி, அதுவும் நல்ல ருசியான காப்பிதான் அதற் குப் பிடிக்கும். யானை வளர் கூடத்தையொட்டி ரோட்டில் ஒரு ஐஸ் வண்டி சத்தம், நிலக் கடலை வண்டி சத்தம் கேட்டு விட்டால் போதும். இருப்பிடத்தில் இருந்தவாறே தனக்குப் பிரியமானவைகளை வாங்கித் தருமாறு சைகை செய்யும்.

வாழைப்பழங்களை பெரும்பா லும் தோலை உரித்து விட்டுத்தான் சாப்பிடுகிறது. துதிக்கையின் நுனியில் வைத்து வெகு லாவகமாய் வாழைப் பழத் தோலை சட் டென அதிலிருந்து நீக்கி விடுகிறாள் இந்த ஆண்டாள்.

வழக்கமாகச் சாப்பிடு பவைகளில் ஏதேனும் ஒன்று திடீரென இதற்குப் பிடிக்காமல் போனால் எத்தனை வற்புறுத்தி னாலும் அதனை முகர்ந்து கூடப் பார்க்காது.

யானை வளர் கூடத்தில் ஒரு ஓரப் பகுதிதான் யானைப் பாதுகாவலரின்

இருப்பிடமாக அமைந்துள்ளது. இதுவரையில் ஒரு நாள் கூட யானையைச் சங்கிலியால் பிணைத்துப் போட்டதில்லை. எந்நேரமும் அதற்கு சுதந்தர உலாதான்!

ஒவ்வொரு ஆண்டின் நவராத்திரி வைபவங்களின் போதும் தாயாருக்கு ஆண்டாள் வெண்சாமரம் வீசி விடும். மௌத் ஆர்கன் வாசிக்கும். தாயார் சன்னதிக்கு எதிரே அமைந்துள்ள மண்டபத்தில் யானை நடனமாடும். நான்கு கால்களிலும் சலங்கைகளுடன் கூடிய கொலுசினைக் கட்டிக் கொண்டு பதினாறு அடிகள் எடுத்து வைத்து, ஒலியசைவுகளுடன் நடனம் ஆடிக் காட்டும். திரும்பி வரும்போது பூலோக ஒலிம்பிக்கில் தங்கப் பதக்கம் பெற்று விட்ட களிப்பில் துதிக்கையை உயரத் தூக்கி அனைவர்க்கும் வணக்கம் சொல்லியவாறு மெல்ல நடந்து வரும்.

ஒவ்வொரு ஆண்டும் தன் பிறந்த நாளைக் குதூகலமாய்க் கொண்டாடி வருகிறாள் ஆண்டாள். அன்று முழுவதும் குஷி மூடுதான். பேக்கரியிலிருந்து பெரிய சைஸ் கேக் கொண்டு வரப்படும். துதிக்கையின் துவாரத்திலிருந்து வெளிவரும் காற்றின் விசையால் எரிந்து கொண்டிருக்கும் மெழுகு வர்த்திகளை புஸ்ஸென்று அணைத்து விட்டு, ஆரம்பிக்கும் அதன் பிறந்த நாள் கொண்டாட்டங்களை. ஒரு நீண்ட கத்தியின் மரக் கைப்பிடி அதன் துதிக்கைக்குள் பொதிந்து கொள்ள கத்தியின் மறு முனையை ஆண்டாளின் பாதுகாவலர் பிடித்துக் கொள்ள, பிறந்த நாள் கேக்கை வெட்டுவாள் ஆண்டாள். பின்னர் எல்லோர்க்கும் பகிர்ந்து அளிக்கப்படும்.

"அது ஒரு யானையின் பிறந்த நாள் அல்ல; ஆண்டாள் எனும் ஒரு குழந்தையின் பிறந்த நாள்!" என்கிறார் ஸ்ரீதரன்.

**ப**தினாறு ஆண்டுகளுக்கு முன்னர் ஸ்ரீரங்கம், அகோபிலமடத்து கிருஷ்ணன் குட்டி என்கிற யானைக்கு மதம் பிடித்துப் போய் யானைப்பாகர் பத்மனாப பணிக்கரை அதன் தந்தத்தால் குத்தி அவரை வதம் செய்து விட்டது. அதன் பின்னரும் யானைக்கு மதம் அடங்காமல் இருக்கவே யானைப் பாகர்கள் பலரது முயற்சிகளும் தோல்வியைத் தழுவின. அந்த நிலையில் அதனுடன் இயல்பாகச் சென்று சாதுர்யமாக அந்த யானையை ஒரு கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்தவர் இந்த ஆண்டாளின் பாதுகாவலர் ஸ்ரீதரன்!

**— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

## 'நெட்'டில் நம்பர் ஒன் நாடு!

**மி**க அதிகமான மக்கள் இன்டர்நெட் வசதியை வைத்திருக்கும் நாடு என்ற பெருமை ஸ்வீடனுக்குத்தான். மக்கள் தொகையில் 55 சதவீதம் பேர் இன்டர்நெட் வசதி படைத்தவர்கள். மொத்த தேசிய வருமானத்தில் 3.8 சதவீதத்தை இன்டர்நெட் தொடர்பான ஆராய்ச்சிகளுக்காக செலவழிக்கிறது ஸ்வீடன். பிற ஐரோப்பிய நாடுகளோடு ஒப்பிடும் போது இது மிக அதிகம்.

டாட்காம் நிறுவனங்கள் இப்போது ஐரோப்பாவை நோக்கி படையெடுக்கத் தொடங்கியுள்ளன. இங்கிலாந்து ஜெர்மனி ஆகிய நாடுகளை விடவும் ஸ்வீடனில் முக்கியமாக அதன் தலைநகரான ஸ்டாக்ஹோமில் ஆர்வம் காட்டுகிறார்கள் போர்ட்டல் வியாபாரிகள்.

• ஸ்வீடன்



அமெரிக்காவின் சிலிக்கன் பள்ளத்தாக்குக்கும் ஸ்டாக்ஹோமுக்கும் பல ஒற்றுமைகள். ஸ்வீடனில் குறைவான எண்ணிக்கையில் அமைந்த சில கல்வி நிறுவனங்களிலிருந்துதான் எல்லோருமே பட்டப் படிப்பை முடிக்கிறார்கள். அவர்கள் வாழ்வதும் பணிபுரிவதும் கூட வெகு அருகாமையிலேயே அமைகிறது.

ஸ்வீடனில் கம்ப்யூட்டர் ஞானம் பெற்றவர்கள் அதிகம். எண்பதுகளிலும் தொண்ணூறுகளிலும் மற்றெந்த ஐரோப்பிய நாடுகளையும் விட ஸ்வீடனிலிருந்துதான் பல கம்ப்யூட்டர் வித்தகர்கள் சிலிக்கான் பள்ளத்தாக்குக்கு வந்து சேர்ந்தனர். அமெரிக்கா என்றாலே ஒரு இலேசான ஏளனம் உண்டு பல ஐரோப்பிய நாடுகளுக்கு. ஆனால் ஸ்வீடன் அந்தப் பட்டியலில் இல்லை.

அது மட்டுமல்ல. ஸ்வீடன் பல்கலைக்கழகங்கள் இன்டர்நெட்டின் மைய விஷயங்களை கல்லூரி அளவிலேயே மாணவர்களுக்கு ஆழமாகக் கற்றுத் தருவதால், பட்டப் படிப்பை முடிக்கும் போதே இன்டர்நெட் குறித்த நுண்ணிய, ஆழமான அறிவைப் பெற்றிருக்கிறார்கள் அவர்கள்.

**— ஜி.**

# வரவேற்போம் நவராத்திரியை சுவையான சுண்டலுடன்!
# தயாரிப்போம் சுண்டலை திருப்தி® நான் ஸ்டிக் குக்வேருடன்!!



- எண்ணெய், எரிபொருள், நேரம் மிச்சமாகிறது.
- நீடித்த உழைப்பு மற்றும் எழில்
- சமைக்கவும், சுத்தம் செய்யவும் சுலபமானது.
- எல்லா வைபவங்களிலும் அன்பளிப்பாய் வழங்கிட பொருத்தமானது.

IS:1660



PART 1




The ultimate in cookware. Anywhere




நான்-ஸ்டிக் குக்வேர்

**TRUPTI ENTERPRISE**

Ferrodie Premises, C-43, Rd. No. 22, Wagle Estate, Thane - 400604. Tel: 5821242/43, 5810108. Fax: (022)-5822652

**Distributors in Tamilnadu:- Chennai:** E R B Enterprises (Tel 2481395) * **Coimbatore:** Sri Kirti Stores (Tel 392070) * **Pondicherry:** Vijaya Agencies (Tel 338821)

**Dealers in CHENNAI:-** Aminjkarai: **Amara Stores** (6216181) * Anna Nagar: **Novelty Palace** (6215275); **Santosh Super Stores; Sekar Stores** (6289691); **Yes Yes Super Market** (6215611) * Chrompet: **Shree Super Market** - Evening Bazaar. **Ethijai Home Needs** (5358477) * Kilpauk: **Mummy Daddy** (6412995) * Kodambakkam **Sekar Stores** (4833163) * Mandaveli: **Bright Metals**-Mount Road: **Poppat Jamal & Co** ( 8523532); **S. Ibrahim & Co** (8520327) * Mylapore: **A. Thangavel Nadar Sons** (4952290); **Nilgiris Dairy Farm Ltd**(8275111)- Purasawalkam: **Hameetha & Co** (6424410); **United Trading Co** (6422441) * Pondy Bazaar: **Ratna Stores** (4343510); **Ponny Stores** (4346634) * Pallavaram: **Prakash Vessel Store** (2381901); **Singapore Shoppee*** Tambaram: **Shoppers World; (East) Come N. Carry** (2379991) * T. Nagar: **Saravana Stores; Sunder Stores** (4343834) * Valasaravakkam: **Latha Stores** ( 4866065)* Tanjore: **Punniamurthy Pillai Dept. Store** (30964) * VELLORE: **Bright Stell House** (224390); **Maharani Collections** ( 223024)

# நடராஜரை மீட்க நிஜாம் போட்ட வழக்கு!

தஞ்சை மாவட்டத்தின் எல்லைப் பகுதிச் சோதனைச் சாவடி. வழக்கமான சோதனைப் பணிகளில் ஈடுபட்டிருக்கும் காவலர்கள், நிற்கச் சொல்லியும் கண்டுகொள்ளாமல் விரையும் ஒரு வேனை வளைத்துப் பிடிக்கிறார்கள். வேனை சோதனையிட்டால் உள்ளே சாக்குப் பைகளில் சுற்றி வைக்கப்பட்ட சாமி சிலைகள். மொத்தம் எட்டு வெண்கலச் சிலைகள் – சோழர் காலத்தவை. விசாரிக்க வேண்டிய விதத்தில் விசாரித்தவுடன் விவரம் வெளி வருகிறது.

அந்தச் சிலைகள் அனைத்தும் தஞ்சை மாவட்டம் பாத்தூர் சிவன் கோயிலைச் சேர்ந்தவை. கலை நயம் மிக்க அந்தச் சிலைகளைக் கடத்தி, 'காசு' பண்ணப் பார்த்திருக்கிறார்கள். இது நடந்தது 1986ல்.



• நடராஜர் சிவகாமி

அதைவிட அதிர்ச்சியான தகவல், அதே கோயிலுக்குச் சொந்தமான கலைநயம்மிக்க நடராஜர் சிலையை அதற்குச் சில வருடங்களுக்கு முன் கடத்திச் சென்று விற்று விட்டார்கள் என்பது தான். நல்லவேளையாக நடராஜரின் உடனுறை அம்மனான சிவகாமி, சோமாஸ்கந்தர், பிக்ஷாடனர், தனி அம்மன், விநாயகர், முருகன், அப்பர், சுந்தரர் சிலைகள் கடத்தல் கோஷ்டிக்கு விற்கப்படுவதற்கு முன்பே பிடிபட்டு விட்டன.

கோயிலை விட்டு சிலைகள் எப்படி வெளியே வந்தன?

பாத்தூர் ஒரு பாடல் பெற்ற ஸ்தலம். அங்குள்ள சிவன் கோயில் புராதனமானது. எந்த காலம் என்று குறிப்பிட்டுச் சொல்ல முடியாது; ஆனால் முஸ்லீம்களின் படையெடுப்பு காரணமாகவோ அல்லது வேறு காரணங்களை முன்னிட்டோ உற்சவர் மற்றும் எட்டு வெண்கலச் சிலைகள் கோயில் பக்கத்திலேயே பள்ளம் வெட்டப்பட்டு அதில் பத்திரப் படுத்தப்பட்டிருக்கின்றன. 1970ன் இறுதியில், கோயில் காவலாளி ஒருவித



• பாத்தூர் சிவன் கோயில் சிலைகள்

குடிசை கட்டுவதற்காக, குழி தோண்டிய போது ஒன்பது சிலைகள் கிடைத்தன. யாருக்கும் தெரியாமல் அவற்றை எடுத்து, பக்கத்திலேயே இன்னுமொரு பள்ளத்தைத் தோண்டி அதில் ஒன்பது சிலைகளை வைத்து, மேலே வைக்கோலைப் போட்டு, மண்ணை நிரவி விட்டார் அவர். ஒன்றிரண்டு வருடங்களுக்குப் பிறகு நடராஜர் சிலையை மட்டும் எடுத்து 500 ரூபாய்க்கு விற்று விட்டார் காவலாளி. அதற்குச் சில வருடங்களுக்குப் பின், மற்ற சிலைகளை மொத்தமாக விற்கச் சென்ற போதுதான் மாட்டிக் கொண்டார்.

என்னிடம் இந்த வழக்கு வந்ததற்கு காரணம், பாத்தூர் கோயில் பக்கத்தில் பள்ளத்தில் இருந்த சிலைகள் இவைதானா என்பதை உறுதிசெய்வதற்குத்தான். சிலைகள் மேல் படிந்திருந்த மண் துகள்களையும், பாத்தூர் கோயில் அருகில் சிலைகள் புதைத்து வைக்கப்பட்டிருந்த இடத்து மண்ணையும் ஒப்புநோக்கி சோதனை செய்து பார்த்தேன். மண் பார்ப்பதற்கு ஒரே மாதிரி இருந்தாலும், ஓரடிக்கு ஓரடி இடைவெளியில் உள்ள மண்வாகு கூட வித்தியாசப்படும். என்னுடைய மண் சோதனையில் சிலைகள், பாத்தூர் கோயில் பக்கத்தில் உள்ள பள்ளத்தில் இருந்தவைதான் என்று உறுதி செய்யப்பட்டது.

இது சம்பந்தமாக வழக்குப் பதிவுசெய்யப்பட்டு விசாரணை துவங்கியது. ஆனால் போலீஸ் அதிகாரியான ராமகிருஷ்ணன் அவர்களுக்குப் படபடப்பு குறையவில்லை. இதே சிலைக் குழுமத்தைச் (Group of Idols) சேர்ந்த நடராஜர் இப்போது எங்கிருக்கிறார்? அவரைக் கண்டுபிடிக்க வேண்டும் என்று மனது அரிக்கத் துவங்கி விட்டதுதான் காரணம். விசாரணை செய்த போது மும்பை வரை நடராஜர் சிலை சென்றதற்கான ஆதாரங்கள் தெரியவந்தன. அதன்பின் என்ன நடந்தது என்று தெரியவில்லை. இந்தியா முழுக்க மட்டுமல்லாமல், சர்வதேச போலீஸுக்கும் (Interpol) தகவல் கொடுத்து விசாரிக்கச் சொன்னார் ராமகிருஷ்ணன். சில காலம் கழித்து, ஒரு முற்பகலில் இண்டர்போலிடமிருந்து மகிழ்ச்சி தரத்தக்க தகவல் ஒன்று வந்தது. கனடா நாட்டைச் சேர்ந்த எண்ணெய் நிறுவனம் ஒன்று நடராஜர் சிலை ஒன்றை லண்டன் மியூஸியம் கியூரேட்டரிடம் (Curator) சுத்தப்படுத்துவதற்காகக் கொடுத்திருக்கிறது என்பதுதான் அந்தத் தகவல். அந்த மகிழ்ச்சியான தகவலுடன் என்னிடம் வந்தார் ராமகிருஷ்ணன்.

அடுத்த சில நாட்களில் விறுவிறுவென காரியங்கள் நடந்தன. லண்டன் மியூஸியத்தில் சுத்தப்படுத்தப்படுவதற்காகக் கொடுக்கப்பட்டவர் பாத்தூர் நடராஜர்தான் என்பது தெளிவாயிற்று. இந்தியாவிலிருந்து கடத்திக் கொண்டு போகப்பட்டதென்றாலும், நம்முடைய போலீஸ் அதைக் கொண்டு வர முடியாது. அதற்காகச் சில வழிமுறைகள் இருக்கின்றன. பிரிட்டன் நீதித்துறை மூலமாக அந்தச் சிலை, இந்தியாவில் உள்ள பாத்தூர் நடராஜர் கோயிலைச் சேர்ந்ததுதான் என்று நிரூபித்த பிறகே கொண்டு வர முடியும்.

**தடய அறிவியல் நிபுணர் டாக்டர்**
**பி. சந்திரசேகரன்**



எப்படி நிரூபிப்பது?

முதலில் திருடப்பட்ட சொத்துக்குரியவர், அதனை மீட்பதற்காக கேஸ் போட வேண்டும். நமது நாட்டில் நடைமுறையில் உள்ள இந்து சட்டப்படி கடவுளர்கள் உயிருள்ளவர்களாகக் கருதப்படுகிறார்கள். அவர்கள் யார் மீதும் வழக்குப் போடலாம். மற்றவர்களும் அவர்கள் மீது வழக்குப் போடலாம்! எனவே நடராஜரை மீட்க, அவரது துணைவியார் சிவகாமி அம்மன் சார்பாக வழக்குப் போடுவது என்று முடிவெடுக்கப்பட்டது.

சிவகாமி சார்பில் லண்டன் கோர்ட்டில் அதிகாரிகள் மற்றும் கோயில் தர்மகர்த்தா மனுதாக்கல் செய்தார்கள். முதன் முறையாக



**''எந்தத் தொண்டனும் தன் காலில் விழக் கூடாதுன்னு தலைவர் ரொம்பக் கண்டிஷனா இருக்கிறாராமே, ஏன்?''**

**''வாரி விட்டுடப் போறானேன்ற பயம்தான்!''**

**— மலர் சூர்யா**

இந்து சட்டங்கள் பிரிட்டன் நீதித் துறையில் ஏற்றுக் கொள்ளப்பட்டன! ராயல் ஹைகோர்ட் ஆஃப் லண்டன் நீதிபதி கென்னடி அவர்களிடம், வழக்கு விசாரணைக்குச் சென்றது.

''தமிழகத்தில் இருந்த மற்ற எட்டு சிலைகளுடன் சேர்ந்து இருந்தவர் நடராஜர். அத்தனை சிலைகளும் ஒட்டு மொத்தமாக ஒரே சிற்பியால் செய்யப்பட்டவை'' என்று முதலில் நிரூபிக்கலாம் என்று முடிவு செய்தோம். அப்போதுதான் தாத்தா மாணிக்கம்பிள்ளையிடம் நான் சிறிது கற்ற சிற்ப சாஸ்திரங்கள் உதவிக்கு வந்தன. ஒரு சிற்பி ஒரு கோயிலுக்காக சிலைகள் செய்தாரென்றால் முக்கியமான உற்சவர் சிலையுடன் ஒப்பிடும்போது மற்ற சிலைகளின் உயரம் குறிப்பிட்ட விகிதத்தில் தான் இருக்கும். எந்த ராஜா சிலைகள் செய்ய உத்தரவிடுகிறாரோ அவரின் கட்டை விரலை வைத்துத்தான் சிலை அளவுகளை நிர்ணயிப்பார்கள்.

நாங்கள் முதலில் லண்டனில் இருந்த நடராஜர் சிலையின் உயரம் மற்றும் அகலங்களைத் தெரிந்து கொண்டு, தெளிவான புகைப்படங்களைப் பெற்றோம். சென்னையில் அந்த நடராஜரை உண்மையான அளவுகளுடன் Life sizeக்குக் கட் செய்தோம். அரசியல்வாதிகளுக்குக் கட்-அவுட் வைக்கும் கலாசாரம் துவங்கும் முன் கடவுளுக்கு கட்-அவுட் வைத்தவன் நான் என்று சொல்லலாம்!

கட்-அவுட் நடராஜர் பக்கத்தில் மற்ற சிலைகளை வைத்து ஒப்பிட்டுப் பார்த்தோம். சிற்ப சாஸ்திரப்படி அந்தச் சிலைகளின் உயரங்கள் நடராஜர் சிலை உயரத்தின் குறிப்பிட்ட விகிதாசாரத்தில் வடிக்கப்பட்டிருந்தன.

ஆனால் இந்த ஆதாரம் மட்டும் போதாது என்று சொல்லி விட்டார்கள். காரணம் வேறொரு சிற்பி மற்றோர் கோயிலுக்காக அதே அளவுள்ள சிலைகளைச் செய்திருக்கலாமல்லவா! அதன் பின்தான் மண் பரிசோதனை துவங்கியது. நடராஜரின் சிலையில் ஆங்காங்கே ஒட்டிக் கொண்டிருந்த மண் துகள்கள் சேகரிக்கப்பட்டன. அந்த மண்ணும், பாத்தூர் நடராஜர் கோயில் பக்கத்தில் சிலைகள் புதைக்கப்பட்ட இடத்து மண்ணும் ஒப்புநோக்கிச் சோதனை செய்து பார்க்கப்பட்டது. இது தவிர மற்ற சிலைகளின் மீதுள்ள மண்ணும் எடுத்து, மூன்றுவித மண்ணும் பரிசோதிக்கப்பட்டதால், அனைத்தும் ஒரே குணாம்சமுள்ள, ஒரே இடத்து மண் என்பது நிரூபிக்கப்பட்டது. இது தவிர நடராஜர் சிலையிலிருந்த உலோகமும் சாம்பிள் எடுக்கப்பட்டு மற்ற சிலைகளில் உள்ள உலோகத்தோடு ஒப்புநோக்கப்பட்டது. அனைத்து சிலைகளிலும் உலோகம் ஒரே வகையானது என்பதும் தெரியவந்தது.

கடத்தப்பட்ட சிலையை வாங்கிய கனடா நாட்டு நிறுவனம், சுலபத்தில் விட்டுக் கொடுப்பதாக இல்லை. பாகிஸ்தான் பிரிவினைக்கு முன்பு பஞ்சாபில் உள்ள இந்துக் குடும்பத்திடமிருந்து அந்தச் சிலையை வாங்கியதாகச் சொன்னது.



''டாக்டர்! ஆறாம் நம்பர் பேஷண்ட் பிழைச்சுட்டார்!''

''என்ன! இன்னும் அவருக்கு ஆபரேஷனே செய்யலையே?''

''அதான் டாக்டர். விஷயம் தெரிஞ்சு தப்பி ஓடிப் பிழைச்சுட்டார்!''

– டி. பசுபதி

இந்தச் சமயத்தில்தான் தொல்பொருள் ஆராய்ச்சியாளர் டாக்டர் நாகசாமி உதவிக்கு வந்தார். "ஒரு அடிக்கும் உயரமான எந்தச் சிலையையும் வீட்டில் வைத்து இந்துக் குடும்பங்களில் வணங்க மாட்டார்கள்; ஏனென்றால் அப்படிச் செய்தால் ஆகமவிதிகள் படி பூஜை செய்ய வேண்டியிருக்கும்'' என்று அந்த நிறுவனத்தின் வாதத்தை உடைத்தார். இது தவிர அந்தச் சிலைகள் தமிழகத்தைச் சார்ந்த சிலைகள்தான் என்றும் வரலாற்றுச் சான்றுகளோடு நிரூபித்தார்.

இருந்தாலும் நீதிபதி கென்னடியின் முன் இன்னமும் வலுவான வாதங்களை வைக்க வேண்டியதாக இருந்தது.

பொதுவாக காவல் அதிகாரிகள் முதல் தகவல் அறிக்கையைப் பதிவுசெய்யும் போது சில சின்ன விஷயங்களைக் கண்டு கொள்ள மாட்டார்கள். ஆனால் ராமகிருஷ்ணன் ஒரு குறிப்பிட்ட விஷயத்தை முதல் தகவல் அறிக்கையில் சொல்லியிருந்தார். அதாவது சிலைகள் பூமியில் புதைக்கப்பட்டு, மேலே, வைக்கோல் போடப்பட்டு மண்ணால் மூடப்பட்டிருந்ததைச் சொல்லியிருந்தார் அவர். எனக்கு மின்னலடித்தது. ஈரமான மண் + வைக்கோல் ஆகியவைகளால் பல்லாண்டுகளாகப் பாதுகாக்கப்பட்ட சிலைகள் ஆதலால், அந்தச் சிலைகளின் மேல் கறையான் கூடு (Exploratory Termite Gallery) கட்டியிருந்தது நினைவுக்கு வந்தது. நடராஜர் மேல் இருந்த கறையான் கூடு தடயங்களும், மற்ற சிலைகளின் மேலுள்ள கறையான் தடயங்களும் ஒரே மாதிரியாக இருந்தன. ஆனால் அதைக் கோர்ட்டில் ஆதாரபூர்வமாக நிரூபிக்க வேண்டுமே!

உலகில் பல்வேறு நாடுகளில் உள்ள என் நண்பர்களுக்கு 'கறையான் ஆராய்ச்சியாளர்கள் யாராவது இருக்கிறார்களா?' என்று கேட்டு கடிதம் எழுதினேன். வெளிநாட்டிலிருந்த என் நண்பரொருவர், "உங்க ஊரிலேயே இருக்கிறாரேப்பா?'' என்று கூறி டேராடூனைச் சேர்ந்த டாக்டர் சென் என்பவரின் முகவரியைக் கொடுத்தார். உடனே சென் அவர்களைத் தொடர்பு கொண்டோம். அவர் எல்லா சிலைகளின் மேலிருந்த கறையான் கூடுகளையும் ஆராய்ச்சி செய்து, "நெல் விளையக்கூடிய சதுப்பு நிலப் பகுதியில்தான் இதுபோன்ற கறையான்கள் இருக்கும்'' என்று தெரிவித்தார்.

கோர்ட்டில் டாக்டர் சென்னின் அறிக்கை தாக்கல் செய்யப்பட்டது. லண்டன் மியூசியம் கியூரேடர் நடராஜர் சிலையைச் சுத்தப்படுத்தாமல் வைத்திருந்ததால்தான் இந்த ஆதாரத்தைச் சமர்ப்பிக்க முடிந்தது.

தீர்ப்பு நாளை எதிர்நோக்கிக் காத்திருந்தோம். இந்த நிலையில்தான் இறுதிக்கட்ட விசாரணை வந்தது. நீதிபதி கென்னடி என்னைக் கேள்வி மேல் கேள்வி கேட்டு திணறடித்தார். அவருக்குத் திருப்தி தரும் வகையில் பதில்களைச் சொன்னேன். ஒரு கட்டத்தில், "ஓ.கே. மிஸ்டர் சந்திரசேகரன். இங்கு நடராஜர் இருக்கிறார். இரு பெண் சிலைகள் இருக்கின்றன. அவற்றில் ஒன்றை நடராஜர் துணைவியார் சிவகாமி அம்மன் என்கிறீர்கள். மற்றொன்றை தனி அம்மன் என்கிறீர்கள். எந்த அடிப்படையில் குறிப்பிட்டச் சிலையை நடராஜரின் உடனுறை அம்மனாகச் சொல்கிறீர்கள்; மற்றொரு பெண் சிலை நடராஜரின் துணைவியாக இருக்கக் கூடாதா?" என்று கேட்டார்.

எனக்கு உடனடியாக என்ன பதில் சொல்வதென்றே தெரியவில்லை. ஆடிப் போய் விட்டேன். தில்லையம்பதிவாழ் நடராஜரை வேண்டிக் கொண்டேன்.

(தொடரும்)

# பொன்னியின் செல்வன்



இருபத்து ஏழாம் அத்தியாயம்

## "நில் இங்கே!"

அமரர் கல்கி

பாதாளச் சிறையைப் பற்றிக் கூறியதும் சின்னப் பழுவேட்டரையருக்குப் பழைய நினைவுகள் வந்தன. சம்பிரதாய மரியாதைப் பேச்சை மறந்துவிட்டுக் கூறினார்:-

"ஆமாம்; நீ ஒரு தடவை பாதாளச் சிறைக்குப் போயிருக்கிறாய். இளைய பிராட்டியுடன் சென்றாய். உளவு அறிய வந்து தப்பி ஓடி விட்ட ஒற்றன் ஒருவனைப் பற்றித் தகவல் தெரிந்து கொள்ளப் போனீர்கள், இல்லையா?"

"இல்லை, ஐயா! தாங்கள் சொல்வது சரியல்ல. நாங்கள் அன்று பாதாளச் சிறைக்குப் போனது ஒற்றனைப் பற்றி அறிந்து கொள்வதற்காக அல்ல. பட்டத்து இளவரசர் ஆதித்த கரிகாலர் ஓலையுடன் அனுப்பியிருந்த தூதரைப் பற்றித் தெரிந்து கொள்ளப் போனோம்."

"அப்படி நீங்கள் எண்ணிக்கொண்டு போனீர்கள். அவன் ஒற்றனா, தூதனா என்பது உங்களுக்கு எப்படித் தெரியும்? நீ ஏதும் அறியாத சிறு பெண். உன்னோடு அதைப் பற்றி விவாதித்துப் பயனில்லை. நீங்கள் போனதுதான் போனீர்களே! அவரைப் பற்றி ஏதாவது தெரிந்து கொண்டீர்களா?"

"இல்லை. நாங்கள் எவனைப் பார்க்கப் போனோமோ, அவன் உங்களுக்குக் கூடத் தெரியாமல் விடுதலையாகிப்

போய் விட்டான். பழுவூர் இளையராணி நந்தினிதேவியின் கட்டளை எங்களை முந்திக்கொண்டு விட்டது. பாவம்! நீங்கள்தான் என்ன செய்வீர்கள்?"

சின்னப் பழுவேட்டரையர் உதடுகளைக் கடித்துக்கொண்டார். தமது எச்சரிக்கையைப் பொருட்படுத்தாமல் தம் தமையனார் இளையராணிக்கு அதிக இடம் கொடுத்து வந்தது இத்தகைய இளம் பெண்களுக்குக்கூட அல்லவா ஏச்சாகப் போய்விட்டது? இவ்விதம் தமது உள்ளத்தில் தோன்றிய அவமான உணர்ச்சியை வெளியில் காட்டிக் கொள்ளாமல், "உங்கள் பங்குக்கு நீங்களும் ஓர் அரைப் பைத்தியக்காரனை விடுதலை செய்தீர்கள்!" என்றார்.

"ஐயா! அரைப் பைத்தியம் என்று புஷ்ப சேவை செய்து வரும் சேந்தன் அமுதனைத்தானே சொல்கிறீர்கள்? அவரை அன்று விடுதலை செய்ததினால் இந்தச் சோழ நாடு எவ்வளவு பெரிய நன்மை அடைந்தது என்பதை அறிந்தால் ஆச்சரியப்பட்டுப் போவீர்கள்!"

"பெண்ணே! எனக்கு ஆச்சரியம் இனி ஒன்றிலுமே ஏற்படப் போவதில்லை. இந்தச் சோழ ராஜ்யம் யார் யாருக்கெல்லாம் நன்றிக்கடன் பட்டிருக்கிறது என்பதை நினைத்து ஆச்சரியப்பட்டுப் பட்டு எனக்கு அலுத்துப் போய் விட்டது. நீ கூட இப்போது ஏதோ ஒரு முக்கியமான நன்மையைச் சோழ நாட்டுக்குச் செய்வதற்காகத்தான் வந்திருக்கிறாய் அல்லவா?"

"ஆம், ஐயா! முக்கியமான காரியம் இல்லாவிட்டால் தங்கள் தமையனார் அனுப்பியிருப்பாரா? அதிலும் ஒன்றும் அறியாத அபலைப் பெண்ணாகிய என்னை அனுப்பியிருப்பாரா?"

"என் தமையனாருக்குப் புத்திசாலித்தனம் அதிகரித்துக் கொண்டுதான் வருகிறது. உன்னை அனுப்பியதிலிருந்தே அது தெரிகிறது. நீ கொண்டு வந்த செய்தியைச் சீக்கிரம் சொல்லி விடு!"

"பாண்டிய நாட்டுச் சதிகாரர்களைப் பற்றி அலட்சியமாயிருந்தது தவறு என்று தங்களிடம் கூறும்படி சொன்னார். வீர பாண்டியனுடைய ஆபத்துதவிகள் சிலர் உண்மையாகவே பயங்கரச் சதி செய்து வருகிறார்கள்; சோழ குலத்தைப் பழி வாங்க இன்று கெடு வைத்திருக்கிறார்கள்; சக்கரவர்த்தியைப் பத்திரமாய்ப் பாதுகாக்க வேண்டும் என்று எச்சரிக்கும்படி கூறினார்..."


தைக் கேட்ட காலாந்தக கண்டர் நகைத்தார். "இந்தப் பிரமாதமான செய்தியைத் தானா சொல்லி அனுப்பினார்? ஒருவேளை உன் பெரிய தகப்பனார் படை எடுத்து வரப் போவதைப் பற்றித்தான் தகவல் தெரிந்து சொல்லி அனுப்பினாரோ என்று பார்த்தேன். அவர் வெளியிலிருந்து கொடும்பாளூர் சைன்யத்தைப் பார்த்துக் கொண்டால், நான் கோட்டைக்குள்ளே சக்கரவர்த்திக்கு ஏதும் நேராமல் பார்த்துக் கொள்கிறேன். அதைப் பற்றி அவரும், நீயும், இளையபிராட்டியும் கூடக் கவலைப்பட வேண்டியதில்லை!" என்றார்.

"ஐயா! தாங்கள் இப்படி அலட்சியமாகக் கருதுவீர்கள் என்று தெரிந்து மேலும் ஒரு விஷயம் சொல்லி அனுப்பியிருக்கிறார். பழுவூர் இளையராணியின் அரண்மனைக்கு அடிக்கடி யாரோ மந்திரவாதி ஒருவன் வந்து போனது பற்றித் தாங்கள் எச்சரிக்கை செய்தீர்களாம். அதற்கு அவர் செவி கொடாமல், தங்களைக் கோபித்துக் கொண்டாராம். 'தம்பி! பெருங்குற்றம் செய்து விட்டேன். அந்த மந்திரவாதி ரவிதாஸன் என்பவன்தான் பாண்டியச் சதிகாரன். வீர பாண்டியனுடைய ஆபத்துதவிகளின் தலைவன். சோழ குலத்தை வேரோடு கருவறுக்கக் கங்கணம் கட்டிக் கொண்டிருப்பவன். அவனுடைய ஆள் ஒருவன் இன்றைக்குச் சக்கரவர்த்தியின் மீது பழி வாங்க முயலுவான். அலட்சியம வேண்டாம். சர்வ ஜாக்கிரதையுடனிருக்கவும்' – இதுவே பெரிய பழுவேட்டரையர் தங்களுக்கு அனுப்பிய செய்தி! என் கடமையை நான் செய்து விட்டேன்..."

காலாந்தக கண்டர் சிறிது திகைத்துத்

தான் போய் விட்டார். இம்மாதிரி செய்தியைப் பெரியவரைத் தவிர வேறு யாரும் அனுப்பியிருக்க முடியாது.

"பெண்ணே! இது உண்மையானால் அவர் ஏன் இங்கு உடனே வரவில்லை? உன்னை எதற்காக அனுப்பினார்...?"

"என்னை அவர் அனுப்பவில்லை. அவர் இளையபிராட்டியிடம் கூறினார். இளையபிராட்டி என்னை அனுப்பி வைத்தார். ஆதித்த கரிகாலருக்கும் இன்றைக்கே ஆபத்து வர இருக்கிறது. ஆகையால் அவரைக் காப்பாற்ற அவர் திரும்பிப் போயிருக்கிறார்."

"எங்கேயிருந்து? அவர் உங்களை எங்கே பார்த்தார்?"

"குடந்தையில் ஜோதிடர் வீட்டில் பார்த்தார். இன்னும் தங்களுக்குச் சந்தேகம் தெளியவில்லையானால் இதையும் கேளுங்கள். தங்கள் அண்ணன் படகில் கொள்ளிடத்தைத் தாண்டி வந்தபோது புயல் அடித்துப் படகு கவிழ்ந்துவிட்டது. தப்பிப் பிழைத்துக் கரையேறிப் பள்ளிப்படையில் படுத்திருந்தபோது சதிகாரர்கள் பேசியதைக் கேட்டுத் தெரிந்து கொண்டார். ஐயா! இன்னமும் இங்கேயே நின்று பேசிக் கொண்டிருக்க வேண்டுமா? அல்லது அரண்மனைக்குப் போகலாமா?"

"பெண்ணே! நீ சொன்னதெல்லாம் உண்மையாகவே இருக்கட்டும். எப்பேர்ப்பட்ட சதிகாரனாயிருந்தாலும் கோட்டைக் காவலைக் கடந்து வர முடியாது. நீ பெண்ணாயிருப்பதினால்தான் உள்ளே வர விட்டேன்..."

"வெளியேயிருந்து வர வேண்டும் என்பது என்ன? சதிகாரர்கள் கோட்டைக்குள்ளேயே இருந்துவிட்டால்..."

"ஒருநாளும் முடியாத காரியம்..."

"சரி; அது தங்கள் பொறுப்பு. என் கடமையை..."

"நிறைவேற்றி விட்டாய். இனி நீ திரும்பிப்போகலாம்."

"இல்லை, ஐயா! என் கடமையில் ஒரு பாதியைத்தான் நிறைவேற்றியிருக்கிறேன். சக்கரவர்த்தியைப் பார்த்து இளைய பிராட்டியின் செய்தியைச் சொல்லி விட்டால் முழுதும் நிறைவேறியதாகும்..."

"அந்தச் செய்தியையும் என்னிடமே சொல்லி விடலாம்."

"முடியாத காரியம். சக்கரவர்த்தியிடம் நேரில் தெரிவிக்கும்படி இளைய பிராட்டியின் ஆக்ஞை. இதோ இளைய பிராட்டியின் முத்திரை மோதிரம்...!"

"ஆ! முத்திரை மோதிரம் யார் யாரிடமோ வந்து விடுகிறது. இளைய பிராட்டிதான் கொடுத்தாள் என்பது என்ன நிச்சயம்? உன் பெரிய தந்தை இந்தக் கோட்டையை முற்றுகையிட்டிருக்கிறார். உன்னை எப்படி நம்புவது...?"

"ஓர் அபலைப் பெண்ணால் என்ன அபாயம் நேர்ந்து விடும் என்று பயப்படுகிறீர்கள்?"

"பெண்ணே! பழுவூர் வம்சத்தினர் பயம் என்பது இன்னதென்று அறிய மாட்டார்கள்..."

"அப்படியானால் என்னை அரண்மனை வரையில் போக விடுங்கள். தாங்களும் கூட வாருங்கள்..."

"இன்றைக்கெல்லாம் சக்கரவர்த்தியின் மனக்கலக்கம் மிகவும் அதிகமாயிருக்கிறது..."

"அந்தக் கலக்கத்தைத் தீர்ப்பதற்குரிய செய்தியுடன் நான் வந்திருக்கிறேன். ஐயா! விஷயம் இன்னதென்று அறிந்தால் என்னைத் தடுத்துத் தாமதப்படுத்தியதற்காகத் தாங்களே பச்சாத்தாபப்படுவீர்கள்..."

சின்னப் பழுவேட்டரையர் சிறிது வியப்புக் குறி காட்டி, "பெண்ணே! ஒருவேளை சின்ன இளவரசர் – பொன்னியின் செல்வரைப் பற்றிச் செய்தி கொண்டு வந்திருக்கிறாயா?" என்றார்.

"ஆம், தளபதி!"

"ஆகா! சின்ன இளவரசர் சுகமாயிருக்கிறாரா? இப்போது எங்கே வந்து கொண்டிருக்கிறார்? அவருக்கு... சதிகாரர்களால் அவருக்கும்..."

"ஆம்; பாண்டிய நாட்டுச் சதிகாரர்களால் அவருடைய உயிருக்கும் அபாயம் நேர இருந்தது. ஆனால் கடவுள் அரு



ளால் விபத்து ஒன்றும் ஏற்படவில்லை. சௌக்கியமாயிருக்கிறார். இது தங்களுக்குச் சந்தோஷமளிக்கும் அல்லவா?"

"நல்ல கேள்வி! சின்ன இளவரசர் சௌக்கியமாயிருப்பது பற்றிச் சந்தோஷப்படாமல் துக்கப் படுவார்களா? வா! வா! உன்னோடு வீண் பொழுது போக்க விரும்பவில்லை. அரண்மனைக்கு வந்து சக்கரவர்த்தியிடம் நேரில் சொல்ல வேண்டியதைச் சொல்லிவிடு!"



வ்விதம் கூறிச் சின்னப் பழுவேட்டரையர் தம் யானையை மேலே செலுத்தினார். இளவரசரைப் பற்றி அறிந்து கொள்ள அவருக்குப் பெரும் ஆவல் உண்டாயிற்று. அவருடைய மாப்பிள்ளை மதுராந்தகன் தஞ்சைச் சிம்மாசனம் ஏறுவதற்கு அருள்மொழிவர்மன் ஒரு போட்டி என்பதாக அவர் என்றும் கருதியதில்லை. சக்கரவர்த்திக்கு அந்த எண்ணமே இல்லை என்பதை அவர் அறிவார். அருள்மொழி தந்தை சொல்லைத் தட்டக் கூடியவனும் இல்லை. குந்தவை தலையிட்டு ஏதேனும் குளறல் செய்யாமலிருக்க வேண்டுமென்பதுதான் கவலை. அவள் இப்போது ஏதேனும் சூழ்ச்சி தொடங்கியிருக்கிறாளா, என்ன? அருள்மொழியைத் தன் வசத்தில் வைத்துக்கொண்டு ஏதேனும் தந்தைக்குத் தாறுமாறான செய்தி அனுப்பியிருப்பாளா? இளவரசனைப் பற்றி இந்தக் கொடும்பாளூர்ப் பெண் உண்மையாகவே செய்தி கொண்டு வந்திருந்து சக்கரவர்த்தியிடம் கூறினால், அதை அவர் தம்மிடம் சொல்லாமல் இருக்க மாட்டார். அருள்மொழிவர்மரின் உத்தேசம் இன்னதுதான் என்று தெரிந்துகொண்டால், அதற்கேற்பத் தாம் செய்ய வேண்டியது பற்றித் தீர்மானித்துக் கொள்ளலாம் அல்லவா? அச் சமயத்தில் பூதி விக்கிரமகேசரி தஞ்சைக் கோட்டை மீது படை எடுத்து வந்திருக்கும் சதிகாரச் செயலைப் பற்றியும் சக்கரவர்த்தியிடம் தெரிவித்து விடலாம் அல்லவா...?

இரண்டு யானைகளும் அரண்மனை வாசலில் வந்து நின்றன.

சின்னப் பழுவேட்டரையர் இலகுவாக யானை மீதிருந்து கீழே குதித்தார்.

இன்னொரு யானை மலை அசைவது போல் அசைந்து மண்டியிட்டுப் படுத்தது. இரண்டு பெண்களும் யானைப் பாகனும் கீழே இறங்கினார்கள்.

வாசற் காவலனை அழைத்துச் சின்னப் பழுவேட்டரையர் ஏதோ கூறினார். அவன் அரண்மனையின் முன் வாசலைத் திறந்து விட்டான்.

'காலாந்தக கண்டருடைய மனத்தில் அவருடைய தமையனார் சொல்லி அனுப்பியதாக வானதி கூறிய செய்தி உறுத்திக் கொண்டிருந்தது. அதை அவர் அலட்சியம் செய்யப் பார்த்தும் முடியவில்லை. முக்கியமாக, மந்திரவாதி ரவிதாஸனைப் பற்றி அறிந்தது அவருடைய மன அமைதியை மிகக் குலைத்தது. வீரபாண்டியரின் ஆபத்துதவிகளைப் பற்றி அவர் முன்னமே அறிந்திருந்தார். ஆனால் அவர்களுக்குத் தஞ்சாவூர்க் கோட்டைக்குள்ளேயே இடம் கிடைத்திருந்தது என்று அறியவில்லை. பழுவூர் இளையராணி மந்திரவாதியை அழைத்துப் பேசுவதெல்லாம் பெரிய பழுவேட்டரையரை மேலும் மேலும் தன்வசப்படுத்துவதற்காகவே என்று அவர் நம்பிக் கொண்டிருந்தார். அண்ணன் தம்பிகளுக்குள்ளே விரோதத்தை வளர்ப்பதும் அவளுடைய நோக்கமாயிருக்கலாம் என்று நினைத்தார். இப்போது இந்தப் பெண் சொல்வது சிறிது பீதிகரமான செய்தியாகத்தான் இருக்கிறது. ஆயினும், எந்த மந்திரவாதி அல்லது சதிகாரன் என்ன செய்து விட முடியும்? தம்முடைய அனுமதியின்றிச் சக்கரவர்த்தியின் அரண்மனைக்குள் ஓர் ஈயும் நுழைய முடியாது. சக்கரவர்த்தி வெளியிலே வருவதும் கிடையாது. இருந்தாலும் அரண்மனையைச் சுற்றிலும் இன்னும் கொஞ்சம் பாதுகாப்பைப் பலப்படுத்தி வைப்பது நல்லது. புயல் - வெள்ளம் என்று சொல்லிக் கொண்டும், முதன் மந்திரியைப் பார்ப்பதற்காக என்று சொல்லிக் கொண்டும் அதிகம் பேர் இரண்டு நாளாகக் கோட்டைக்குள் வந்திருந்தார்கள். அவர்கள் எல்லாரும் வெளியில் போய் விட்டார்களா என்று தெரியாது. இன்று பகலில் திடீரென்று கோட்டைக் கதவைச் சாத்தியதும் நல்லதாய்ப் போயிற்று. துர்நோக்கம் கொண்டவர்கள், - யாராவது இந்தக் கோட்டைக்குள் வந்திருக்கிறார்களா என்று நன்றாகப் பரிசோதனை செய்து பார்த்து விடலாம்...



வ்விதம், யானை மேல் அரண்மனையை நோக்கி வரும் போதே எண்ணமிட்டுக்

கொண்டு வந்தார். அரண்மனை வாசலில் ஒரு பக்கத்தில் எப்போதும் ஆயத்தமாயிருந்த தம் ஆட்களைச் சமிக்ஞையால் அழைத்தார். அவர்களிடம் கோட்டையின் உட் பக்கம் முழுவதும் நன்றாய்த் தேடிச் சந்தேகாஸ்பதமாக யார் தென்பட்டாலும் பிடித்துக்கொண்டு வரும்படி கட்டளையிட்டார்.

பிறகு, வேளைக்காரப் படையாரிடம் அன்றிரவு முழுவதும் தூங்காமலே அரண்மனையையும் சுற்றுப்புறங்களையும் காவல் புரிய வேண்டுமென்று சொல்ல எண்ணி, அவர்களுடைய தலைவனை அனுப்பும்படி ஆக்ஞாபித்தார்.

இந்த நிலையில், யானையின் மேல் வந்த பெண்கள் என்ன ஆனார்கள் என்று திரும்பிப் பார்த்தார். அவர்கள் அப்போது அரண்மனை முன்புறத்து நிலா முற்றத்தைத் தாண்டி முதல் வாசற்படிக்கு அருகிலே போய்க் கொண்டிருந்தார்கள். ஆனால்... ஆனால்... இவன் யார்? அவர்களைத் தொடர்ந்து போகும் அந்த மூன்றாவது உருவம்? தலைப்பாகையைப் பார்த்தால், யானைப்பாகன் மாதிரி தோன்றியது! ஆகா! யானைப்பாகன் ஏன் தொடர்ந்து போகிறான்? அரண்மனைக்குள் அவனுக்கு என்ன வேலை? சக்கரவர்த்தியிடந்தான் அவனுக்கு என்ன காரியம்?

மிகப் பயங்கரமான ஓர் எண்ணம் அவர் மனத்தில் மின்னலைப் போல் தோன்றிச் சொல்ல முடியாத வேதனையை உண்டாக்கியது. கோபக் கனலை எழுப்பியது. ஒருவேளை இதில் ஏதேனும் சூழ்ச்சி இருக்குமோ? இவன் தான் சதிகாரனோ? இந்தப் பெண்களை ஏமாற்றிவிட்டு, யானைப் பாகனைப் போல் வந்திருக்கிறானோ? தாமும் ஏமாந்து விட்டோமோ? தம் கண் முன்னால் சக்கரவர்த்தியைக் கொல்ல வந்த வீர பாண்டியனின் ஆபத்து உதவி அரண்மனைக்குள்ளே போகிறதா? காலாந்தக கண்டனுக்கு அவ்வளவு பெரிய அசட்டுப் பட்டமா? அல்லது பூதி விக்கிரமகேசரியின் சூழ்ச்சியில் சேர்ந்ததா? – எதுவாயிருந்தாலும் சரி, இதோ, மறுகணத்தில் எல்லாம் தெரிந்து போய் விடுகிறது.

நாலே எட்டில் நிலா முற்றத்தைக் காலாந்தக கண்டர் கடந்து சென்று யானைப்பாகன் சமீபம் அடைந்தார். "அடே! நில் இங்கே!" என்று ஒரு கர்ஜனை செய்தார். "நீ ஏன் உள்ளே போகிறாய்? யானைப்பாகனுக்கு அரண்மனைக்குள் என்ன வேலை?" என்று கூறிக்கொண்டே, அவனுடைய ஒரு கரத்தைத் தமது வஜ்ராயுதம் போன்ற கை முஷ்டியினால் பிடித்துக் கொண்டார்.

அவருடைய கோப கர்ஜனைக் குரலைக் கேட்டு விட்டு முன்னால் சென்ற இரு பெண்களும் திரும்பிப் பார்த்தார்கள். அவர்களுடைய முகங்கள் சிறிது பயம், வியப்பு, ஆர்வம் முதலிய உணர்ச்சிகளைப் பிரதிபலித்தன; அதே சமயத்தில் புன்னகை மலர்ந்தன. வானதி "ஐயா!... அவர்... அவர்..." என்று ஏதோ சொல்ல ஆரம்பித்துச் சிறிது தயங்கினார்.

குரோதத்தின் சிகரத்தை அடைந்திருந்த சின்னப் பழுவேட்டரையர் அவளைத் திரும்பிப் பார்க்கவும் இல்லை; அவள் வார்த்தையைப் பொருட்படுத்திக் கேட்கவும் விரும்பவில்லை.

யானைப்பாகனுடைய தடுமாற்றத்திலிருந்து அவருடைய சந்தேகம் மேலும் மேலும் உறுதிப்பட்டது.

முன்னொரு தடவை தம்மை ஏமாற்றிவிட்டுத் தப்பி ஓடிப் போன வாணர் குலத்து வாலிபனோ என்ற விபரீத எண்ணம் அந்தக் கணத்தில் தோன்றியது. மறுபடியும் நம்மை ஏமாற்றிவிட்டுப் போகலாம் என்று இவ்வளவு துணிச்சலுடன் வந்திருக்கிறானோ...?

பிடித்த பிடியை இன்னும் சிறிது கெட்டியாக்கிக் கொண்டு சின்னப் பழுவேட்டரையர், "அடா! உண்மையைச் சொல்! நீ யார்? யானைப்பாகன்தானா? அல்லது சதிகாரனா? முன்னொரு தடவை என்னிடமிருந்து தப்பிச் சென்ற ஒற்றனா? இம்முறை தப்ப முடியாது!" என்று சொல்லிக்கொண்டே, பிடித்த பிடியை விடாமல் 'யானைப்பாகன்'

முகத்தைத் தம்மை நோக்கித் திருப்பினார்.

அரண்மனையின் முன் மண்டபத்தில் எரிந்த தீபங்களின் வெளிச்சம் இலேசாக அந்த 'யானைப்பாகனின்' கம்பீரமான முகத்தில் விழுந்தது.

"தளபதி! நான் யானைப்பாகன் கூடத்தான். தங்களிடமிருந்து என்றும் தப்பிச் சென்றதில்லை. தங்களிடம் என்னை ஒப்புக் கொடுக்கவே வந்திருக்கிறேன்!" என்றான் யானைப்பாகன்.

காலாந்தக கண்டர் அந்த முகத்தைப் பார்த்தார். அந்தக் குரலைக் கேட்டார். மேல் உலகம் ஏழும் இடிந்து அவர் தலை மேல் ஒருமிக்க விழுந்து விட்டது போலிருந்தது. அவ்விதமாகத்

திகைத்துச் சித்திரப் பதுமை போல் நின்று விட்டார். கைப் பிடியை விடு வதற்குக்கூட அவருக்குத் தோன்ற வில்லை. கைப்பிடி அதுவாகத் தளர்ந்து இளவரசர் அருள்மொழிவர்மரை விடுதலை செய்தது.

## இருபத்து எட்டாம் அத்தியாயம்

# கோஷம் எழுந்தது!



ளவரசர் அருள்மொழிவ
மரின் அந்த இளம் பொ
முகத்தில் என்ன மா.
மந்திரசக்திதான் இருந்ததோ,
தெரியாது. இத்தனைக்கும்

வரசர் அச்சமயம் முகத்தைச் சுளித்
கொள்ளவும் இல்லை. கோபத்தின்
குறி சிறிது கூடக் காட்டவில்லை.
வண்ணெய் திருடி அகப்பட்டுக்
கொண்ட கண்ணனைப் போல் குற்

றத்தை ஒப்புக்கொள்ளும் பாவனை முகத்தில் தோன்றும்படி நின்றார். சின்னப் பழுவேட்டரையரிடம் குற்றம் கண்டு பிடித்துக் கடிந்து கொள்ளும் அறிகுறியோ, அவரை எதிர்த்துப் போராடும் நோக்கமோ அணுவளவும் அவர் முகத்தில் காணப்படவில்லை.

ஆயினும், அஞ்சா நெஞ்சமும் அளவிலா மனோதிடமும் வாய்ந்தவரான காலாந்தக கண்டரின் கை கால்கள் அந்தக் கணத்தில் வெடவெடத்து விட்டன. முகத்தில் வியர்வை அரும்பியது. இன்னது செய்கிறோம் என்றுகூட அறியாமல் இரு கைகளையும் கூப்பி வணக்கம் செலுத்தியவாறு, ''பொன்னியின் செல்வா! ஈழங்கொண்ட வீரா! சோழ நாட்டின் தவப்புதல்வா! இது என்ன கோலம்? இது என்ன காரியம்? இவ்விதம் தண்டிப்பதற்கு என்ன குற்றம் செய்தேன் நான்...? சற்று முன் நான் செய்த பிழையைப் பொறுத்துக் கருணை புரிய வேண்டும். 'மன்னித்தேன்' என்று அருள்வாக்குத் தர வேண்டும்... கண்ணிருந்தும் பாராத குருடனாகி விட்டேன்...'' என்று நா தழுதழுக்கக் குரல் நடுங்கக் கூறினார்.

மேலும் இதே முறையில் பேசப் போனவரை இளவரசர் தடுத்து, "தளபதி! இது என்ன? தாங்களாவது, குற்றம் செய்யவாவது? ஒன்றும் அறியாத இந்தச் சிறுவன் தங்களை மன்னிப்பதாவது?'' என்றார்.

"தங்களைப் பிடித்து நிறுத்திய இந்தக் கையை வெட்டினாலும் போதிய தண்டனை ஆகாது. 'அடா' என்று அழைத்த என் நாவை அறுத்துப் போட்டாலும் போதாது...''

"தங்கள் வார்த்தைகள் என் காதில் நாராசமாக விழுகின்றன. போதும், நிறுத்துங்கள். தங்கள் பொறுப்பை நிறைவேற்றுவதற்காகத் தங்கள் கடமையைச் செய்தீர்கள். அதில் குற்றம் என்ன? தவறு என்னுடையது. நான் இந்த வேடத்தில் - யானைப்பாகனாக வருவேன் என்று...''

"நான் எதிர்பார்க்கவே இல்லைதான். இப்படித் தாங்கள் செய்யலாமா? எதற்காக? சோழ நாட்டின் மகா வீரரை இப்படியா நான் வரவேற்றிருக்க வேண்டும்? ஆசார உபசாரங்களுடன் முன் வாசலில் வந்து காத்திருந்து வெற்றி முரசுகள் எட்டுத் திக்கும் அதிரும்படி முழங்க வரவேற்றிருக்க மாட்டேனா...?''

''தாங்கள் அப்படிச் செய்வீர்கள் என்று அறிந்துதான் நான் இந்த வேஷத்தில் வந்தேன். அதற்கெல்லாம் இது சரியான நேரமல்ல. தங்களுக்குத் தெரியாதா? சதிகாரர்களின் தீய முயற்சிகளைப் பற்றிச் சற்று முன் கொடும்பாளூர் இளவரசி கூறினாள் அல்லவா? அது உண்மையாக இருக்கலாமென்றே எனக்கும் தோன்றுகிறது...''

"இளவரசே! என்னையும் அந்தப் பாண்டியச் சதிகாரர்களுடன் சேர்த்து விட்டீர்களா...?''

"கடவுளே! என் தந்தை சக்கரவர்த்தியைப் பாதுகாப்பதற்குத் தாங்கள் செய்திருக்கும் ஏற்பாடுகளைப் பார்த்து மனத்திற்குள் மகிழ்ச்சியடைந்து கொண்டிருக்கிறேன். முதலில் என் தந்தையைப் பார்த்து விட்டு, பிறகு...''

"ஐயா! சக்கரவர்த்தியைத் தாங்கள் பார்க்கக் கூடாதென்று நான் தடுத்து விடுவேன் என்று நினைத்தீர்களா? அத்தகைய பாவி நான் என்று யாரேனும் தங்களுக்குச் சொல்லியிருந்தால்...''

''ஒரு நாளும் நான் நம்பியிருக்க மாட்டேன், தளபதி!''

"பின் ஏன் இந்த வேஷம்?''

"வேறு முறையில் நான் கோட்டைக்குள் வந்திருக்க முடியுமா, யோசியுங்கள்! கோட்டையைச் சுற்றித் தென்திசைச் சேனைகள் வந்து சூழ்ந்திருக்கின்றன. பெரிய வேளாரும் வந்திருக்கிறார். எதற்காக வந்திருக்கிறார் என்று தங்களுக்குத் தெரிந்திருக்கும்...''

"கோட்டைக் கதவுகளை நான் மூடச் செய்தது நியாயமே அல்லவா? அதில் ஏதேனும் குற்றம் உண்டா?''

"ரொம்ப நியாயம். பெரிய வேளாரின் புத்தி கெட்டுப் போயிருக்கிறது. அவரால் நான் கோட்டைக்குள் வருவது தடைப்படும் என்றுதான் இந்த வேடத்தில்



வந்தேன். அவர் மகளையும் அழைத்துக்கொண்டு வந்தேன். நல்லவேளையாக அவர் என்னைக் கவனிக்கவில்லை. தங்களுடைய கூர்மையான கண்கள் கண்டுபிடித்து விட்டன...''

''என் கண்கள் மூடிப் போயிருந்தன. அதனாலேதான் பார்த்தவுடன் தெரிந்து கொள்ளவில்லை. தங்களை யானைப்பாகன் என்று எண்ணிக் கூறிய வார்த்தைகளைத் தாங்கள் கருணை கூர்ந்து மன்னித்து விடுங்கள்...''

''அவ்விதம் சொல்ல வேண்டாம். தாங்கள் வேறு, என் தந்தை வேறு என்றே நான் எண்ணவில்லை. என்னைச் சிறைப்படுத்திக் கையோடு கொண்டு வருவதற்காகத் தாங்கள் ஆட்களை அனுப்பியிருந்தீர்கள்...''

"கடவுளே! இது என்ன வார்த்தை? நானா சிறைப்படுத்த ஆட்களை அனுப்பினேன்? தங்களை உடனே பார்க்க வேண்டும் என்பதற்காகத் தங்கள் தந்தை - சக்கரவர்த்தி - அனுப்பினார்...!''

''அது எனக்குத் தெரியாதா தளபதி! இலங்கையில் நான் இருந்தபோது அவர்கள்

வந்தார்கள். 'சக்கரவர்த்தியின் கட்டளை அல்ல; பழுவேட்டரையர்களின் கட்டளை' என்று என் அருகில் இருந்தவர்கள் சொன்னார்கள்..."

"எங்கள் விரோதிகள் அப்படிச் சொல்லியிருப்பார்கள்..."

"நான் அவர்களுக்கு 'என் தந்தையின் கட்டளை எப்படியோ, அப்படியே பழுவேட்டரையர்களின் கட்டளையும் என் சிரமேல் கொள்ளத்தக்கது' என்று கூறினேன். கடலையும் புயலையும் மழையையும் வெள்ளத்தையும் தாண்டி வந்தேன். அரண்மனையின் முன் வாசலைத் தாண்டி உள்ளே போனதும் தங்கள் விருப்பத்தைத் தெரிந்து கொள்ளலாம் என்று எண்ணினேன். தங்கள் கட்டளையின்றி என் தந்தையைப் பார்க்கவும் நான் விரும்பவில்லை..."

"இளவரசே! இன்னும் என்னைச் சோதிக்கிறீர்களா? தங்கள் தந்தையைத் தாங்கள் சந்திப்பதற்கு நான் என்ன கட்டளையிடுவது? தங்களுடன் வரச் சொன்னால் வருகிறேன். இங்கேயே நிற்கச் சொன்னால் நின்று விடுகிறேன்! இளவரசரின் விருப்பமே என் சிரசின் மேல் சூடும் கட்டளை!" என்று பணிவுடன் கூறினார் பழுவேட்டரையர்.

"தளபதி! தாங்கள் இங்கேயே நிற்க வேண்டித்தான் நேரும் போலிருக்கிறது. அதிக நேரம் நாம் இங்கு நின்று பேசிக் கொண்டிருந்து விட்டோம். அதோ பாருங்கள்!" என்றார் இளவரசர்.

சின்னப் பழுவேட்டரையர் திரும்பிப் பார்த்தார். சற்று முன் தூரத்தில் நின்ற அவருடைய ஆட்கள் எல்லாம் நெருங்கி வந்திருப்பதைக் கண்டார். அவர்கள் மட்டுமல்ல; அரண்மனை வாசற் காவலர்களும் வந்து விட்டார்கள். இன்னும் தூரத்திலே நின்ற வேளைக்காரப் படையினரிலும் சில பிரிந்து வந்து கொண்டிருந்தார்கள்.

அருகில் வந்து விட்டவர்கள் அனைவரும் பொன்னியின் செல்வரைக் கண் கொட்டாத ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள். சின்னப் பழுவேட்டரையர் திரும்பிப் பார்த்த நேரத்தில், இளவரசரின் திருமுகத்தில் விளக்கு வெளிச்சம் நன்றாக விழுந்து மிகப் பிரகாசமாகத் தெரிந்தது.

வீரர்களில் ஒருவன், "வாழ்க இளவரசர்!" என்றான். "வாழ்க பொன்னியின் செல்வன்!" என்றான் இன்னொருவன்.

"மகிந்தனைப் புறங்கண்டு ஈழம் கொண்ட வீராதி வீரன் வாழ்க!" என்றான் மற்றொருவன்.

இந்தக் குரல்களைக் கேட்டவுடன் வேளைக்காரப் படையினர் அனைவரும் அங்கு விரைந்து வரத் தொடங்கினார்கள்.

பற்பல குரல்களிலிருந்து "வாழ்க பொன்னியின் செல்வன்!" என்ற வாழ்த்தொலிகள் எழுந்தன.

அரண்மனை வாசலானபடியாலும், சின்னப் பழுவேட்டரையர் அங்கிருந்தபடியாலும் அந்த ஒலி மிக மெல்லியதாகத்தான் அப்போது எழுந்தது. இளந்தென்றற் காற்று புதிதாகத் தளிர்த்த அரச மரத்தின் மீது அடிக்குங்கால் ஏற்படும் 'சலசலப்பு'ச் சத்தத்தைப் போலத்தான் கேட்டது. நேரமாக ஆக, நாள் ஆக ஆக, அந்த மெல்லிய ஒலி எப்படி வளர்ந்து, வளர்ந்து, பெரிதாகி மகா சமுத்திரத்தின் ஆயிரமாயிரம் அலைகளின் ஆரவாரத்தையும் மிஞ்சிய மாபெரும் கோஷமாயிற்று என்பதைப் பின்வரும் அத்தியாயங்களில் பார்ப்போம்.

"தளபதி! நாம் இங்கே நின்று பேசியது தவறாகப் போயிற்று. அரண்மனைக்குள்ளே பிரவேசிக்கும் வரையில் நான் என்னைத் தெரியப்படுத்திக் கொள்ள விரும்பாததின் காரணம் இப்போது தெரிகிறது அல்லவா?" என்று இளவரசர் கேட்டார்.

"தெரிகிறது, அரசே! நான் இவர்களுக்குச் சமாதானம் சொல்லிவிட்டு வருகிறேன். தாங்கள் தயவு செய்து விரைந்து உள்ளே செல்லுங்கள்!" என்றார் காலாந்தக கண்டர்.

(தொடரும்)

மாநகராட்சி அலுவலகத்தில் ஒரு தேவைக்காக மனு கொடுத்து உடனடியாக அந்தத் தேவை பூர்த்தியாகிப் பார்த்திருக்கிறீர்களா? 'இதென்ன புதுக் கரடி' என்று நீங்கள் நினைத்தால் ஏமாந்து போவீர்கள். நிஜம்தான். இப்படி மூக்கில் விரல் வைக்கும் நிகழ்ச்சி நடப்பது திருச்சி, 'மக்களைத் தேடி மனுநீதி' முகாம்களில்!

ஏகத்துக்கு எல்லாரும் சிலாகிக்கும் இந்த முகாமுக்குச் சென்று வருவது என்று தீர்மானித்து, திருச்சி பொன்னகரில் நடைபெற்ற முகாமில் ஆஜரானோம்.

# காரப்பிடிக்க

இந்த ஒருநாள் முகாமுக்காகப் பள்ளி வளாகம் அல்லது அந்தப் பகுதியில் உள்ள திருமண மண்டபம் ஒன்றை எடுத்துக் கொள்கிறார்கள் மாநகராட்சியினர். மூன்று நாட்களுக்கு முன்பாக இதுகுறித்து செய்தித்தாள்கள் மற்றும் வானொலி வாயிலாக பொது மக்களுக்கு அறிவிப்புத் தருகிறார்கள். மூன்று நாள் இடைவெளியில் அவர்கள் தங்களது கோரிக்கை மனுக்களுக்குத் தேவையான சான்றுகளைத் தயார் செய்து கொள்கிறார்கள்.

உடனடி சேவை, கை மேல் பலன் என்பதால் பொது மக்கள் உற்சாகமாய் வருகின்றனர். மூன்று மாதக் கைக் குழந்தையுடன் வரும் இளம்பெண் முதல் முதியவர்கள் வரை கோரிக்கை மனுக்களுடன் வரிசையில் அணிவகுத்து நிற்கிறார்கள்.

மிகப் பெரிய ஹாலில் நீள நீளமாய் மேசைகள். பிளாஸ்டிக் சேர்கள். சுகாதாரப் பிரிவு, பொறியியல் பிரிவு, நகரமைப்புப் பிரிவு, வருவாய்ப் பிரிவு, படிவங்கள் விற்பனை செய்யும் பிரிவு, கட்டணம் பெற்றுக் கொள்ளும் கவுன்ட்டர்கள் என எழுதப்பட்ட அட்டைகள் மேசைகளின் மீது. மாநகராட்சி சம்பந்தப்பட்ட அலுவலர்கள் அங்கே இருக்கிறார்கள்.

சுகாதாரப் பிரிவில் பிறப்பு/இறப்புச் சான்றிதழ் வழங்குதல், குப்பைகளை அகற்றுதல், கொசு ஒழிப்பு, மருந்தடித்தல், சாக்கடை மற்றும் புதைகுழி அடைப்புகளைச் சரிசெய்தல், கேட்பாரற்று தெருவில் திரியும் நாய்களைப் பிடித்தல், பன்றிகளைச் சுடுதல், கால்நடைகளை அப்புறப்படுத்துதல் போன்றவற்றிற்கான மனுக்களைப் பெற்றுக் கொள்கிறார்கள்.

பொறியியல் பிரிவில் புதிய குடிநீர்க் குழாய் இணைப்புப் பெறுதல், பாதாளச் சாக்கடை இணைப்பு மற்றும் குடிநீர்க் குழாய் கசிவுகளைச்


• சலிப்பின்றி பதில்


• முத்து வீரன்

சரிசெய்தல், • எரியாத தெருவிளக்கு மற்றும் பழுதான கை பம்ப்புகளைச் சீர் செய்தல் சம்பந்தப்பட்ட மனுக்களை வாங்கிக் கொள்கிறார்கள்.

நகரமைப்புப் பிரிவில் திட்ட அனுமதி மற்றும் கட்டிட அனுமதி வழங்குதல், சர்வே வரைபட நகல், ஆக்கிரமிப்புகளை அகற்றுதல் போன்று வரும் மனுக்களை எடுத்துக் கொள்கிறார்கள். வருவாய்ப் பிரிவில் புதிய வரி விதிப்புகள், பெயர் மாற்றம் செய்தல் போன்ற மனுக்களை ஆய்வுக்கு உட்படுத்திக் கொள்கிறார்கள்.

மண்டபத்துக்கு வெளியே ஷாமியானாப் பந்தல். பொதுமக்களுக்குத் தகவல் தருவதற்கு மாநகராட்சி அலுவலர்கள். மனுவைக் கொடுத்துவிட்டு வரும் மக்கள் அமர நூற்றுக்கணக்கான இருக்கைகள்.

காலை எட்டு மணி முதல் மதியம் ஒரு மணி வரை மக்களிடமிருந்து மனுக்கள் பெறப்படுகின்றன. அதற்குரிய கட்டண விகிதங்களை ஆங்காங்கே தகவல் பலகைகளில் எழுதி வைத்துள்ளனர். அதனையும் மீறி வந்து விசாரிப்பவர்களுக்குச் சலிப்பின்றி பதிலும்!

அத்தனை மனுக்களும் மாநகராட்சி ஆணையர் முத்து வீரனிடம் நேரடியாகச் சென்று அந்தந்தப் பிரிவுக்கு அனுப்பி வைக்கப்பட்டு முடிவுகள் எடுக்கப்படுகின்றன.

உடனடியாகத் தீர்வு செய்ய இயலாத



• மனுக்கள் சரிபார்க்கப்படுகிறது

மனுதாரர்களுக்குத் தகுந்த காரணம் சொல்கிறார்கள்.

இது முற்றிலும் மாநகராட்சி சம்பந்தப்பட்ட பணிகள்தானே என மாவட்ட நிர்வாகம் ஒதுங்கி விடுவதில்லை. இந்த முகாம் ஒவ்வொன்றிலும் தவறாது கலந்து கொள்கிறார் மாவட்ட ஆட்சித் தலைவர் வை. மூர்த்தி.

வருவாய்த் துறை அலுவலர்கள் வாயிலாகப் பெறப்படும் சாதிச் சான்றிதழ், வருமானச் சான்றிதழ், முதியோர் உதவித் தொகை, விதவைகள் உதவித் தொகை போன்ற மனுக்கள் மீது உரிய நடவடிக்கை எடுக்கப்பட்டு அதற்குரிய தீர்வுகள் மாவட்ட ஆட்சித் தலைவரால் கிடைக்கப் பெறுகின்றன.

அன்றைய தினம், அந்தப் பகுதிக்குரிய காவல் துறை ஆய்வாளரும் கலந்து கொள்கிறார். கணவன் மனைவி சண்டையிலிருந்து டீக்கடைத் தகராறு வரையிலான மனுக்கள் மீதும் காவல் துறையினர் உடனடி நடவடிக்கையில் ஈடுபடுகின்றனர்.

திட்ட அனுமதி மற்றும் கட்டட அனுமதி, புதிய குடிநீர்க் குழாய் இணைப்பு, வீட்டு வரி, பெயர் மாற்றம், பிறப்பு - இறப்புச் சான்றிதழ், படிவங்கள் விற்பனை மூலமாக அன்று ஒரு நாளில் மட்டும் மாநகராட்சிக்கு முப்பத்தி ஏழரை லட்ச ரூபாய் வசூல்!

மாநகராட்சியினர் பொதுமக்கள் வசிக்கும் அவரவர் பகுதிக்கே இடம்பெயர்ந்து வந்து தேவைகளை உடனே நிறைவேற்றித் தருவது மாநகர மக்களுக்கு மன நிறைவைத் தருகிறது. இத்தகைய பணிகளில் இடைத்தரகர் இல்லை. லஞ்சம் என்ற பேச்சுக்கும் வழியில்லை.

திருச்சி மாநகராட்சியில் மொத்தம் அறுபது வார்டுகள். ஒரு முகாமுக்கு அவர்கள் எடுத்துக் கொள்வது நான்கு அல்லது ஐந்து வார்டுகள். இதுவரை ஏழு முகாம்கள் நடைபெற்று முடிந்ததில் முப்பது வார்டு மக்கள்

# ஒரு திட்டம்!

பயன் அடைந்துள்ளனர். மக்களின் அவசியத் தேவைகளை, 'மக்களைத் தேடி மனுநீதி சேவை முகாம்' உடனடியாகப் பூர்த்தி செய்து வருகிறது. தமிழகத்தில் மற்ற மாநகராட்சியினரும் இதை 'காப்பி' அடிக்கலாம்!

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

**பாக்யராஜும் சின்னத் திரைக்கு வந்திருக்கிறார். சினிமாவில் ஏற்பட்ட சரிவுதான், இவரை டீ.வி. பக்கம் கொண்டு வந்திருக்கிறதா? இனி சினிமாவுக்குப் போவாரா? போன்ற கேள்விகளுடன், 'பாக்யா அலுவலகத்தில், அவரைச் சந்தித்தோம்.**

# "என்னுடைய இடம் சினிமாதான்!"



***"என்ன சார்! நீங்களும் டீவி சீரியல் இயக்க வந்து விட்டீர்கள்?"***

"டீ.வி. எனக்குப் புதிதல்ல. பல வருஷங்களுக்கு முன்பே, தீபாவளி போன்ற பண்டிகை நாட்களில் தூர்தர்ஷனில் நேரம் எடுத்து ஒர்க் பண்ணியிருக்கிறேன். இதற்கு முன்பு ராஜ் டீ.வி.யில் நான் ஸ்கிரிப்ட் எழுதிக் கொடுத்த சீரியல் வந்திருக்கிறது.

***"முழுமையாக டீ.வி. சீரியலில் இறங்கி விட்டீர்களா? 'கதையின் கதை' இருநூற்றைம்பது எபிசோட் வரை போகுமாமே?" சினிமாவுக்குக் குட்பை சொல்லி விட்டீர்களா?***

"இது ஒரு இடைப்பட்ட அரேஞ்மென்ட்தான். கொஞ்ச நாளுக்கு நானே டைரக்ட் பண்ணுவேன். எபிசோட் டைரக்டர்களாக, என் அனுபவம் வாய்ந்த அசிஸ்டென்ட்கள் பார்த்துக் கொள்வார்கள். தொடர் பிக்-அப் ஆனவுடன், ஸ்கிரிப்ட் தவிர எல்லாவற்றையும் அவர்களே பார்த்துக் கொள்வார்கள். என் இடம் சினிமாதான் என்பதில் தெளிவாக இருக்கிறேன். பொருளாதார ரீதியாக சில பிரச்னைகளுக்கு உதவியாக இருக்கும் என்பதால்தான், இந்தத் தொடர் வேலையை ஆரம்பித்திருக்கிறேன்.

***"டீ.வி. சீரியல்கள் என்றால் தனியார் சேனல்களில் தானே வீச்சு அதிகம். ஏன் தூர்தர்ஷன்?"***

"தனியார் சேனல்களுடன் போட்டி போட, தூர்தர்ஷனும் விரும்புகிறது. புதுசு புதுசாய் முயற்சிகள் செய்கிறது. அதன்படி, ஒரு சீரியல் பண்ணித் தர எனக்கு விருப்பமா?

என்று கேட்டார்கள். ஒப்புக் கொண்டேன். அதைத் தவிர, பிரத்யேகக் காரணம் ஒன்றுமில்லை. பிற்பகல் மூணு மணிக்கு ஒளிபரப்பாகும் தொடர் என்பதால் பெண்களைக் கவரும்படியாய், குடும்ப சென்டிமென்ட் கதையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டேன். இரண்டு குடும்பங்களுக்கு இடையில் ஏற்படும் மோதல்தான் கரு. சென்டிமென்ட் என்



• 'ஒரு கதையின் கதை'- ஷூட்டிங்கில்...

பதற்காக அழுகை அதிகமில்லாமல், காமெடியும் இருக்கும்படி பார்த்துக் கொண்டிருக்கிறேன்."

***"நீங்கள் நடிக்கிறீர்களா?"***

"நான், டீ.வி. சீரியல் தற்காலிகமாகத்தான் என்று சொன்னேனே! எனவே டைரக்ஷனுடன் நிறுத்திக் கொண்டிருக்கிறேன். இதில் நான் நடிக்க வேண்டிய தருணம் இது இல்லை என்று நினைக்கிறேன். இன்னொன்று, டீ.வி.யில் நாம் கமிட் ஆகி விட்டோம் என்றால், நினைத்தபோது விட்டு விட்டு, சினிமா வேலை பார்ப்பது முடியாமல் போய்விடும்.

***"உங்களுடைய முந்தைய சீரியல் பெரிய வரவேற்பைப் பெறாமல் போனதற்கு என்ன காரணம்?"***

"அது நண்பர் ஒருவருக்காக, நான் செய்து கொடுத்தது. இருபது எபிசோட்களுக்கு நான் வெறும் ஸ்கிரிப்ட் மட்டும் எழுதிக் கொடுத்தேன். அப்புறம் நான் சினிமாவில் பிஸியாகி விட்டதால், தொடர்ந்து எழுதித் தர முடியாமல் போய் விட்டது. எனவே, அவர்களாகவே நாற்பது வாரங்களுக்குக் கதையைக் கொண்டு போனார்கள்.

***"சினிமா, டீ.வி இந்த இரண்டு மீடியங்களிலும் பணிபுரிவதில் ஏதாவது வித்தி***

## — பாக்யராஜ் பேட்டி

யாசம் இருப்பதாக நினைக்கிறீர்களா?''

"பெர்பாமென்ஸ் அடிப்படையில் பார்த்தால், என்னைப் பொறுத்தவரை வித்தியாசமில்லை. சினிமா என்றால், திரைக்கு வந்தவுடன் வெற்றி, தோல்வி தெரியும். அதுக்குப் பின், எதுவும் செய்ய முடியாது. ஆனால், டீ.வி. அப்படி இல்லை. மக்கள் ரியாக்ஷனுக்கு, ரெஸ்பான்ஸுக்கு ஏற்ப, மாற்றங்கள் செய்து கொள்ளலாம், கதையை, கதாபாத்திரங்களை, நடிகர்களை, காட்சிகளை அவசியத்துக்கேற்ப கூட்டவோ குறைக்கவோ செய்து மெருகூட்டலாம்!

***"சினிமா உலகில் பொதுவாகவே ஒரு தேக்க நிலை இருக்கிறதே! என்ன காரணம்?''***

"தயாரிப்புச் செலவு ஏகமாய் அதிகரித்து விட்டது. தயாரிப்பாளர்கள், விநியோகஸ்தர்கள் குறைந்து விட்டார்கள்; தியேட்டர்கள் குறைந்து விட்டன. பலவிதமான பிரச்னைகளையும் சினிமா உலகம் சந்தித்துக் கொண்டிருக்கிறது. இப்போதுதான் எல்லாம் ஓரளவு சரியாகிக் கொண்டிருக்கிறது. சிக்கிரம் நிலைமை சீரடையும் என்று நம்புகிறேன்.''

***"உங்கள் படம் தாமதமாகிக் கொண்டிருப்பதற்கு இந்தப் பொதுவான பிரச்னைகள் தவிர பிரத்யேகமான காரணம் என்ன?''***

"போன படம் (வேட்டியை மடிச்சு கட்டு) சரியாய்ப் போகவில்லை. அதனால் சில பைனான்சியல் பிரச்னைகள். இந்த டீ.வி. சீரியல் கூட, அதை செட் ரைட் பண்ணத்தான்.''



**''கல்யாணப் பத்திரிகையில புதுமை பண்ணி இருக்காரா? அப்படி என்ன செய்திருக்கார்?''**

**''முதல் பெண் கல்யாணப் பத்திரிகையில இரண்டாம் பெண்ணுக்கு 'மணமகள் தேவை'னு விளம்பரம் கொடுத்திருக்கிறாரே!''**

**– லலிதா செல்லப்பா**

***"தமிழின் மிகச் சிறந்த திரைக்கதை ஆசிரியர் என்று உங்களைக் குறிப்பிடுவார்கள். உங்களது போன படம் எப்படித் தோல்வியடைந்தது?''***

''அது அடிப்படையில் குழந்தைகளுக்கான படம். 'இன்று போய் நாளை வா' மாதிரி. என்டர்டெயின்மென்ட் பிளஸ் சின்ன மெசேஜ், வெச்சுப் பண்ணின படம். அப்படிப்பட்ட ஒரு படத்தை திரையுலக ஸ்டிரைக் போன்ற ஒருசில காரணங்களால், பரீட்சை சமயத்தில் ரிலீஸ் செய்யும்படி ஆகி விட்டது. பரீட்சை நேரத்தில், பசங்களை சினிமா பார்க்க விடுவார்களா? இல்லை, பசங்களை விட்டு விட்டு, பெரியவர்கள் தான் சினிமா பார்ப்பார்களா? அது மட்டுமில்லாமல், 'இது வழக்கமான பாக்யராஜ் படம்-இல்லை; சின்னப் பசங்க சப்ஜெக்ட்' என்று படம் ரிலீசாவதற்கு முன்பே எடுத்துச் சொல்லி, ஆடியன்ஸை தயார்ப்படுத்த நான் தவறி விட்டேன். இந்தியிலும் அது எடுக்கப்பட்டது. இணைத் தயாரிப்பாளரான குல்ஷன் குமார் கொலை வேறு நடந்து விட்டது.

***"சினிமாதான் உங்கள் இடம் என்கிறீர்கள். சரி! எப்போது உங்கள் அடுத்த படம்?''***

"தலைப்பு ரிஜிஸ்தர் பண்ணியாகி விட்டது. "கண்ணாளா!''. ஒரு மூனு மாசம் காத்திருங்கள். பட வேலை ஆரம்பமாகி விடும். அப்புறம் ஆறே மாதத்தில் படத்தை முடிந்து, வெளியிட்டு விடுவேன். அதில் நீங்கள் பழைய 'உங்க ஆளு' பாக்யராஜைப் பார்க்கலாம்!

***"என்ன சப்ஜெக்ட்?''***

''வழக்கமாக, நான் கதை என்ன என்று முன்கூட்டியே வெளியில் சொல்லுவதில்லை. ஏதாவது கொஞ்சம் சொன்னாலும், இப்படித்தான் இருக்கும் என்று கற்பனை செய்து கொண்டு, அதை எதிர்பார்க்கிறார்கள். சுமார் இரண்டு ஆண்டுகள் கழித்து வரும் படம் என்பதால், கொஞ்சம் கவனமாக இருக்க நான் விரும்புகிறேன். எனவே ஒரு சுவாரசியமான சப்ஜெக்ட் என்று மட்டும் சொல்ல விரும்புகிறேன்.''

***"இன்றைக்கு ஏகப்பட்ட இளைஞர்கள் டைரக்டர்களாகியிருக்கிறார்கள். ஆனால், ஒன்றிரண்டு படங்களுக்கு மேல், நிற்க முடியவில்லையே! இது ஏன்?''***

''இளைஞர்கள் என்பதால், இந்த டைரக்டர்கள் எல்லாரும், ஒரே மேட்டரையே யோசிச்சு, கதை பண்றாங்க. வித்தி

யாசமான சப்ஜெக்ட்ஸ் பற்றி யோசிப்பது இல்லை. ரொம்ப நாட்களாக மனத்தில் வைத்திருக்கும் கதையை, முதல் படமாக எடுத்து, ஹிட் பண்ணியபின் அடுத்த விஷயத்துக்குத் தடுமாறுகிறார்கள்.

***"சினிமாக்காரர்களுக்கு வேறு சப்ஜெக்டே கிடையாதா, காதல் தவிர?"***

"காதல் ஒரு யுனிவர்சல் சப்ஜெக்ட்! டைடானிக் படம் உலகம் பூரா ஓடியதே! என்ன காரணம்? கப்பலுக்காகவா? இல்லை காதலுக்காகத்தான்! இளைஞர்கள், மிடில் ஏஜ், வயசானவர்கள், காதலித்தவர்கள், காதலிக்காதவர்கள், காதலில் தோல்வி அடைந்தவர்கள் எல்லா தரப்பினருக்கும் அப்பீல் ஆகிற ஒரு சப் ஜெக்ட்தான் காதல்! இப்போது இளைஞர்கள் நிறைய பேர் வந்திருப்பதால் அவர்களுக்குக் காதல்தான் பிரதானம் என்று தோன்றுகிறது. ஆனால், என் படங்களிலும் காதல் இருந்தாலும், அதையும் மீறி வேறு ஒரு விஷயத்தை முன்னிலைப்படுத்தி வருவதை நீங்கள் கவனித்திருக்கலாம். விக்ரமன் கூட, ஃபேமிலி சப்ஜெக்ட் நன்றாகப் பண்ணுகிறாரே!

***"இன்றுள்ள இளையதலைமுறை டைரக்டர்களில், உங்கள் மாதிரி திரைக்கதையில் பலமாக இருக்கும் டைரக்டர் யார் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்?"***

"எல்லாரும் ஒன்றிரண்டு படங்கள்தானே பண்ணியிருக்கிறார்கள்? அதை வைத்துச் சொல்வது கடினம். ஐந்தாறு படங்கள், வெரைடியான சப்ஜெக்ட்களில் சரண் நல்லா பண்ணுகிறார் என்று பேச்சு இருக்கிறது. சூர்யாவைப் பற்றியும் சொல்கிறார்கள். நான் இன்னும் 'குஷி' பார்க்கவில்லை.

***"அ.தி.மு.க.வில் இருந்தீர்கள். தனியாய்க் கட்சி கூட நடத்தினீர்கள். ஆனால் இப்போது அரசியலிலிருந்து முற்றிலுமாக ஒதுங்கி விட்டீர்களே! என்ன காரணம்?"***

"நான் அரசியலுக்கு லாயக்கானவன் இல்லை. அதற்குத் தேவையான குணங்கள் என்னிடம் கிடையாது. எனவே என்னால் அரசியலில் இருக்க முடியாது போய் விட்டது. இன்றைக்கு, ஒரு பொது ஜனத்தின் பார்வையில், நாட்டு நடப்புகளைப் பார்த்து, பாக்யாவில் கார்ட்டூன் போடுவதற்கு வேண்டிய அளவுக்கு நான் நாட்டு நடப்புகளைக் கவனிக்கிறேன். கட்சி பாகுபாடு இல்லாமல், நடுநிலையோடு கார்ட்டூன்கள் போடுகிறேன். அவ்வளவுதான்!

***"அரசியல் பற்றி உங்கள் பேச்சில் ஒரு விரக்தி தெரிகிறதே! என்ன காரணம்?"***

"பொதுவாகவே நான் உண்டு; என் வேலை உண்டு என்று இருக்கிற டைப். சினிமாவில் முழு கவனம் செலுத்திக் கொண்டிருந்த போது, எம்.ஜி.ஆர்., என்னை தமது கலை உலக வாரிசு என்று சொன்னார். அவர் உடல்நலமில்லாமல் படுத்திருந்த சூழ்நிலையில், அ.தி.மு.க.வில் பிரச்னை. நான் அ.தி.மு.க.வுக்காக பிரசாரம் செய்ய வேண்டும் என்று இங்கே இருந்த தலைவர்கள் எதிர்பார்த்தார்கள். நானை எம்.ஜி.ஆர். உடல் குணமாகி, திரும்பி வந்த பிறகு, "நான் இல்லாத சமயம், கட்சிக்கு உதவியிருக்கக் கூடாதா என்று கேட்டால், நாம் என்ன பதில் சொல்வது என்று நினைத்தேன். அந்தக் குழப்பமான சூழ்நிலையில், நானே நேரடியாய் அமெரிக்கா சென்று, தலைவரைச் சந்தித்து, அவர் கட்டளைப்படி மேற்கொண்டு முடிவு செய்யலாம் என்று நினைத்துத்தான் அமெரிக்கா போனேன். தலைவர் ஆசியுடன், பிரசாரத்தில் ஈடுபட்டேன். அவரது மறைவுக்குப் பின், தலைவரது துணைவியார் என்கிற முறையில் அவருக்குப் பின்னால் இருந்தேன். அப்போதுதான் நான் அரசியலுக்கு லாயக்கில்லை என்று உணர்ந்தேன். ஒதுங்கி விட்டேன்.

***"மறுபடியும் அரசியலில் பிரவேசிக்கும் எண்ணம் உண்டா?"***

"மறுபடியும் நான் சொல்லுகிறேன். என்னுடைய இடம் சினிமாதான்!"

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**



***"கண்டக்காரன் முன்னாடி சண்டை போட வேண்டாம்னு சொன்னேனே கேட்டியா?"***

***"ஏன்? என்ன ஆச்சு?"***

***"மறுபடி பீச்சுப்பக்கம் வரமாட்டோம்னு சந்தேகப்பட்டு சுண்டல்பாக்கியை உடனே செட்டில் பண்ணச் சொல்றான்!"***

***– கௌரி***



ஆடுகிறபோது ஆசிரிய நிலை மாறி தோழமைத் தோற்றம். நண்பனாய்.... நல்லாசிரியனாய்.. தோழனாய்... எங்கிருந்தோ... சலக்... சலக்... மைதானம் நிறைந்து களி துள்ளும் சூழல் ஆட்டம் முடிந்து பிரகாஷும் பார்த்திபனும் வியர்வையைத் துடைத்துக் கொண்டிருந்தனர்.

பிரகாஷ், ''இந்த வருஷம் ஆண்டு விழாவுல தூள் கிளப்பிடணும்'' என்றான். அனிதா இருந்து இதைப் பார்க்க இல்லையே என பார்த்திபன் யோசித்தான். பையன்கள் கலைந்து சென்றுவிட பார்த்திபன், பிரகாஷ், ரவி, பார்வையாளன் தங்கராஜ் நால்வரும் மெதுவாய்க் கிளம்பி தெற்கே நடந்தனர் அமராவதி ஆற்றுக்கு. முழங்கால் அளவு தண்ணீரில் குளியல். குளித்துக் கரையேறுகையில் மரத்தடி அமரலாம் என்றான் பிரகாஷ். ஒரு தென்னந் தோப்பில் அமர்ந்தார்கள்.

பார்த்திபன் நெடுநாள் கேள்வியை ரவி சாரிடம் கேட்டு விட்டான்.

"ஏன் சார், உங்க ஃபிரண்டு இப்படி நம்ம ஸ்கூல் பிள்ளைகளைத் துரத்துறதுல உங்களுக்குக் கோபமே வரலியா?"

"இதுல நான் ஏன் கோபப்படணும்? உனக்கு அனிதாவைப் பிடிச்சிருக்கற மாதிரி தங்கத்துக்கு பஸ் டிராவல் பொண்ணுகள்ல யாரையோ பிடிச்சிருக்கு. துரத்தறான். பாவம் அவனால லெட்டர் கூடக் குடுக்க முடியாது... ஏந்

சொன்ன சொல்படி தகர வட்டங்கள் சலக்குகின்றன. லசீம் ஆட்டம். ரவி சார் டேப் ரெக்கார்டருடனும் ஒரு டஜன் லசீம்களுடனும் பள்ளி மைதானத்தில் ஞாயிற்றுக்கிழமை இருந்தார். ஆடுவதற்கு தேர்ந்தெடுத்தப் பன்னிருவர் அல்லாது பார்வையாளர் பலரும் சேர்ந்து விட்டனர்.

"ஒன்..டு..த்ரீ... ஃபோர்... ஃபர்ஸ்ட் இப்படி, அப்புறம் இப்படி" பயிற்சி துவங்கிற்று. 'வீட்டுக்கு வீடு வாசப்படி வேணும்'மில் துவங்கி எட்டுப் பாடல்கள். ஒவ்வொரு பாட்டுக்கும் ஒவ்வொருவிதமாய் மூவ்மெண்ட்டுகள். அது உடற்பயிற்சியாயுமிருந்தது; நடனமாயுமிருந்தது ஒரே நேரத்தில்.

ரவி பி.ஈ.டி. மட்டுமல்ல நடன ஆசிரியனும் கூட என்பது மாதிரியிருந்தது அவரது கற்பனைத்திறன்.

நன்கு ஆடாத பையன்களை, 'சற்றே விலகியிரும் பிள்ளாய்' என்று விட்டு இடையில் புகுந்து ஆடிக் காட்டுகிறார். அப்படி

தங்கம் முடியாதில்ல.''

''ஆமாப்பா'' என்றான் செல்லமான கடுப்போடு தங்கராஜ்.

"ஒரு கட்டம் - ஒரு பருவம் முடியறதுங் கறது ரொம்பக் கஷ்டம்தான் இல்லியா நண்பா'' ரவியின் கண்கள் மெலிதாய்த் துளித்திருந்தன. வயதுகளற்ற காலம் வயது களைச் சுமத்துகிறது யாவரிலும் - எதன் மீதும். காலத்தின் புத்திமையோ கோள் களின் எடையோடு சிந்தனை மீது கவிகிறது.

"வீட்டுக்குப் போவோம்" என்றார் ரவி. ரவியின் வீட்டில் சாப்பாடு ஆன பின் பார்த்திபன் கிளம்புகையில், "பார்த்தி, கலை யைப் பார்த்தால் தினமும் ஓடச் சொல்லு'' என்றார். கலைச் செல்வன் அந்த ஆண்டு வட்டார அளவிலான தடகள ஓட்டத்தில் முதலாவதாக வர இருந்தான். பிறகு,

## க.சி. சிவகுமார்

"அனிதாவைப் பாக்கலியா?'' என்றார்.

"ஒருநாள் பஸ்ஸில் போகும் போது பார்த் தனுங்க சார். அது கவனிக்கலை.''

பிரகாஷ், ''மூலனூர் வஞ்சியம்மன் கோயில் விசேஷத்தப்ப பாத்துடுவம் சார்'' என்றான். பிரகாஷோடு பார்த்திபன் சேர்ந்து சிரித்தான்.

''திருவிழாவெல்லாம் இல்லன்னா ரொம்பக் கஷ்டப்பட்டுடுவீங்க இல்லியா?''

ரவி சாரிடம் விடைபெற்று பார்த்திப னும் பிரகாஷும் நடந்து வந்து கொண் டிருந்தனர். சுந்தரமூர்த்தி ஃபேன்ஸி ஸ்டோரைத் தாண்டுகையில் எதிரில் அம்ச வல்லி வந்தார். நேருக்கு நேர் கண்டுவிட்ட தால் இருவரும் நின்றனர்.



"ஏப்பா, அனிதா இல்லன்னா நீங்க வீட்டுக்கு வர மாட்டீங்களா?" என்று கேட்டார்.

"அப்படி இல்லீங்க ஆன்ட்டி... சும்மா தான்..."

"இன்னிக்கு வந்துட்டுத்தான் போகணும். வாங்க."

அவர்கள் வீட்டுக்குப் போன போது விடுமுறை தினமாதலால் நடேசன் வீட்டிலிருந்தார்.

இருவரையும் "படிப்பு எப்படிப்பா போய்ட்டு இருக்கு?" எனத் தனித்தனியாய் வினவினார்.

இந்தச் சூழ்நிலை பார்த்திபனுக்குக் கனவு போல இருந்தது. 'இது எப்படி சாத்தியம்?' எல்லாமே எப்படியோ சாத்தியப்பட்டுத் தான் திரவமாய் ஒழுகுகிற மாவுக் கரைசல் திடப் பொருளாகிறது. இந்த பஜ்ஜியைத் தாண்டி அனிதாவைக் காதலிப்பது சிரமம் என முதல் முறையாக பார்த்திபனுக்குத் தோன்றியது.

"அனிதா எப்ப வரும்ங்க சார்?" பார்த்திபனுக்கு இருந்த கேள்வியை பிரகாஷ், நடேசனிடம் கேட்டான்.

"மாசத்துல ஒரு சனி, ஞாயிறு வர்றா. எப்பன்னு சொல்ல முடியாது. நல்லாப் படிக்கிறா. இப்ப மூலனூர் ஸ்கூல் நல்லா இருக்கு. போன வருஷம் டென்த்ல ஃபர்ஸ்ட் மார்க் நானூத்து எழுபதுக்கு மேல."

நடேசன் சொல்லி முடித்த போது பார்த்திபனுக்கு நாம் மூலனூரிலேயே படித்திருக்கலாம் என்று தோன்றியது. சுவர்களும் சுவரெழுத்துக்களும் ஆணுக்கொருவிதம் பெண்ணுக்கொரு விதமாய்த்தான் இருக்கின்றன.

காதல் விலகாப் பிரவாகம். மோகம் குன்றா விலாசம்... மயங்கி மயங்கி... நெருங்க நெருங்க மாசி மாசம்...

மூலனூர் வஞ்சியம்மன் கோயிலுக்கு நோம்பு சாட்டியாகி விட்டது. பண்டிகை. பார்த்திபனும் பிரகாஷும் 'மாவிளக்கு' தினத்தில் சாயங்காலமே மூலனூரில் குடியேறி விட்டார்கள். இரவு கவிந்த பிறகுதான் 'மாவிளக்கு' பவனிகள். அப்போது அண்ணா நகர் கும்பலுடன் அனிதா வருவாள். அதற்கு முன்னரே வழியிலெங்காவது அனிதா தென்பட்டால் பரவாயில்லை என எதிர்பார்த்து ரோட்டில் கிழக்கு மேற்காக நடக்க ஆரம்பித்தனர். தென்படுவது என்ன? வட படுவது, மேற்குப் படுவது, கிழக்குப் படுவது என எந்தத் திசையிலிருந்தாவது பட்டால் சரி. திக்கற்றவள் தேவதை. காட்சிக்குக் கருணை வேண்டும். காதற்கண்களில் பட்டு உயிர்ப்பிக்க.

மேற்கே நடக்கிறேன் பேர்வழிகள் என ஒழுங்குமுறை விற்பனைக் கூடம் வரை நடந்தனர். அங்கிருந்து கிழக்கே திரும்பி யூனியன் ஆஃபீஸ் வரை. திரும்ப மேற்கே நடக்கையில் நூலகம் வரை. ஒவ்வொரு தடவையும் காவல் நிலையத்தைக் கடந்து நடக்கையில்தான் கொஞ்சம் பயமாயிருந்தது.

காவலர்கள் பகலில் சந்தேகக் கேஸில் பிடிக்க மாட்டார்கள் என நம்பலாம். ஆனாலும் இது விழா மாலைப் பொழுது. உபரியான போலீஸார் வருகை வேறு இருந்தது.

பார்த்திபனது பிரகாஷது உயரமுள்ள பெண் காவலர்கள் கடந்து போய்க் கொண்டிருந்தனர் ஒழுங்குக் காப்புக்கு. விஜயசாந்தி மாதிரி வாட்டசாட்டமான பெண் போலீஸ்கள் தமிழகத்தில் குறைவுதான். உற்சாகமும்

**"சந்தேகத்தின் பேரில் உன்னை போலீஸ் ஸ்டேஷனுக்குக் கூட்டிட்டுப் போகலாம்னு இருக்கேன்!"**

**"நான் ஐம்பது ரூபாய் தந்துட்டா?"**

**"சந்தோஷத்தின் பேரில் நான்மட்டும் ஸ்டேஷனுக்குத் திரும்பிடுவேன்!"**

**– கொங்கணாபுரம் வே.செந்தில்**

வினோத ஒலியும் கொண்டதாயிருந்தது அந்த மாலைச் சூழல்.

விதவிதப் பவுடர்கள் மணக்க புதிய அல்லது சமீபத்திய ஆடைகளுடன் இளமை மிஞ்சியுள்ள மக்கள் கடந்தும் இணைத் திசையிலும் நடந்தனர்.

ஆறரை மணிவாக்கில் பெட்ரோல் பங்க் அருகே அவர்கள் நிற்கையில் ஒரு 'லேடி பேர்ட்' (Lady Bird) தென்பட்டது. முன்னால் உள்ள கறுப்புக் கூடையில் 'லேடி பேர்ட்' என எழுதிய லேடீஸ் சைக்கிளில் அனிதா வந்தாள்.

தமிழ்நாட்டில் அனேக காலேஜ், கான்வென்ட் மாணவிகள் ஓட்டுகிற பி.எஸ்.ஏ. தயாரித்த பெண்கள் பை-சைக்கிள். கூடை என்றோ பெட்டி என்றோ வர்ணிக்க முடியாத அந்தப் பேழை திறந்த மேல்பரப்புடன் ஹேண்டில் பாருக்கு முன்னால் இருந்தது. கறுப்புப் பேழை. விமானங்களின் 'ப்ளாக் பாக்'ஸுக்கு நிகரானது. அதில் புத்தகங்கள், உணவுப் பொட்டலம், காய்கறிகள், இளைஞர் இதயம் எதுவும் கிடைக்க வாய்ப்பு உள்ளது.

இருவரையும் பார்த்து, 'ச்சக்' என பிரேக் அடித்து நிறுத்தினாள். 'லேடி பேர்ட்' பெட்டிக்குள் பஞ்சு கிடந்தது. பார்த்தி எடுத்து நெஞ்சில் வைத்திருந்தானாகில் பற்றி எரிந்திருக்கும். அப்படி ஏதும் நிகழவில்லை. பெட்ரோல் பங்க் பக்கத்தில். பெயர் கூவி முகமன் செய்தாள். பிறகு,

"மாவிளக்குக்குத் திரிபோட சித்தி பஞ்சு வாங்கிட்டு வரச் சொல்லுச்சு. கொடுத்துட்டு வந்துடறேன்" சைக்கிள் மிதித்து மறைந்து போனாள். பஞ்சவர்ணக்கிளி பறந்த பின்னாலும் நெஞ்சுக்குள்ளே தீயிருக்கும்.

"இப்ப என்ன பண்றது?"

"வெயிட்டிங்தான்."

வெயிட்டிங் என்றாலும் ரொம்பக் கனமான வெயிட்டிங்தான் அது. சோமன் கோட்டை, பேர நாய்க்கன் வலசிருந்தெல்லாம் மாவிளக்கு கோஷ்டிகள் டெம்போவில் போகின்றனர். அதில் போகும் பெண்கள் கோயிலுக்கு முன்னால் இறங்கி தப்படி தவிழ மதில் சுற்றி வருவார்கள். தீப்பந்த ஒளியில், பெட்ரோமாக்ஸ் ஒளியில், மின் ஒளியில், சீரியல் பல்புகளின் விதவித வண்ணத்தில் எல்லா வகை ஒளிச்செறிவிலும் இளம் பெண்களின் வதனம் பார்க்கும் வாய்ப்பை விட்டு விட்டு.... பெட்ரோல் பங்குக்குப் பக்கத்தில்.



பெட்ரோல் பங்க் கடந்து போனாள். பஞ்சுப் பொதியுடன் ஒருத்தி. ஹைஹவி இன்ஃப்ளேமபல். ஹைஹவி இடியாட்டிக்.

"ஏண்டா அண்ணாநகர்ங்கற பேர அனிதா நகர்னு மாத்தினா என்ன?"

"அடிவாங்காதே கம்முனு இரு."

எட்டு மணிவாக்கில் அண்ணாநகர்ப் பெண்கள் தத்தம் தட்டுகளைத் தலையில் அல்லது தோளில் பெருவிரல் பட உள்ளங்கையில் ஏந்தி நடந்து வந்தனர் குழுவாக. தட்டுகளில் மாவு, எண்ணெய், திரி, விசிறிப் பூ இவைகளிருந்தன. இந்த விசிறிப் பூ நாட்டுப்புறச் சினிமா மெட்டுக்களுக்குக் குண்டுப் பெண்கள் உடுத்துகிற எல்லா வண்ணங்களையும் உள்ளடக்கியது. ஆனால் மணமில்லாத பூ. செய்த காகிதப் பூ.

அனிதா வந்தது வந்தாள் துணையுடன் வந்தாள். சித்தி!

பக்கவாட்டில், முன் தொடர்ந்து, பின் தொடர்ந்து, பவனியில் தங்கி, பின் ஓடி இணைந்து, முன் சென்று தேங்கி வந்த போது இணைந்து.. பார்த்திபனும் பிரகாஷும். பங்கிலிருந்து கோயில் வரையான இரண்டு கி.மீ.யில் பார்த்திபனை இருமுறை கல்லும் இருபது முறை கண்ணும் தட்டி விழுந்தாட்டியது.

வஞ்சியம்மன் முன் வைத்து நேர்ச்சைகள் முடிந்தபின் சித்தியைத் தவிர்த்த அனிதா தோழிகளுடன் 'தேர்க்' கடை சுற்றி வந்தாள். தருணம் வாய்த்ததென அருகில் சென்றனர் பார்த்திபனும் பிரகாஷும். பார்த்திபன்,

"ஏன் அனிதா வர்றேன்னுட்டு வரலை?" என்று கேட்டான்.

"சித்தி பிடிச்சுக்கிச்சு... நீங்க ஏன் பின்னாடியே சுத்தறீங்க?"

"என்ன அனிதா இப்படிப் பேசறே?" அதிர்ச்சியில் கண்ணும் வார்த்தையும் கலங்கிற்று பார்த்திபனுக்கு. "உனக்குப் பிடிக்கலியா என்னைய. லெட்டர் போடறேன்னுட்டு எழுதவேயில்லியே லெட்டர்?"

துணைப் பெண்களில் ஒருத்தி, "நீங்க யாரு? நீங்க யாரு?" எனக் கொந்தளித்தாள். அவளைக் கைகிள்ளி அடக்கிய அனிதா, பார்த்திபனைப் பார்த்து,

"அதெல்லாம் மறந்துடுங்க" என்றாள்.

பதினெட்டு வகை மூலிகைகளாலும் குணப்படுத்த முடியாத அதிர்ச்சி அடைந்தான் பார்த்திபன். சொல்லிக் கொள்ள ஏதுமின்றி இரு பையன்களும் புறமுதுகு காட்டினார்கள்.

கோயில் வடபுறக் கலை மேடையில் கல்லூரி மாணவர் வழங்கிய நடன நாட்டிய ரெக்கார்டு எகத்தாளம் பண்ணுவது போலிருந்தது. பார்த்திபன் ஒரு வில்ஸும் தீப்பெட்டியும் வாங்கினான்.

இருவரும் வடக்கே சிறு தூரம் நடந்து கிழக்கே மண் பிரியும் தாளக்கரைப் பாதையில் நடந்தனர். பழக்கமில்லாத சிகரெட்டைப் பற்றவைத்தான் பார்த்திபன். அவன் இருமுவதற்கு முன்... முகத்தில் தீச்சுடர் ஒளித்துக் கொண்டிருந்த மஞ்சள் இருளில் பிரகாஷ் சோகமாய்ச் சொன்னான்.

"அவ உன்னையும் ஏமாத்திட்டா."

(தொடரும்)



# பாரதி பிறந்தார்



எட்டயபுரம் வீதிகளிலே நடந்து போகையிலேயே எனக்கு என்னமோ செய்தது. "இந்த வீதிகளின் வழியாகப் பாரதியார் எத்தனையோ நாள் நடந்து போயிருப்பாரல்லவா? இந்தத் தெருப் புழுதியெல்லாம் அவர் மேலும் பட்டிருக்குமல்லவா?" என்று நினைத்த போது, பாரதியாரோடு புதிய உறவு ஏற்பட்டு விட்டதாக எனக்குத் தோன்றியது. பின்னோடு வந்தவர்களில் ஒருவரின் கால் தடுக்கி நான் கீழே விழப் பார்த்து அவர் என்னைப் பிடித்துக் கொண்டபோது, "அடடா! விழாமற் போனோமே? இந்த எட்டயபுரத்துப் புழுதியில் இன்னும் கொஞ்சம் சென்னைக்குக் கொண்டு போயிருக்கலாமே?'' என்று நினைத்தேன்.

பாரதியாரின் வாழ்க்கையில் ஒரு சிறு சம்பவமும் அப்போது நினைவுக்கு வந்தது.

பாரதியார் சில காலம் கடையம் என்னும் கிராமத்தில் தங்கியிருந்தார். அப்போது ஒரு தடவை எங்கேயோ போவதற்காக ரயில்வே ஸ்டேஷனுக்குச் சென்று ரயில் ஏறினார். பெரும்பாலும் மெய்மறந்து பரவச நிலையில் உள்ளவராதலால், ரயில் ஏறும்போது காலைப் படியில் வைப்பதற்குப் பதிலாகப் பக்கத்தில் வைத்து விட்டார். தடால் என்று பிளாட்பாரத்தில் விழுந்தார்! அருகில் இருந்தவர்கள் எல்லாரும் "ஐயோ! பாரதியார் விழுந்து விட்டாரே!" என்று அலறிப் புடைத்துக் கொண்டு அவரைத் தூக்க வந்தார்கள். ''தூக்காதே! கிட்டே வராதே!" என்று ஆவேசம் வந்தவரைப் போல் கூவினார் பாரதியார். "இது என்ன வம்பு!'' என்று மற்றவர்கள் திகைத்து நிற்க, பாரதியார், மீண்டும் "ஆஹா! இந்தப் புண்ணிய பூமியிலே படுப்பதற்கு, இந்தப் பாரத நாட்டின் புழுதியிலே புரள்வதற்குக் கொடுத்து வைக்க வேண்டாமா? எத்தனை பெரியோர்கள், எத்தனை மகான்கள், எவ்வளவு கற்புக்கரசிகள், எவ்வளவு மகாகவிகள், கலைஞர்கள், அவதார புருஷர்கள் வாழ்ந்த தேசம் இது? இப்பேர்ப்பட்ட தாய் நாட்டின் மண்ணில் இன்னும் கொஞ்சம் புரண்டு விட்டு வருகிறேன். எல்லாரும் எட்ட நில்லுங்கள்!'' என்று சொல்லிவிட்டு, அனைவரும் பார்த்திருக்க, அந்த ரயில் ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் உண்மையிலேயே புரண்டாராம். ரயில் டிரைவரும் கார்டும்கூடப் பிரமித்துப் போய் நின்று, பாரதியார் எழுந்து வந்து ரயில் ஏறிய பிறகுதான் ரயிலை விட்டார்களாம்." ★

எட்டயபுரத்துப் புழுதியில் விழுந்து புரண்டால் ஒருவேளை அடுத்த ஜன்மத்திலாவது பாரதியாரைப் போல் ஒரு பாடல் பாடும் சக்தி வராதா என்ற ஆசை எனக்கு அப்போது ஏற்பட்டது. அப்படிச் செய்தால் ஒருவேளை வேஷ்டி அழுக்காய்ப் போய்விடுமோ என்ற பயம் வந்து மேற்படி ஆசையைத் தடுத்துக்கொண்டது.

---

★ மேற்படி சம்பவம் உண்மையில் நடந்தது என்று நான் சத்தியம் செய்வதற்கில்லை. ஆனாலும் பாரதியார் பாடல்களில் அடங்கியுள்ள தேசபக்தி வெறியைப் பார்க்கும்போது, சம்பவம் நடந்திருக்கக் கூடியதுதான் என்று தோன்றுகிறது.

**அமரர் கல்கி**

# நடக்குமென்பார் நடக்கும்!

## மேஷம்

உங்க திறமை வெளிப்படற நேரம். மதிப்பு செல்வாக்கு உயரும். வெளியூர் பயணத்தால சில நன்மைகள் கிடைக்கும். பண நடமாட்டத்துக்குப் பஞ்சமில்லை. கொடுக்கல் வாங்கல்ல லாபம் இருக்கு. வெளிநாட்டுல இருந்து நல்ல செய்தி வரலாம். கலைத் துறையை சேர்ந்தவங்க பொறுப்போட செயல்படணும். கணவன் மனைவி உறவுல சலசலப்பு ஏற்படும். கவனமா இருங்க. சின்ன சின்னப் பிரச்னைகள் வரலாம். அலைச்சலைத் தவிர்த்திடுங்க.

## ரிஷபம்

இந்த வாரம் அலைச்சல் அதிகமா இருக்கும். மனகுல ஏதாவது குழப்பம் இருக்கும். உடல் ஆரோக்கியத்துல கவனம் வேணும். கொடுக்கல் வாங்கல்ல எச்சரிக்கையா இருங்க. வீண் வம்பு வழக்குல ஈடுபட வேண்டாம். முன்னபின்ன அறிமுகமில்லாதவங்ககிட்ட எச்சரிக்கையா பழகுங்க. புதிய முயற்சிகளைத் தள்ளிப் போடறது நல்லது. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றம் இருக்கு. அரசியல்வாதிகளுக்குப் புகழ் ஓங்கும்.

## மிதுனம்

இந்த வாரத்துல விஷேசமான பலன்களை எதிர்பார்க்க முடியாது. மனம் அலைபாயும். கோயில் குளங்களுக்குப் போய்ட்டு வாங்க. புதிய முயற்சி, பண முதலீடு போன்ற விவகாரங்களை இந்த வாரம் தவிர்த்திடுங்க. வம்பு வழக்கை கண்டா தூரப் போயிடுங்க. பொருளாதாரம் சாதாரணமாத்தான் இருக்கும். செலவு பிச்சிப் பிடுங்கும். வீண் அலைச்சலைத் தவிர்த்திடுங்க. யார்ட்டயும் வெளிப்படையா பழக வேண்டாம். பயணத்தைத் தவிர்த்திடுங்க.

## கடகம்

உங்க புத்திசாலித்தனம் வெளிப்படும். பொருளாதார நிலை திருப்தியா இருக்கும். வர வேண்டிய பணம் திடீர்னு வந்து வீட்டுக் கதவைத் தட்டும். எதிர்ப்புகள் இருக்காது. நண்பர்கள் உதவ முன் வருவாங்க. வீட்ல விஷேசம் நடக்க சந்தர்ப்பம் ஏற்படும். புதுசா ட்ரெஸ், நகைகள் வாங்க வாய்ப்பிருக்கு. வெளிநாட்டுல இருந்து நல்ல செய்தி வரும். கணவன் மனைவி உறவு சீராக இருக்கும். அரசியல்வாதிகள் மதிப்பு, புகழ் உயரும். பயணத்தைத் தவிர்த்திடுங்க.

## சிம்மம்

உங்க மதிப்பு புகழ் உயரும் மருத்துவர்களுக்கு வரவேற்பு கூடும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு எதிர்ப்பும் சோதனையும் வரலாம். வெளிநாட்டுல இருந்து நல்ல செய்தி வரும். அக்கம் பக்கம் பார்த்து நடந்துக்கங்க. காயம் ஏற்பட வழியிருக்கு. உஷாரா இருங்க. வீண் வம்பு, சண்டை நடந்தா தலை காட்டாதீங்க. எதிர்பாராத செலவு திடீர்னு வந்து டென்ஷன் ஆக்கும். சிலருக்குப் புது பொறுப்புகள் வந்து சேரலாம்.

## கன்னி

உங்க திறமை வெளிப்படற நேரம் இது. எந்தக் காரியத்தை எடுத்தாலும் வெற்றிதான். பொருளாதாரப் பிரச்னை இருக்காது. பணம் பல வழியில வரும். அரசியல்வாதிகளுக்குப் புகழ், பாராட்டு உண்டு. பார்ட்னர்ஷிப்ல தொழில் பண்றவங்களுக்கு வளர்ச்சி இருக்கு. எழுத்து, பத்திரிகைத் துறையில உள்ளவங்க பொறுப்போட செயல்படறது நல்லது. சங்கடங்கள் எட்டிப் பார்க்கும். முதலீடு விஷயத்துல எச்சரிக்கை அவசியம்.

## துலாம்

உங்களோட நம்பிக்கை இந்த வாரம் அதிகரிக்கும். அரசு விவகாரங்கள்ல உங்களுக்குச் சாதகமா திருப்பம் வரும்.

அரசியல்வாதிகளுக்கு நிறைய பாராட்டு மேடை கிடைக்க வாய்ப்பிருக்கு. சொத்து வாங்கறதுக்கு இந்த வாரம் சான்ஸ் உண்டு. எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்களுக்கெல்லாம் நல்ல பெயர் கிடைக்கும். மக்கள் நலத்துல கவனம் வையுங்க. அலைச்சலைத் தவிர்த்திடறது நல்லது.

## விருச்சிகம்

எந்தக் காரியத்தையும் எப்பாடு பட்டாவது நிறைவேற்றிடுவீங்க. முக்கிய மானவங்க உங்களுக்கு உதவ முன் வருவாங்க. திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளுக்குச் சான்ஸ் இருக்குதாம். வேலை இல்லாதவங்களுக்கு அப்பாயின்மெண்ட் ஆர்டர் கதவைத் தட்டும். வீட்ல விஷேசம் நடக்கறதுக்கான சந்தர்ப்பம் கூடிவரும். வெளிநாட்டுப் பயணத்துல நல்ல பலன் உண்டு. சின்ன சின்ன பிரச்னைகள் அப்பப்ப தலை காட்டும். அதைப் பக்குவமா சமாளிச்சுடுவீங்க. அறிமுகமில்லாதவங்ககிட்டப் பழகும் போது எச்சரிக்கை அவசியம்.

## தனுசு

உங்க திறமை வெளிப்படும். எதிர்ப்புகள் என்ன இருந்தாலும் சமாளிச்சிடுவீங்க. அரசியல்வாதிகளுக்குப் புகழ், பாராட்டு அதிகரிக்கும். கம்ப்யூட்டர் எலக்ட்ரானிக்ஸ் துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு எதிர்ப்பு இருந்தாலும் வளர்ச்சி இருக்கும். வெளியூர் பயணத்தைத் தவிர்த்திடுங்க. எதிலயும் அவசரம் வேண்டாம். வீண் சண்டை சச்சரவுகள்ல தலையிடாதீங்க. மனசுல அடிக்கடி குழப்பம் வந்து இம்சை பண்ணும். கவலைப்படாதீங்க.

## மகரம்

இந்த வாரம் உங்க அழகு பளிச்சிடும். அடிக்கடி கண்ணாடிப் பார்ப்பீங்க. குடும்பத்துல விஷேசம் நடக்கலாம். எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்களுக்கெல்லாம் புகழ் கூட வாய்ப்பு இருக்கு. பொருளாதாரம் திருப்தியா இருக்கும். பண நடமாட்டத்துக்குப் பஞ்சமில்லை. திடீர் அதிர்ஷ்டம் வந்து எட்டிப் பார்க்கும். எதிர்ப்புகள் குறையும். பயணத்துல பாதுகாப்பு அவசியம். உஷ்ண சம்பந்தமான உபாதைகள் வர வாய்ப்பிருக்கறதால அலைச்சலைத் தவிர்க்கறது நல்லது.

## கும்பம்

இந்த வாரம் மனசுல துணிவு பிறக்கும். எதிரிகள் அடங்கிப் போவாங்க. இராணுவம் காவல்துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு வெற்றிதான். டாக்டர்களுக்குப் புகழ் பாராட்டு உண்டு. வெளிநாட்டுத் தொடர்பு நல்ல தகவல் கொண்டு வரும். பிற மொழி பேசறவங்க உங்களுக்கு உதவுவாங்க. சின்ன சின்ன பிரச்னைகள் ஏற்படும். எதையும் நிதானமா செய்யுங்க. திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளுக்கு சான்ஸ் இருக்கு. யார்ட்டயும் வெளிப்படையா பேசாதீங்க.



**மீன ராசிக்காரரான மனோஜுக்கு மனசுல குழப்பம் வந்துகிட்டே இருக்குமாம்.**

## மீனம்

உங்களோட நிர்வாகத்திறமை இந்த வாரம் பளிச்சிடும். எடுத்தக் காரியங்களை எப்படியாவது முடிச்சிடுவீங்க. வியாபாரிகளுக்கு வளர்ச்சி இருக்கு. எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்கள் எண்ணம் நிறைவேறும். மனசுல ஏதாவது குழப்பம் இருந்துட்டே இருக்கும். அலைச்சலைத் தவிர்த்திடுங்க. வெளியூர் பயணம் இப்ப வேணாம். விபத்து ஏற்பட வாய்ப்பிருக்கு. கணவன் மனைவிக்குள்ள மன வருத்தம் வரலாம். கொஞ்சம் அடக்கி வாசிங்க.

# அலை உறங்கும் கடல் 6

**சா**லையின் சந்தடி கொஞ்சம் அடங்கியிருந்தது. பாங்குர் தர்மசாலை வாசலில் கடைசியாகப் பத்தரைக்கொரு வேன், மிகுந்த இரைச்சலுடன் வந்து நிற்க, ஒரு கூட்டம் பிரம்புக் கூடைகளுடன் இறங்கி உள்ளே சென்றதும் தெரு நாய்கள் மட்டும் சற்று நேரம் குரைத்து விட்டுப் படுத்துறங்க ஆரம்பித்து விட்டன. சேவாபாரதி மருத்துவமனையிலிருந்து ஹீனமான ஒரு குரல் வலியில் துடிப்பதாகக் கேட்டது நீலுப்பாட்டிக்கு. மற்றபடி நிரம்பிப் படர்ந்திருந்த நிசப்தத்தின் மர்ம வெளிகளை தியானித்துக் கொண்டிருந்தன அவளது செவிகள்.

அவனுக்கு அருகே அடுத்த படிக்கட்டில் முழங்கால்களைக் கட்டிக் கொண்டு குத்திட்டு அமர்ந்திருந்த உமாவுக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது. தலைகவிழ்ந்திருந்தான் அவன். உதிரும் ஒரு துளி சுடுநீரின் உண்மைக் காரணத்தைப் பாட்டி கண்டுபிடித்துவிடக்கூடும்.

அந்த வட இந்தியன், 'நீ என்னுடன் வந்து விடுகிறாயா? நூறு ஏக்கர் நிலம் உன் பேரில் எழுதி வைக்கிறேன்' என்று மயக்கத்தின் விகார நிலையில் கண் சொருகிப் பேசிய போது கூட அவனுக்குக் கோபம் வரவில்லை. இந்தச் சூழலில் இன்னும் வாழ வேண்டிய நாட்கள் எத்தனை என்கிற சிந்தனையும் அருள் எப்போது திரும்பி வருவானென்கிற கவலையுமே மிகுந்திருந்தது.

ஆவேசம் கொண்டவன் போலப் பாட்டி விறகுக் கட்டையை அவன் மீது விசியெறியவும் அபூர்வமாகச் சந்ததம் கொண்டு அப்பாவும் அவன் கழுத்தைப் பிடித்து வெளியேற்றவுந்தான் அவனுக்குச் சூழ்நிலையின் அதீத வெம்மை உறைத்தது.

பெரும் பிசகு செய்து விட்டோம் என்கிற பரிதவிப்பு அப்பாவின் முகத்தில் தெளிவாகத் தெரிந்தது. இரு கரங்களையும் பிசைவதும் தலையிலடித்துக் கொள்வதும் குறுக்கும் நெடுக்குமாக இலக்கற்று நடப்பதும் கிடைப்பதை வீசியெறிவதுமாகத் தன் பிழையைத் தன்னிலிருந்து உதிர்த்து விட அவர் முயற்சி செய்வதாகத் தோன்றியது அவனுக்கு.

இதனாலெல்லாம் திருப்தியுறாதவராக, ஒரு விநாடி அவளருகே வந்து, "மானசீகமா சேவிச்சே விடறேன். இனிமே இப்படி யாரையும் கூட்டிண்டு வந்து நிக்க மாட்டேன். சத்தியம் இது! மறந்துடு. இந்தச் சம்பவத்தை மனசுலேருந்து துடைச்சி அழிச்சுடு" என்று சொன்னார்.

உமா பதிலேதும் பேசவில்லை. நீலுப் பாட்டிதான் ஓயாமல் புலம்பிக் கொண்டும் சபித்துக் கொண்டுமிருந்தாள். வழக்கத்துக்கு விரோதமாக அப்பா அவனுக்கு ஒரு சொல் கூட பதில் கூறாததும் அவனைத் திட்டவோ, எரிந்து விழவோ செய்யாததுமே அவளது சாபங்களையும் ஏச்சுக்களையும் உள்ளபடியே தனக்குரியதென எண்ணி அவர் ஏற்றுக் கொள்வதாக அர்த்தமானது உமாவுக்கு.

அவர்தான் என்ன செய்ய முடியும்? கழுத்தை நெரிக்கும் குடும்பத்தின் பொருளாதார நெருக்கடிகளுக்கு

எப்படியாவதொரு தீர்வு காணத் தனியாளாகப் போராடிக் கொண்டிருக்கிறார். மனத்தில் பதிந்து உரைந்திருக்கும் மந்திரங்களின் ஒவ்வொரு சொல்லுக்கும் அவர் ஒரு விலை நிர்ணயித்திருப்பாராயிருக்கும். ஒவ்வொரு முறை உச்சரிக்கும் போதும் அவற்றின் அதிதேவதைகளையல்ல; விளைவான வருமானத்தையே அவர் சிந்தையில் எண்ணிப் பார்த்துக் கொண்டிருக்கக்கூடும். 'தவறல்லவா இது' என்கிற உறுத்தல் ஆரம்பக் காலங்களில் இல்லாமலிருந்திருக்காது. மனிதன் பழக்கங்களின் அடிமை. மென் உணர்வுகளை மறக்கடிக்கச் செய்யும் பழக்கங்கள்.

"நடக்கறதொண்ணும் எனக்குப் பிடிக்கலை, கேட்டியா? நான் சொல்றதை மனசுல அழுத்தி எழுதி வெச்சுக்கோ" என்று



பா. ராகவன்

விட்டு, பாட்டி அவளருகே இன்னும் நெருங்கி வந்து அமர்ந்தாள்.

"குட்டி, உங்கப்பன் ஏன் இப்படி காசுக் காக இட்சிணியாட்டம் அலையறான்னு தெரியலை. உன் கல்யாணத்துக்குன்னு ஏதாவது சேர்த்து வைக்கிறானான்னும் தெரியலை. தவிர இப்படி சம்பாதிக்கற காசு, சேரவும் சேராது. எனக்கென்னவோ உன் கல்யாணத்தை நீயே பார்த்துண்டுடுவேன்னு அடிக்கடி தோணறது. சொல்லு, அன்னிக்குக் கேட்டதையே திருப்பிக் கேட்கிறேன். நீ யாரையாவது மனசுல வெச்சுண்டிருக்கியா?"

பாட்டியிடம் சொல்லி விடலாமா என்று அவள் நினைத்தாள். பின்விளைவுகள் எப்படியிருக்கும் என்பது யூகித்தறியக்கூடிய தாக இல்லை. தவிர, கண்ணுக்குப் புலப் படாததொரு மானசீக தருமக் கோட்டைத் தன்னைச் சுற்றி வரைந்து கொண்டு வாழும் பாட்டிக்குக் காதல் புரியுமா? மீனவன் என்று சொன்னால் அவள் மனம் என்பது விளங் குமா? பாட்டி உடனே தன் மூக்கைப் பொத்திக் கொள்ளக்கூடும். மனத்துக்கு உண்டா நாற்றமும் வாசனையும்?

"ஆட்கள் வேற வேறன்னாலும் ஆன்மா ஒண்ணுதான்னு ஒத்துக்கறதுல எனக்கொண் ணும் பிரச்னை இல்லை. ஆனா, மீன் வாச னையை நீ சகிச்சிக்கலாமே தவிர விரும்ப முடியுமான்னு யோசிச்சுப் பாரு. மீன் வாச னைன்னா, மீன் வாசனை மட்டுமில்லை" என்று ஒரு குழப்பக் குளத்தில் தன்னைப் பிடித்து அவள் தள்ளிவிடக்கூடும்.

ஒருகணம் அருள்தாஸின் தாயின் முகம் அவள் கண்முன் வந்து போனது. மறு விநாடி பாட்டியின் நெற்றியை உற்றுப் பார்த்தாள். துலங்கும் திருநீறு, தீப்பட்டை களாகச் சுடர்வது போலப் பட்டது அவ ளுக்கு. நீண்டதொரு பெருமூச்சில் தன் உயிர் கரைந்து விடாதா என்றிருந்தது.

"நான் கேட்டதுக்குப் பதிலே இல்லியே உமா?" என்று நீலுப்பாட்டி மீண்டும் கேட் டாள்.

"என்னது பாட்டி?"

"நீ யாரோடயாவது காதல் பண்ணிண் டிருக்கியா?"

அவளுக்குக் கோபம் வந்தது. "நீ என் னத்தை உன் கனவில கண்டேன்னு இப்படி என் பிராணனை வாங்கறே?"

"இல்லேன்னா இல்லேன்னு சொல்லு. என் மேல எரிஞ்சு விழாதே. என் கவலை உனக்கு இப்பப் புரியாது."

"என்ன கவலை?"

"உன்னைப் பத்திதான். ரொம்பக் கஷ்டப் படப் போறேன்னு ஒரு உள்ளுணர்வு சொல்றது. அதான் மனசு ஆறமாட்டேங் கறது. நானும் போய்ச் சேர்ந்துட்டா அப் புறம் உன்னை யார் இருந்து பார்த்துப்பா?"

"அதையும் உன் கனவுலேயே பார்த்துச் சொல்லேன், நீ எப்ப போவே? அப்புறம் என்னை யார் பார்த்துப்பான்னு?"

பாட்டி அவள் கைகளைப் பிடித்துக் கொண்டு சற்று நேரம் பேசாதிருந்தாள். அவள் பார்வை வானத்தில் நிலைத்திருந் தது. இரண்டு நட்சத்திரங்கள் வேக வேக மாக ஒன்றையொன்று நெருங்கி வந்து கொண்டிருந்தன. தனித்தனிக் கோடுகளாகப் பெருகிக் கொண்டிருந்த அவற்றின் ஒளிப் பாதை நெருங்கி வர வர, ஒரு குறிப்பிட்ட இடத்தில் அதிக வெளிச்சமும் புகை சூழ்ந்த மூடு படலமும் உருவாவது போலிருந்தது.

சட்டென்று பாட்டி சொன்னாள் : "மேல பாரு."

"என்னது?" என்று உமா கேட்டாள்.

நீலுப்பாட்டி, சரியாக அந்த இரு நட் சத்திரங்களைச் சுட்டித் தன் வலது கை விரலை நீட்டினாள்.

"இடதுபக்கம் இருக்கறது வாசவி. வலது பக்கம் நிக்கறது ப்ரியநாசினி. வாசவி நகர மாட்டா. ஆனா நகர்றது போல நடிப்பா. இவ இருக்காளே, ரெண்டாவது? ராட்சஸி. அசைஞ்சு அசைஞ்சு தளுக்கு பண்ணிண்டு வந்து மோதுவா. இவ மோதி இன் னொண்ணு உதிர்ந்தா நமக்கொண்ணும் சமிக்ஞை இல்லை. ஆனா, மோதின

**"என்னோட அடுத்த படம் சில்வர் ஜூப்ளி தான்!"**

**"எப்படிச் சொல்றீங்க?"**

**"படத்துக்கு 'சில்வர் ஜூப்ளி'ன்னு பேர் வெச்சுட்டேனே!"**

**– கொங்கணாபுரம் வே. செந்தில்**



சூட்டுல இவளே மறைஞ்சு போனாளோ, விநாசம்தான்."

உமா அசுவாரசியமாகச் சூள் கொட்டினாள்.

"இதெல்லாம் நீ எதுல படிச்சு தெரிஞ்சுண்டே பாட்டி?"

"படிக்கறதாவது? ரெண்டாம் ஃபாரத்தோட பள்ளிக்கூடப் பக்கம் அனுப்ப மாட்டேனுட்டார் என் தகப்பனார். எத்தனை கெஞ்சியிருப்பேன்? அழுதிருப்பேன்? ம்ஹும்! மசியலையே மனுஷன்? அப்புறம் கல்யாணம் பண்ணி வெச்சா, எட்டு வயசுல. முப்பது வயசோட எல்லாம் போச்சு. குழந்தை குட்டின்னு இருந்திருந்தாலாவது வேற மாதிரி ஆகியிருப்பேன். ஏதோ எஸ்ங்கண்ணா கையேந்தலா ஏந்தினுட்டானோ, இப்ப இருக்கற ஸ்திதி வாய்ச்சுது.

"எதுக்குச் சொல்றேன்னா, பொம்மனாட்டிகளுக்குப் பாதுகாப்பே தராத சமூகம்டீ இது. ஒண்ணு, புருஷனை அண்டி இரு. இல்லியா, பொறந்ததை நம்பி இரு. ரெண்டும் தொலைஞ்சுதோ, போச்சு! நீ கூட கரஸ்பாண்டன்ஸுல பி.காம்., வாசிக்கறேன்னதும் நான் ஏன் ஒரேயடியா ஆதரிச்சு உங்கப்பனைப் பணம் கட்ட வெச்சேன் தெரியுமா? இதுக்குத்தான்! மனுஷா கைவிட்டுடலாம். கடவுளே கூடக் கைவிட்டுடலாம். ஆனா கல்வி கை விடாது! சாகற மட்டும் அது காபந்தா இருக்கும்."

தொடர்பற்ற சொற்றொடர்களின் மூலம் பாட்டி எதை உணர்த்த விரும்புகிறாள் என்று உமா யோசித்தாள். மிகத் தீவிரமாகத் தன் மனச் சஞ்சலங்களை அவள் ஆராய்ந்து கொண்டிருக்கிறாளோ என்று தோன்றியது.

"மூணாம் நாள் பொற்கொடி வீட்டுக்குப் போயிட்டு வரேன்னு போனியே, அன்னிக்கு என்ன ஆச்சு சொல்லு! திரும்பி வந்த க்ஷணத்துலேருந்து நீ புஸ்தகத்தை எடுத்து ஒரு வரி வாசிக்கலே. கவனிச்சுண்டு தான் வரேன். பரீட்சை வேற வர்றதே, என்ன ஆச்சு இந்தப் பொண்ணுக்குன்னு நான் மனசுக்குள்ள படறபாடு உனக்கென்ன தெரியும்? உங்கப்பன் என்னடான்னா, கண்ட கழிசடைகளை வேற ஆத்துக்குக் கூட்டிண்டு வந்து, நீ வடிச்சுக் கொட்டுங்கறான்..."

கரீலென்று முன் தைத்தாற்போலிருந்தது அவளுக்கு.

தன் மதிப்பீடுகளின் குறுகிய சட்டங்களுக்குள் அடங்காத விஸ்வரூபம் கொண்டது, பாட்டியின் மனம் என்பது அவளுக்கு விளங்கியது. இனி எதையும் அவளிடம் மறைப்பது சரியல்ல என்பதுவே உள்ளுணர்வின் ஓயாத இரைச்சலா யிருந்தது.

சரவெடி போலப் பீறிட்டுப் பொங்கியது அழுகை.

'கண்ணே' என்று அவளை வாரி அணைத்துக் கொண்டாள் நீலுப் பாட்டி.

தன் பாவங்கள் கரைந்து, உருகி ஓடுவதான பாவனையில் மிக நீண்ட நேரம் அழுது தீர்த்தாள் உமாதேவி. கண்கள் சிவக்க, மூக்கை உறிஞ்சிக் கொண்டு, பிறகு கீழ்க்குரலில் அவள் பேசத் தொடங்கிய போது, அப்புசாமி உறக்கம் கலைந்து எழுந்து வந்து நிற்பதைக் கண்டாள்.

(தொடரும்)



**எல்லாமே பணத்துக்குத்தான்டா!**

கிரிக்கெட் சூதாட்டத்தில் லஞ்சம் வாங்கியதை ஒப்புக் கொண்டதால், ஏற்பட்ட அவமானம் ஒருபுறம் என்றால், இதை வைத்துப் பணம் பண்ணும் சூட்சுமமும் தெரிந்து வைத்திருக்கிறார் தென் ஆப்ரிக்க கிரிக்கெட் வீரர் ஹன்சி குரோனியே!

'நியூஸ் ஆஃப் தி வோர்ல்டு' என்கிற பிரிட்டிஷ் பத்திரிகைக்கு ஒரு பரபரப்புப் பேட்டி கொடுத்துவிட்டு அதற்கு சன்மானமாக எட்டு லட்சம் ரூபாய் பெற்றிருக்கிறார். இதுதவிர, ஆப்ரிக்க டி.வி. சேனல் ஒன்று, இவருடன் மூன்று நாட்கள் கூடவே இருந்து பேட்டி கண்டது. அதற்கு குரோனியே வாங்கிய பணம் பன்னிரண்டு லட்சம்! இதெல்லாம் ஜுஜுபி என்று சொல்லுவது போல, தம் அனுபவங்களைப் புத்தகமாக வெளியிட ஒப்புதல் தந்திருக்கிறார் குரோனியே! இதற்கென்று மாக்ஸ் கிளிஃபோர்டு என்ற பிரபல பப்ளிக் ரிலேஷன்ஸ் ஏஜென்ட் ஒருவரையும் நியமித்துள்ளார். புத்தகடீல் மூலம் குரோனியேவுக்குக் குறைந்தபட்சம் ஒண்ணேகால் கோடி ரூபாய் கிடைக்கும் என்கிறார்கள்! அப்பாடி!

— எம்.



**துப்பாக்கி கலாசாரம்?**
('அன்புடன்' - அருண்குமார், ரம்பா)



**"பழமொழியை மாத்தி எழுதிக்கோ கண்ணு— ஆந்திராவுல வெள்ளம் வந்தா அரும்பாக்கம் அடிபம்ப்புல தண்ணி வரும்..."**
('விரும்புகிறேன்'— பிரசாந்த், ஸ்நேகா)

**"நீல நிறத்துல ரோஜா பார்க்க நீலகிரி பார்க்குக்குத்தான் போகணுமா என்ன...?"**
('களவும் கற்றுமற' — ரோஜா)

**"வீரப்ப அண்ணாச்சி! கடத்தல் டிராமாவை இப்படி இஸ்துகினே போனா இன்னா அர்த்தம் நயினா? மருவாதையா பெரியவரை அனுப்பி வை இல்லாகாட்டி... "**
('தீனா' — அஜித்)

**கா**தலர் தினமான 'வேலன்டைன்ஸ் டே'யை, இந்தியா முழுக்க மெகா விழாவாகவே மாற்றி அமைத்த நிறுவனம் ஒன்று உண்டு என்றால், அதுதான் மும்பை கீதாஞ்சலி ஜுவல்லரி. பிராண்ட் பெயர்:ஜிலி

**1996** பிப்ரவரி 14 காதலர் தினத்தை, உணர்ச்சிமயமான ஒரு திருவிழா போலக் கொண்டாடும் அளவுக்கு விளம்பரங்களை வெளியிட்டு, வைரத்தில் சின்னதாக இதய வடிவத்தைச் செதுக்கி, விற்பனையில் ஒரு புரட்சியே பண்ணியது ஜிலி. அந்த வருட வேலன்டைன்ஸ் டே விற்பனை, வருடாந்தர தீபாவளி விற்பனையைக் கூடத் தூக்கிச் சாப்பிட்டுவிட்டது!

சென்னை வந்திருந்த 'கீதாஞ்சலி'யின் எம்.டி. ஷைலேஷ் சங்கானியைச் சந்தித்தோம். (அசப்பில் அப்படியே பாடகர் எஸ்.பி.பி போல இருக்கிறார்!)

"நான் ஜுவல்லரி குடும்பத்தில் பிறந்தவன் அல்ல. நான் படித்தது மார்க்கெட்டிங். பதினோரு வருடங்கள் நியூயார்க்கில் டயமண்ட் பிராசசிங் கருவிகளை விற்பனை செய்து கொண்டிருந்தவன். '88ல் இந்தியாவுக்கு வந்தேன். 'கீதாஞ்சலி'யில் சேர்ந்து, 'கீதாஞ்சலி லேசர் ஹவுஸ்' ஆரம்பித்து வைத்தேன். லேசர் கருவிகள் மூலம் வைரத்தைத் துண்டுகளாக்கி வடிவமைப்பதில் ஒரு தனி இடத்தைப் பிடித்தது 'கீதாஞ்சலி'. De Beers பிராண்ட் வைரங்கள் உலகப் பிரசித்தி பெற்றவை. இந்தியாவில் கீதாஞ்சலி நிறுவனம், De Beers கச்சா வைரத்தை வெட்டி பாலிஷ் செய்து அனுப்பும் உரிமை பெற்றது" என்றார் ஷைலேஷ்.

இந்தி நடிகை ஊர்மிளா மடோன்கரை வைத்து, டீவியில் கீதாஞ்சலி ஜுவல்லரி நடத்திய நிகழ்ச்சிகள், பிராண்டட் ஷர்ட், பிராண்டட் ஷூ போல, தங்க நகைகளையும் பிராண்ட் பண்ணி விற்கலாம் என்ற நம்பிக்கையைத் தரவே, ஜிலி (Gili) பிராண்ட் நகைகள், நகை மார்க்கெட்டில் உச்சத்தைத் தொட்டன.

"நீங்கள் சந்தித்த மிகப் பெரிய சவால் எது?"

"மும்பையில் எனக்குத் தெரிந்த அத்தனை நகைக் கடைகளிலும் போய், உங்கள் ஷாப்பில் ஒரு சிறிய இடம் ஒதுக்கி, அதில் 'ஜிலி' நகைகளை விற்பனை செய்து பாருங்கள் என்று கேட்டுக்கொண்டேன். பார்க்கலாம் என்று அவர்கள் தயக்கத்தோடு பதில் சொன்னார்கள். நான் அவர்களிடம் கை குலுக்கி விடைபெறும்போது, 'சரியான பைத்தியம்! பிராண்ட் நகைகளை நம்ம ஷாப்பில் விற்பதாம்!' என்று அவர்கள் இளக்காரமாகச் சிரித்தது எனக்குத் தெரியும்.

"அமெரிக்காவில் நகைகள் 40 முதல் 50 சதவீதம், பெரிய பெரிய டிபார்ட்

• சங்கானி



மென்ட் ஸ்டோர்களில்
தான் விற்பனை ஆகின்றன. மும்பையில்
நான் 'ஷாப்பர்ஸ் ஸ்டாப்' நிறுவனத்தில்
இந்த ஐடியாவைச் சொன்னவுடன் உடனே
வரவேற்றார்கள். இப்போது, அவர்களது
எல்லா டிபார்ட்மென்ட் ஸ்டோர்களிலும்
ஜிலி பிராண்ட் நகைகளை விற்கிறார்கள்!
இங்கேயும்கூட, சென்னையில் பிரின்ஸ்
ஜுவல்லரியில் எங்கள் பிராண்ட் நகைகள்
கிடைக்கும். இப்போது இதன் வெற்றியைப்
பற்றி அறிந்த பிறகு, எல்லா ஜுவல்லரி
ஷாப்களும் எங்களை இடம் எடுத்துக்
கொள்ள வற்புறுத்துகின்றன!" என்று சிரிக்
கிறார் ஷைலேஷ்.

பெரிய பெரிய நகைக்கடைகாரர்கள்,
தங்களுக்கு வேண்டிய வகை நகைகளைச்
செய்து தர ஆர்டர் கொடுத்துவிட்டால்,
நவீன டிசைன்களில் இவர்கள் நிறுவனத்தி
லேயே செய்து கொடுக்கும் அளவுக்குத்
தொழில்நுட்பக் கலைஞர்களும், பயிற்சி
பெற்ற டிசைனர்களும் இவர்களிடம்

• காதலர் தின ஸ்பெஷல்

இருக்கிறார்கள்.

"எங்களுடைய ஜுவல்லரி எல்லாம் மிடில் கிளாஸ் மக்களை மனத்தில் கொண்டே உருவாக்கப்பட்டவை. 698 ரூபாய்க்குத் தங்கத்தில் லாக்கெட்டோ, பென்டென்டோ வாங்கலாம்! 1000 ரூபாயிலிருந்து 15,000 ரூபாய் வரை விலையுள்ள தங்க நகைகள் எங்கள் தயாரிப்பில் அதிகமாக விற்பனை ஆகின்றன. 4000 ரூபாய் விலையில் சுமார் 50 வகை நகைகளை எங்களால் காண்பிக்க முடியும். 3000 ரூபாய் விலையில் 40 வகை நகைகளைத் தர முடியும். மாதக் கணக்காக, வருடக் கணக்காக பிளான் போட்டு, பணம் சேமித்து, குடும்பத்தோடு நகைக் கடைகளுக்குப் போய் நகைகள் வாங்கும் மக்கள் ஒருபுறம் இருக்கலாம். இன்னொரு புறம், ஆயிரம் இரண்டாயிரம் என்று கையில் பணம் இருந்தால்கூட, அதில் ஒரு தங்க நகை வாங்கி விட முடியும் என்று நிரூபித் தவர்கள் நாங்கள்!"

"ஸ்டைல், டிசைனிங், பாக்கிங் எல்லாமே பிராண்ட் ஜுவல்லரியில் வித்தியாசமாய் இருக்கிறது. நாசுக்கும், நளினமும், புதுமையும் கூடுதல் பாயின்டுகள்!" என்கிறார் ஷைலேஷ் சங்கானி.

சந்திப்பு: **சாருகேசி**

# சிதம்பரம் தந்த

"தேர்தலுக்கு முன்பு கூட்டணிக் கட்சிகள் எப்படி வெற்றிக்காக உழைக்கின்றனவோ அதேபோல தேர்தலுக்குப் பிறகும் வாக்குறுதிகளை நிறைவேற்றும்போது சேர்ந்தே நிறைவேற்ற வேண்டும். ஆட்சியிலும், அதிகாரத்திலும் பங்கு என்கிற த.மா.காவின் லட்சிய முழக்கம் வர இருக்கும் சட்டமன்றத் தேர்தலுக்காக உருவாக்கப்பட்டதல்ல, 1999ம் ஆண்டு தேர்தல் அறிக்கையிலேயே இதைச் சொல்லியிருந்தோம்" என்று த.மா.கா தீர்மானம் போட்டது சிதம்பரத்தில்.

செயற்குழுவுக்குப் பின் நடந்த பொதுக் கூட்டத்தில் பேசிய மூப்பனார், "சிதம்பரத்தில் நந்தனாருக்கு நந்தி விலகி தரிசனம் கொடுத்தது போல, நமக்கிருந்த தடைகள் நீங்கி எதிர்காலத்தில் தேசியக் கட்சிகள் ஆட்சி அமைக்கும்" என்று சொல்லியிருக்கிறார்.

சிதம்பரத்தில் நடந்த இந்தத் திருப்புமுனை த.மா.கவினருக்கு மிகவும் மகிழ்ச்சியைக் கொடுத்திருக்கிறது. செயற்குழுவில் தமது சொந்த வேலை காரணமாக ஆப்சென்ட்டான ப. சிதம்பரம் கூட 'ஆஹா' என்று நண்பர்களிடம் சிலாகித்திருக்கிறார்.

"இப்படி இரு பெரும் இயக்கங்களின் தோழமையிலிருந்து விலகி, மூன்றாவது அணியாக தேர்தலைச் சந்தித்தோமானால் அது தோல்வியில் தான் முடியும். அ.தி.மு.கவை விட்டு தூர விலகி வருவதன் மூலம் நாங்கள் தி.மு.கவை நெருங்கலாம். ஆனால் எங்கள் லட்சியமான ஆட்சியிலும் அதிகாரத்திலும் பங்கு என்பதை தி.மு.க. மட்டும் எப்படி ஏற்றுக் கொள்ளும்? எனவே வர இருக்கும் சட்டமன்றத் தேர்தலில் இந்த கோஷத்தை பின்னுக்குத் தள்ளி தி.மு.கவுடன் சேர்ந்து தேர்தலைச் சந்தித்துவிட்டு, கட்சியைப் பலப்படுத்திக் கொண்டு 2006ல் காமராஜ் ஆட்சிக்கு முயற்சி செய்வதே புத்திசாலித் தனம்" என்று சொன்னார் த.மா.காவின் முக்கியப் பேச்சாளர் ஒருவர்.

இன்னும் சிறிது காலம் தேர்தல் கூட்டணிகளைப் பற்றி வெளிப்படையாக யாரும் பேசக் கூடாது என்று த.மா.கவின ருக்குச் சொல்லப்பட்டிருக்கிறதாம்.



# திருப்பம்!

## — குஷியில் த.மா.காவினர்

"தமிழகத்தைப் பொறுத்தவரை எந்தக் காலத்திலும் பா.ஜ.க. தனித்துப் போட்டியிட்டு அதிகாரத்தைப் பிடிக்கும் ஆபத்து இல்லை. எனவே மாநிலக் கட்சியான நாங்கள் தமிழக சட்டமன்ற தேர்தலைப் பொறுத்த மட்டில் பா.ஜ.க. இருக்கும் தி.மு.க. அணியில் சில நிபந்தனைகளோடு தேர்தல் உடன்பாடு அமைத்தால் எந்த சங்கடமும் இல்லை; எதிர்காலத்தில் அப்படி அமையக் கூடிய வாய்ப்பும் இருக்கிறது" என்றார் அந்தப் பேச்சாளர். அதே நேரத்தில் வரும் சட்டமன்ற தேர்தலுக்குள் பா.ஜ.க.விட மிருந்து தி.மு.கவைப் பிரிக்கும் வேலையை மூப்பனார் சாணக்கியமாக செய்ய வேண்டும். ஏனென்றால் அப்போதுதான் காங்கிரஸ் கட்சியையும் இணைத்துக் கொள்ள முடியும்" என்றார் அவர்!

அ.தி.மு.க.வைப் பொறுத்தவரை த.மா.காவை வெளியில் அனுப்பிவிட்டு பா.ம.காவோடு உடன்பாடு கொண்டால் போதுமென்ற நிலையை அது மேற்கொள்ளும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. தி.மு.க. அணியில் இருந்தால், கடந்தகால அனுபவம் காரணமாக, கேட்கும் சீட்டுகள் கிடைக்காது என்பது பா.ம.கவுக்குத் தெரியும். அதே சமயம் அ.தி.மு.கவிடம் கூட்டணி வைத்தால், கணிசமான இடங்களைப் பெற்று, வெற்றி பெறலாம் என்று கருதுகிறது பா.ம.க. இதற்காக அ.தி.மு.கவை சங்கடப்படுத்தும் விடுதலைப் புலிகள் விஷயத்தைக் கூட கொஞ்ச காலம் பா.ம.க. பரணில் தூக்கி போட்டுவிடலாம் என்கிறார்கள்.

— ப்ரியன்

மாதுரி / அரஸ்

அடுத்த 48 மணி நேரத்தில் பலத்த மழை பெய்யும்!

... அடுத்து மழை பற்றி அறிவிப்பு! இன்னும்...

தினம் பெரும் மழை அறிவிப்பா இருக்கு, ஆனா மழையைக் காணோம்.

திடீர்னு வெள்ளம் வந்துட்டா வானிலை மையத்துமேல பழி போட முடியாதில்ல...



• டயானா



• இம்ரான்

# இம்ரான் சொல்லும் காதல் கதை!

செந்திலும் கவுண்டமணியும் போல, கிரிக்கெட் வீரர்களுக்கும் மேட்ச் ஃபிக்ஸிங்கிற்கும்... பிரபலங்களுக்கும் கிசுகிசுக்களுக்கும்... எக்கச்சக்க ஜோடிப் பொருத்தம்தான்.

பாருங்களேன். இளவரசி டயானாவின் கதையே முடிந்தபிறகு அவரைப் பற்றி ஒரு புதுக் காதல் கதை பவனி வருகிறது!

இந்த 'மேட்ச் ஃபிக்ஸிங்' விவகாரத்தில் பாகிஸ்தானிய கிரிக்கெட் ஹீரோ இம்ரானின் பெயரும் பலமாக அடிபடுகிறதே! லண்டனிலிருந்து வெளிவரும் 'த டெலிகிராஃப்' செய்தித்தான்தான் இந்த விஷயத்தை வெளியிட்டிருக்கிறது.

அங்குள்ள 'சானல்-5'க்காக, இம்ரான் அளித்த பிரத்யேக பேட்டியில் 1994ல் இளவரசி டயானா பாகிஸ்தான் வந்திருந்த போதே அவரது பாகிஸ்தானிய காதல் விஷயம் உறுதிப்படுத்தப்பட்டதாக வும் சொல்லியிருக்கிறார்.

கதை எப்படிப் போகிறதென்றால், இளவரசி டயானா அவரது நெருங்கிய தோழியின் கணவரைக் காண மருத்துவமனைக்குச் சென்றிருந்தாராம். தோழியின் கணவருக்கு இருதய நோய். ட்ரீட்மெண்ட் கொடுத்தவர் லண்டனில் ப்ராக்டீஸ் பண்ணிக் கொண்டிருந்த பாகிஸ்தானியரான டாக்டர் ஹஸ்நித் கான். டாக்டரைக் கண்ட மாத்திரத்தில் டயானாவின் இதயம் படபடக்க ஆரம்பித்துவிட்டதாம். டாக்டர் மிகவும் கம்பீரமும் வெட்கமும் கலந்த கண்ணிய மனிதராம். அவரது வெட்க சுபாவமே இவரது கன்னத்தைச் சிவப்பாக்கி விட்டதாம்.

இரண்டு வருடங்கள் இந்த 'ரொமான்ஸ்' தொடர்ந்ததாம். இளவரசிக்கு கானில்லாமல் தானில்லை என்ற நிலையாம். கானுக்கும் மனசுக்குள் மத்தாப்பூ என்றாலும், திருமணம் வரை செல்லத் துணிவில்லையாம். ஆதலால் காதலுக்கு சமாதி கட்டிவிட்டாராம்.

ஆனால் டயானா விடுவதாயில்லையாம். டோடியுடன் அவர் நடத்திய காதல் லீலைகள், கானைப் பொறாமை கொள்ள வைக்க வேண்டி நிகழ்த்தப்பட்ட நாடகங்களாம்! ஆனால் எதிர்பாராத திருப்பமாக 'ஆக்ஸிடெண்ட்' நடந்து விடவே, எல்லா நாடகங்களுமே முற்றுபெற்றுவிட்டனவாம்!

இத்தனையும் "Diana - Her Last Love" என்ற டீ.வி. நிகழ்ச்சியில் இடம் பெறப் போகும் தகவல்கள். இந்த டாகுமெண்டரியை எப்படி முடித்திருக்கிறார்கள் தெரியுமா? 'வெஸ்ட்மினிஸ்டர் அபே'யில் நடக்கும் டயானாவின் 'ஃப்யூனரல் ஸர்வீஸ்' டாக்டர் ஹஸ்நித் கான் துயரே உருவாகக் கலந்து கொண்டு, தம் காதல் உணர்ச்சிகளைக் கறுப்புக் கண்ணாடிக்குள் மறைத்துக் கொள்வது போல்.

அவர் கறுப்புக் கண்ணாடியில் மறைக்கும் விஷயங்களை கலர் கலராகக் கடை விரிக்கத்தான் மீடியாக்காரர்கள் காத்திருக்கிறார்களே? எல்லாம் இம்ரான் உபயம்!

-ஜெ.ஆர்.

# குட்டி ராஜீவின் யோகஜாதகம்!

ராஜீவ் பிறந்த தினத்திலிருந்து சரியாக ஒன்பதாம் நாள்- ப்ரியங்கா அம்மாவானார். ராஜீவ்ஜியே மீண்டும் பிறந்துவிட்டார் என்று காங்கிரஸ்காரர்கள் ஆடிப்பாடி, மிட்டாய், ஹல்வா வியாபாரிகளுக்கு லாபம் கொழிக்கச் செய்தனர். மஹிளா காங்கிரஸ்காரர்கள் 10 ஜன்பத் மாளிகை முன் நாட்டியம் ஆட ஆரம்பித்தனர்.

மருத்துவ மனையில் பலத்த பாதுகாப்பு. ஆயுதம் தாங்கிய உபரி போலீஸ் தவிர என்.எஸ்.ஜி. கமான்டோக்கள் வேறு. கங்காராம் மருத்துவமனைக்கு விரைந்த பாட்டி சோனியாவின் வாயெல்லாம் பல்; முகமெல்லாம் முறுவல்!

உடனே ஜாதகம் கணித்து விட்டார்கள் குட்டி ராஜீவுக்கு! காதல் தேவதையின் ராசியாம்-(வீனஸ்) மன்மதனையொத்த அழகும் ராஜயோகமும் நிச்சயமாம்- ஆங்கில முறை ஜோதிடர்கள்தான் சொல்கிறார்கள். அடி வருடிகள் சுற்றிச் சுற்றி வருவார்களாம். நாற்பத்தைந்தாவது வயதில் ஒரு கண்டம் வேறு உண்டாம்!

பெயர் வைக்கையில் அதில் கண்டிப்பாக 'ராஜீவ்' வரும்படி பார்த்துக் கொள்ள வேண்டும் என்று நிபந்தனை வைக்கும் அன்புத் தொண்டர்களுக்கு சோனியா ஏமாற்றமளிக்கிறார். -ஜவஹர் என்பதுதான் முதல் பெயராம். ('ஜ'ஒலி ராசியானதாம்)

இன்னும் அறுபது வருடங்களுக்குத் தலைவர் பிரச்னை கிடையாது என்கிறார்கள் கட்சிக்காரர்கள்!

'மூட்டு வலியைக் காரணம் காட்டி நாக்பூர் மாநாட்டிலிருந்து பிய்த்துக் கொண்ட பிரதமருக்கு உண்மையில் உடம்பு ஒன்றுமில்லை. கருத்து வேறுபாடுகள் எழும் என்பதால்தான் ஓடிவிட்டார்'-என்று சிலர் அபாண்டம் சொல்கிறார்கள். பிரதமரின் பிரச்னை நிஜத்தில் மூட்டுவலி மட்டும் அல்ல... சர்க்கரை நோய், கிட்னி பிரச்னை என்று போட்டியாய்ப் பல உள்ளன. டெல்லி வந்ததுமே வெங்கையா நாயுடுவை அமெரிக்கா போகும்படி கேட்டுக் கொண்ட வாஜ்பாய், தமது அமெரிக்க பயணத்தை இரண்டு நாட்கள் தள்ளி வேறு போட்டிருக்கிறார்.

அமெரிக்க பயணத்துக்கு முன் அமைச்சரவை மாற்றம் நடக்கும். ஜெத்மலானி, குமாரமங்கலம், பங்காரு லக்ஷ்மணின் இடங்களை நிரப்பியாகவேண்டும். தமிழ் நாட்டவர் ஒருவருக்கு நிச்சயம் ஓர் அமைச்சர் பதவி உண்டு என்பது எதிர்பார்ப்பு. இருமுறை எம்.பியான கோவை ராதாகிருஷ்ணன், நீலகிரி மாஸ்டர் மாதன் தவிர நாகர்கோவில் ராதாகிருஷ்ணன் பெயரும் அடிபடுகிறது. இவர்களெல்லாம் இல்லை- ஜனா கிருஷ்ணமூர்த்திக்கே பதவி என்போரும் உண்டு. ராஜ்ய சபை மூலமோ திருச்சி தொகுதியிலிருந்தோ ஜனா பாராளுமன்றத்துக்குள் நுழைய ஏற்பாடு நடக்குமாம். பதவிகளைத் தேடி ஓடாதவர் கர்நாடக கவர்னர் பொறுப்பைக்கூட வேண்டாமென்றவர். அவரைச் சம்மதிக்க வைத்துவிடலாம் என்று நம்பிக்கையுடன் இருக்கிறது உயர்வட்டம்.

— இந்த்ரப்ரஸ்தன்

# கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை

அன்புடன் அழைக்கிறது



## அமரர் கல்கி பிறந்தநாள் விழா

**9.9.2000**

**இளம் இசைக் கலைஞர்களுக்கான**

**அமரர் கல்கி நினைவு விருதும் பரிசும் பெறுவோர்:**

**சிக்கில் மாலா சந்திரசேகர்** – புல்லாங்குழல்

**கே. அருண்பிரகாஷ்** – மிருதங்கம்

**தலைமை:**

சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி

மாண்பமை **பிரபா ஸ்ரீதேவன்**

**விழா நிகழ்ச்சிகளைத் தொடர்ந்து இன்னிசைக் கச்சேரி**

**சிக்கில் மாலா சந்திரசேகர்** : வேணுகானம்

**எச்.என். பாஸ்கர்** : வயலின்

**கே. அருண்பிரகாஷ்** : மிருதங்கம்

**எஸ்.வி. ரமணி** : கடம்

**நேரம்:** மாலை 6.00 மணி

**இடம்: மயிலை, பாரதிய வித்யாபவன் அரங்கம், சென்னை**

கல்கி வாசகர்களும் அன்பர்களும் வந்திருந்து
சிறப்பிக்க வேண்டுகிறோம்.

✉ தமிழ்நாடு விடுதலைப்படைத் தலைவர் கலிய பெருமாள் சொல்வதிலும் சில நியாயங்கள் இருக்கத்தான் செய்கிறது. "ஒரு லட்சியத்தை நோக்கிச் செல்லும் போது இடையூறுகள் ஏற்படத்தான் செய்யும். சில இழப்புகளை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும்" என்ற வரிகள் சிந்திக்க வைத்தன.

கும்பகோணம், டி.எஸ்.சீதாராமன்

✉ "தமிழின தலைவன் வீரப்பனைத் தலைவ ராக ஏற்றுக் கொண்டு, வரும் தேர்தலில் போட்டியிடுபவர் கண்டிப்பாக முதல்வர் ஆகி விடுவார்" என்று கூறும் தமிழ்நாடு விடு தலைப் படைத் தலைவர் கலியபெருமாள் சுப்ர மணியன் சுவாமிக்கும் ஒரு படி மேலே சென்று விட்டார் என்றுதான் சொல்ல வேண்டும்.

காஞ்சிபுரம், ரவிகாந்த்

✉ "லட்சியத்தை நோக்கிச் செல்லும்போது சில இழப்புகளை ஏற்றுக் கொள்ள வேண்டும்" என்கிறாரே கலிய பெருமாள்... நாட்டைப் பிரிப்பது ஒரு லட்சியமா? சில இழப்புகளை யார் ஏற்றுக் கொள்வது? ஒரு பாவமும் அறியாத, கர்னாடகத்தில், வாழும் அப்பாவி தமிழர்களா? இதுதான் தமிழ் மக்கள் நலனா? முன்னுக்குப் பின் முரணாக இல்லையா இது?

பெங்களூர், என்.ராஜா

✉ "மூன்று மாதம் கடுங்காவல்" நூல் கிடைத்தது. நன்றி! அதைப் படித்து, சிரித்து எங்கள் குடும்பத்தில் உள்ளோர் அனைவருக்கும் வயிற்றுவலி!

கோவை, காசிவிஸ்வநாதன்

✉ ஸ்ரீலங்காவின் திருமதி 'B' கட்டுரையில் அந்நாட்டு ஜனாதிபதி பதவியிலிருந்து ஸ்ரீமாவோ ராஜினாமா செய்ததாகக் குறிப்பிடப் பட்டிருந்தது. ஸ்ரீமாவோ பண்டார நாயக பிரதமர் பதவியில்தான் இருந்தார். அவ ருடைய மகளான சந்திரிகா குமாரதுங்காதான் ஜனாதிபதியாக இருக்கிறார். ஆக திருமதி 'B' ராஜினாமா செய்தது பிரதமர் பதவியைத்தான்.

பெங்களூர், அ.சங்கரன்

✉ தலையங்கம் நிதர்சனமாக எழுதப்பட்டது. மத்திய அரசுக்கு வருவாயை அள்ளித் தரும் மாநிலங்கள் தண்டிக்கப்பட்டிருப்பது பிரி வினைவாதத்திற்குத்தான் வழி வகுக்கும்.

நெய்வேலி, ராஜகோபாலன்

✉ வளரும் மாநிலங்களுக்கு ஆதரவான தலை யங்கம் மிகவும் சரி. நிதி விஷயத்தில் வளரும் மாநிலங்களை மைய அரசு கட்டுப்படுத்த நினைப்பது மிகவும் துரதிர்ஷ்டம் என்றுதான் நினைக்கிறேன்.

மும்பை, ஜான் சாமுவேல்




✉ மஞ்சு விரட்டில் மேட்ச் பிக்ஸிங்! என்ற தலைப்பில் வெளியாகியிருந்த, தென்கரை மஞ்சு விரட்டு நிகழ்ச்சி பற்றிய தகவல்களும் படங்களும் நேரில் கண்டு களித்த மன நிறைவைத் தந்தன.

தோட்டக்குறிச்சி, இரா.வளையாபதி

✉ மனசுக்குள் மண்வாசம் கட்டுரை பத்த மடை பாய்கள் பற்றி பல உண்மைகளை உணர வைத்தது. நரசிம்மராவையே சிரிக்க வைத்த நகரம் - தலைப்பே படு ஜோர்!

திருப்பத்தூர், சு.முருகையன்

✉ ஜோக் ஸ்பெஷலா? கார்ட்டூன் உட்பட மொத்தம் 20 ஜோக்குகள்! அதிலும் 'கை கொடுக்கும் கோபால்' ஜோக் சூப்பர். விழுந்து, விழுந்து சிரிக்க வைத்தது. வீரப்பன் கூட இதைப் படித்தால் - சிரித்து மகிழ்ந்திருப்பான்.

பெங்களூர், என்.கோகிலவரி

✉ தங்கை வாழ்வு நல்லபடியாக செட்டிலாக வேண்டும். அதன்பின்தான் எனது கல்யாணம் என அண்ணன்மார்கள் கூறுவார்கள். ஆனால் ரோஜாவோ அண்ணன்கள் செட்டிலாக வேண் டும் என்கிறார். உண்மையிலேயே அவர் புரட்சிப் பெண்தான்.

இராஜபாளையம், வே.ஈஸ்வரன்

## சகலவிதமான தாம்பத்ய குறைகளுக்கும் சித்த வைத்திய வழிமுறையில் அற்புத நிவாரணம்!!!



**ஆண்களுக்கான...**

- நரம்புத்தளர்ச்சி
- கர்ப்பணுக்கள் குறைவு
- கைகால் நடுக்கம்
- அல்சர்
- இதர பிரச்னைகள்

**பெண்களுக்கான...**

- உடல் பருமன்
- குழந்தை இல்லாமை
- கருப்பை கோளாறுகள்
- உடல் வளர்ச்சி இல்லாமை
- மூட்டுவலி

'சர்வதேச புகழ் பழனி சித்த வைத்திய நிபுணர்' **Dr. R. ஜெயராமன்**, R.I.M.P., RHMP, (Reg. No. TN 228, 1015) அவர்களை **சென்னையில்** பிரதி மாதம் 7-ந் தேதி முதல் 15-ந் தேதி வரை நேரில் சந்திக்கும் இடம்: **ஹோட்டல் கற்பகம், அறை எண்: 114-41,** தெற்குமாட வீதி, மைலாப்பூர் குளம், சென்னை - 600 004. போன்: 4942987, **(5 LINES)**

பார்க்கும் நேரம்: **10A.M. - 1 P.M. 5 P.M. - 9 P.M.**

(வியாழன் விடுமுறை-ஞாயிறு பார்க்கப்படும்)

பழனியில் 20ந் தேதி முதல் 30ந் தேதி வரை நேரில் / கடிதம் மூலம் தொடர்பு கொள்ளவும்.

**Dr. R. JEYARAMAN,** R.I.M.P., R.H.M.P., PALANI AGASTHIAR SIDDHA VAIDYA SALAI, AGASTHIYAR NILAYAM, 209-G NETHAJI NAGAR, DINDUGAL MAIN ROAD, (TOWN BUS STOP: NETHAJI NAGAR) PALANI. PIN CODE - 624 601. S. INDIA PHONE: (STD) 04545 - 43012.

பத்தியம் இல்லை • பக்க விளைவுகள் இல்லை • வாழ்க வளமுடன்




## J.S.R. ரியல் எஸ்டேட்ஸ் (பதிவு)

பழைய எண். 10, புதிய எண். 17,
பசும்பொன் முத்துராமலிங்க தேவர் சாலை,
நந்தனம், சென்னை - 600 035. போன்: 4352828, 4354998.

சுலப தவணைகளில் மற்றொரு மகத்தான திட்டம்

# மகாலட்சுமி நகர்

நடுத்தர மக்களின் விருப்பத்திற்கேற்ப மாதம் ரூ. 500/- வீதம் 72 மாதங்கள் 2400 சதுர அடி கொண்ட **நகர ஊரமைப்புத்துறை** (DTCP) ஒப்புதல் பெற்ற மனைகள் உள்ளது. **சென்னை - பெங்களூர்** நெடுஞ்சாலையில் உள்ள **ராஜீவ் நினைவகத்திலிருந்து** 15-வது கி.மீட்டரில் சுங்குவார் சத்திரத்திலிருந்து 8வது கி.மீட்டரில் நல்ல சாலை வசதிகள் உள்ள இடத்தில் **மகாலட்சுமி நகர்** உருவாகிறது.



அன்புடன் ராஜேஷ்

**முன் பணம் கிடையாது**

- மாதம் தவறாமல் தவணைகள் செலுத்தும் உறுப்பினர்களுக்கு **கவர்ச்சிகரமான பரிசு** திட்டங்களும் உண்டு.
- ஞாயிறு தோறும் காலை 9.30 மணியளவில் மனைகளை பார்வையிட வருவோரை எங்கள் அலுவலகத்திலிருந்து இலவசமாக அழைத்துச் செல்கிறோம்.

"ஒரே நேரத்தில் மூன்று முறை 'தலாக்' சொல்லி, எந்த ஒரு இஸ்லாமியக் குடிமகனும், தன் மனைவியை விவாகரத்து செய்துவிடமுடியாது. ஒவ்வொரு தலாக்கிற்கும் முப்பது நாள் இடைவெளி கொடுக்க வேண்டும். திடீர் மன மாற்றம் ஏற்பட்டால் மணவிலக்கை நிறுத்திக் கொண்டு சேர்ந்து வாழலாம். அதற்காகவே இந்த இடைவெளி", என்று தெளிவாக, எளிய தமிழில் கருத்துப் படத்துடன், இஸ்லாமிய வாழ்க்கை முறையின் ஒவ்வொரு அம்சத்தையும்



அரபு எழுத்தோவியம்

# குர்ஆன் முஸ்லிம்களின் சொத்து அல்ல!

விளக்குகிறது ஜமா அத்தே இஸ்லாமிஹிந்த் அமைப்பின் சென்னை மாநகரக் கிளை ஏற்பாடு செய்திருந்த, 'இஸ்லாமியக் கலாசாரக் கண்காட்சி'

சென்னை எழும்பூர் அரசு அருங்காட்சியக வளாகத்தில் கடந்த ஆகஸ்ட் இருபத்தாறாம் தேதி தொடங்கி நான்கு நாட்கள் நடைபெற்ற இக்கண்காட்சியில் ஆறு தலைப்புகளில் அரங்குகள் அமைக்கப்பட்டிருந்தன. இஸ்லாத்தை நிறுவிய அண்ணல் நபி (ஸல்) வரலாறு புகைப்பட கண்காட்சியாகச் சித்திரிக்கப்பட்டிருந்தது. அவர் தியானித்த குகை, புனிதப் போர் செய்த இடங்கள், என்று மதினா, மெக்கா காட்சிகள் இடம் பெற்றிருந்தன. இஸ்லாத்தின் அடிப்படை கோட்பாடுகளைச் சுருக்கமாகவும் தெளிவாகவும் விளக்கியது இஸ்லாம் அரங்கு. கட்டை விரல் அளவு கொண்ட குர்ஆன் புத்தகம் தொடங்கி 27 உலக மொழிகளில் அச்சிட்ட பிரதிகளும், பார்வையற்றோர் தொட்டுப் படிக்கும் பிரைல் மொழி குர்ஆனும் இடம் பெற்றிருந்ததோடு 'குர்ஆன் முஸ்லிம்களுக்கு மட்டும் உரித்தான குலச் சொத்து அல்ல. அது உலக மக்கள் அனைவருக்கும் உரிமையான பொது மறை' என்ற பிரகடனம் பார்வையாளர்களைக் கவர்ந்தது.

அரபு எழுத்தோவியக் கலை அரங்கு, காண்பவர் மனத்தை எளிதில் கொள்ளை கொள்கிறது. இஸ்லாம் குறித்து பரவலாகக் காணப்படும் தவறான கருத்துக்களில் திரித்து சொல்லப் படும் விஷயங்களை முறையாக எடுத்தியம்பிய அரங்கும் உண்டு. அறிவியல், கலை, கட்டடக் கலை, இலக்கியம் உள்ளிட்ட பல்வேறு துறைகளில் முஸ்லிம்களின் பங்களிப்பை விளக்கிய இந்தக் கண்காட்சி, இஸ்லாமியப் பண்பாட்டின் அனைத்துப் பரிமாணங்களையும் ஒரே கூரையின் கீழ் குவித்திருப்பதில் நீண்ட நாள் உழைப்பு தெரிந்தது.

"இஸ்லாம் குறித்து தொடர்ந்து விழிப்புணர்வு ஏற்படுத்துவதையும், அது தொடர்பான கல்வி வழங்குவதையும் தன் அடிப்படை நோக்கமாக கொண்டு, ஜமா அத்தே இஸ்லாமிஹிந்த் அமைப்பு செயலாற்றி வருகிறது. இஸ்லாமியர் அல்லாத பிறமத சகோதரர்களுக்கும் இஸ்லாம் குறித்து எடுத்துச் சொல்வதுதான் எங்கள் கண்காட்சியின் நோக்கம்" என்கிறார் கண்காட்சி அமைப்பாளர் ஜான் முஹம்மத். மதுவும் இசையும் ஒன்று. எனவே இசையின் வசமாகி மதியிழக்காதே என்று இசையை ஒட்டு மொத்தமாய் எதிர்க்கும் ஒரு விளம்பரப் பலகையும் நம் கண்ணில் பட்டது!

- ஜெயன்

## சி.எம். முத்து

# மரத்துண்டும் சில மனிதர்களும்

தங்கராசு கருக்கலில் எழுந்து காலைக் கடனை முடிக்க தோப்புப் பக்கம் சென்றவன் கையோடு கருக்கருவாளையும் எடுத்துச் சென்றான். வயல் வரப்புப் பக்கம் போய் மாய்ந்து மாய்ந்து ஒரு கட்டுப் புல்லை அறுத்துக் கொண்டுவந்து கொஞ்சத்தைக் காளைகளுக்கு அள்ளிப் போட்டுவிட்டு மிச்சத்தைத் தொழுவத்தில் பத்திரப்படுத்தி வைத்தான். தெருவில் மானாங்கானியாய்த் திரிகிற யார் வீட்டு மாடும், காளைகளிடம் போட்டிருக்கிற புல்லை மேய்ந்து விடாமலிருப்பதற்காக அருகிலேயே நின்றபடி காவல் காத்தான்.

காளைகளின் கழுத்துமணி குலுங்குவதைப் பார்க்க ஆசையாக இருந்தது அவனுக்கு.

காளைகள் வாலை வீசியபடியும் குருட்டீக்களுக்குப் பயந்து கால்களை ஓங்கி ஓங்கி தரையில் தட்டியபடியும் புல்லைத் தின்பதைப் பார்க்க ஆசை மேலும் பொங்கியது. 'மாடு நீரடியாய்த் தான் இருக்கிறது. இன்னும் கொஞ்சம் நீரேத்திவிட்டால் ஏரில் சளைக்காமல் போகும்' என்று முணுமுணுத்துக் கொண்டான்.

நேத்தைக்குதான் கூனம்பட்டியிலிருந்து இந்தக் காளைகளை மூவாயிரத்து இருநூத்தி ஐம்பது ரூபாய்க்கு வாங்கி வந்தான் தங்கராசு. ரெண்டு வருஷ காலமாய் 'மாடு வாங்கணும் வாங்கணும்' என்று கனவு கண்டு நேத்தைக்குதான் பலிதம் ஆகிப்போயிருந்தது. ரெண்டு வருஷ உழைப்பில் வாயைக் கட்டி வயித்தைக்கட்டி சேர்த்த காசு. மாட்டுக்காக





அலைந்த செலவு, தரகு கொடுத்தது, போகவர செலவு என்று வல்லுசாய் மூவாயிரத்து ஐந்நூறு ஆகிப்போய்விட்டது. இப்போது கையில் சல்லிக்காக இல்லை. பரம்படித்தால்தான் பாடு ஓடும் என்ற கதி வந்தாகி விட்டது. 'பாட்டோடு பாடாய் ஒரு 'ஏர்க்கலப்பை' மட்டும் செப்பனிட்டு வைத்து விட்டால் பாட்டை சுளுவாய் நகத்திப்புடலாம்' என்று நினைத்துக் கொண்டவனுக்கு, கலப்பை செப்பனிட யாரிடம் போய்க் கையேந்துவது என்றுதான் தெரியவில்லை.

அப்போதுதான் தெருவில் பாராமுகமாய் போய்க் கொண்டிருந்த உத்திராபதியைப் பார்த்த இவன், "ஆரு மச்சான் அங்கன போறது... தலைய கவுத்துக்கிட்டுப் போயிட்டா கண்டுக்க மாட்டாங்வோன்னா..." என்று குரல் கொடுத்தான்.

ஏதோ யோசனையில் போய்க் கொண்டிருந்த உத்திராபதி திடுக்குற்றுத் திரும்பிப் பார்த்தவர், ''தங்கராசா கூப்ட்டது? என்னமோ யோசனையில போனனா, கவனிக்கலை" என்று சொல்லிவிட்டு, தேங்கி நின்றார்.

"சாயரச்சை ஒங்களத்தான் வூட்டுக்கு வந்து பாக்கணும்னுருந்தன். கண்ணுல பட்டுப் போயிட்டீங்க. செத்த இப்டி வந்துட்டுப் போனாத் தேவலை" என்றான் இவன்.

உத்திராபதி வேலிப்படலை நீக்கிக் கொண்டு உள்ளே வந்தவர் மாடுகளைப் பார்த்ததும் ஆச்சரியத்தில் மிரண்டார்.

"ஆரு வூட்டு மாடு மச்சான் இது? மச்சினங் கிச்சினங்கிட்டருந்து ஓட்டிட்டு வந்தியனா?" என்று வினயமாய்க் கேட்டார்.

"இல்ல மச்சான்.... நேத்தக்கிதான் கூனம்பட்டிலருந்து வாங்கிட்டு வந்தேன்; தரவுக்காரர் சின்னத்தம்பிதான் வெலபேசி வாங்கிக் குடுத்தாரு! மாடு தேவலாமா பாருங்க?" என்றான் பவ்யமாக.

மாட்டுக்கென்னா கேடு! எளம்மாடு கறி புடிப்பா நல்லாத்தான் இருக்குது... சின்னத்தம்பி வாங்கிக் குடுத்தாருன்னா சுளி பாத்துதான் வாங்கிருப்பாரு" என்று சொல்லிக் கொண்டே மாடுகளைச் சுற்றி சுற்றிப் பார்த்தார்.

"மாட்ல பளுதான எந்தச் சுளியும் இல்ல! 'கொடமேல கொட' 'கொறப்பள' ஒண்ணும் கெடையாது.... அடடே புள்ளையார் சுளியும் 'நகரா' சுளியுமுல்ல கெடக்கு! நல்ல யோகக்கார மனுசன் தாய்யா நீ! மாட்டுக்கு பல்லு எத்தினி?"

"ரெண்டு பல்லு மச்சான்."

"என்னோட மதுப்பு மாட்டோட சுள்ளாப்பப் பாத்தா நாலாயிரத்தத் தாண்டி வெல பெறும் போலருக்கே. எம்புட்டு குடுத்தீங்க?"

"ஒங்க மதிப்புக்கு அஞ்சிநூறு கம்மி தான்."

"ஏதுய்யா இம்புட்டு காசு ஒங்கிட்ட?"

"நல்லாத்தான் கேட்டீங்க போங்க... எறும்பு எறைய சேக்குறாப்ல சேத்த காசு மச்சான்."

"செரிய்யா செரி சேத்த காசை வச்சி நாறு குளி நெலம் ஒத்திசத்தி புடிச்சிருக்கலாமுல்ல... அத வுட்டுப்புட்டு மாட்ல எதுக்கு அனாவசியமா காசப் போட்டீங்க... பத்து மூட்டை நெல்லு வெளஞ்சா சோத்துக்கு ஆச்சுல்ல?"

"வீராயிகூட அப்டிதான் சொன்னுச்சி. நாந்தான் கேட்டுக்கலை வுடாப்புடியா உழவு மாடு வாங்கணும்னு வாங்கியாந்தன்."

> ''என் மேல் ஒரு சின்ன தூசு விழுந்தா கூட என் மனைவி பொறுக்க மாட்டா!''
>
> ''என்ன செய்வாங்க?''
>
> ''ஒட்டடைக் கம்பு எடுத்து அடிச்சிருவா!''
>
> – என். உஷாதேவி

"இப்பல்லாம் ஆருய்யா ஏருமாடு வச்சி நெலம் உளுவுறா? அதுக்கெல்லாந்தான் 'ராக்கெட்டரு' (டிராக்டர்) வந்துருச்சுல்ல? அம்பது குளி நெலம் உளுவணும்னா கூட ராக்கெட்ரு வச்சிருக்குறவனத்தான் தேடி ஓட வேண்டியிருக்கு. மொத காலத்துலதான் ஏருமாடு வச்சிருந்தவனுக்கு மவுசுருந்துச்சி; இப்ப ஆரு அதச் சிந்திப்பாக்குறா? நடவு நட மிசினு, அறுப்பறுக்க மிசினு, அடிச்சிப் போட மிசினு, போரடிக்க மிசினுன்னு எல்லாம் மிசினு மயமாயிட்டப்ப, ஒஞ்சிட்டு செல்லுமா? நல்லாத்தான் மாடு வாங்கி கட்டிப்புட்டன்னு பீத்திக்கிட்டு திரியிற'' என்று கடகடவென்று சிரிக்க ஆரம்பித்து விட்டார் உத்திராபதி.

வேலில போற ஓணானைப் புடுச்சி காதுக்குள்ளாற வுட்டுகிட்ட கதையா இந்த ஆளை எதுக்குத்தான் கூப்பிட்டம் என்று ஆகிவிட்டது தங்கராசுக்கு.

''என்னமோ என்னப் பாக்கணும்னு சொன்னியே எதுக்கு?'' என்று உத்திராபதி தான் கேட்டார்.

"ஒண்ணுமுல்லே கலப்பக்கி ஒரு கருவத் துண்டு வேணும். கொடுத்தியன்னா ஆசாரி கிட்ட குடுத்து ஏரு கலப்பை செப்பனிட்டுக்குவன். அதுக்கு எம்புட்டு காசோ அத பின்னால குடுத்துவுடுறன். இல்லாட்டி வேல வெட்டி செஞ்சி கழிச்சிவுடுறன் மச்சான்.... ஒங்க வூட்டு கொல்லையில ஒரு கருவமரம் வெட்டி சாச்சிருந்தியளே அதுல ஒரு துண்டு (கிளை) குடுத்தாக்கூட போறும்."

''வண்டி வட்டாவுக்கும் பாருக்கும் வேணுமுன்னுதான் மரத்தை வெட்டிப் போட்டு வச்சன். ஆசாரி செலவுக்குக் காசில்லை. வீணா வெய்யில்லையும் மழையிலயுமா நனஞ்சி மரம் நாசமாயிட்டிருக்கு"– சொல்லிவிட்டு உத்திராபதி எதையோ யோசிக்கிற மாதிரி இருந்தார்.

"எதுக்கு மச்சான் தயங்குறீங்க. எங்கருந்து பணம் கொடுக்கப்போறன்னா?"

"வட்டாவையும் பாரையும் செஞ்சிபுட்

டன்னா மிச்சப்பட்ட துண்டை நீ எடுத்துக் கறதைப் பத்தி ஒண்ணுமுல்லே! அதுக்கும் முன்னாடி எப்புடி குடுக்குறதுன்னுதான் யோசன பண்ணிகிட்டிருக்கன்."

"கிட்டத்து முட்டத்துல பாரோ வட்டாவோ செய்யப்போறதில்லியாக்கும்?"

"எப்புடிச் செய்ய? கையில மடிலதான் ஒண்ணும் இல்லியே. தொட்டுத் தொட்டு வச்சிகிட்டாலும் ஆசாரி செலவு ஆறுநூறு ஏளுநூறு ஆயுப் போவும்."

"கலப்பக்கி எம்புட்டு மரம் ஆவப் போவுது கோணலா ஒரு துண்டு குடுத்தாக் கூடப் போறும்."

"நா மாட்டையே வித்துபுடுன்னு புத்தி மதி சொல்றேன். நீ என்னடான்னா கலப் பக்கி அச்சாரம் போடுற. இதெல்லாம் இந்த நவநீதமான காலத்துக்கு எடுக்காதுய்யா. ஏங்கிட்ட கருவக்கட்டை ஒண்ணும் மீதிப் படாது. ஆர்கிட்டயாவது கேட்டு வாங்கிக்க" என்று படபடவென்று பேசிவிட்டு நடையைக் கட்டி விட்டார் உத்திராபதி.

மாடுகள் புல்லை மேய்ந்து விட்டிருந்தன. மாட்டை அவிழ்த்து தொட்டியில் தண்ணீர் காட்டிவிட்டுத் தொழுவத்தில் கட்டினான். மீண்டும் வீட்டுக்கு வந்து மண்வெட்டியை எடுத்துக் கொண்டு வேலாயுதத்தின் வயலை நோக்கி நடந்தான் ராசு.

'சரக் சரக்'கென்று மண்வெட்டியில் மண் பாய்ந்து பாய்ந்து வரப்பு அழகு பெற்றுக் கொண்டிருந்தது. 'வரப்பண்டை' போடுவதில் தங்கராசுக்கு நிகர் தங்கராசுதான். முள்ளும் செடியுமாய்ப் புதர் மண்டிக் கிடக்கிற வரப்புகள் நூல் பிடித்தாற்போல் ஒழுங்குபட்டதாகி விடும்.

வேலாயுதத்தின் நஞ்சையில் முக்கால் பங்குக்கு 'அண்டை' போட்டு முடிந்து விட்டது. காலுக்கும் கைக்கும் அசதி வந்து விட்டாற்போல் இருந்தது. மண்வெட்டியை அண்டை போட்ட இடத்திலேயே வைத்து விட்டு வரப்பில் ஏறி கருவை மரத்து நிழல் பக்கம் வந்து குந்தினான். தலை முண்டாசில் வைத்திருந்த வெற்றிலைப் பொட்டலத்தை எடுத்து பிரித்துப் போட்டான். புகையிலைச் சாறின் போதை மண்டைக்குள் ஏறி கிறுகிறுத்தது. வீராயி இந்நேரம் களைபறித்து விட்டு வீட்டுக்குப் போயிருப்பாள் என்று நினைத்துக் கொண்டான். இந்த நேரத்தில் அவள் ஒரு குத்துச் சோறு எடுத்துக் கொண்டு வந்தால் சாப்பிட்டுவிட்டு எத்தனை தெம்பாய் வரப்பு போடலாம் என்று நினைத்துக் கொண்டான்.

'ச்சொதக்'கென்று என்னமோ தோள் பட்டையில் தெறித்தது. அண்ணாந்து பார்த்தான் தங்கராசு. 'ரெண்டு அண்டங்காக்கைகள் மரக்கிளையில் உட்கார்ந்து கொண்டு அசிங்கம் பண்ணிவிட்டதே'. பரக்க பரக்க வயலில் இறங்கி தண்ணீரை வாரியடித்து எச்சத்தைக் கழுவிக் கொண்டு மீண்டும் வரப்பில் குந்தினான். மீண்டும் காக்கைகள் அசிங்கம் பண்ணிவிடுமோ என்ற கிலியில் 'ச்சூ...ச்சூ'வென்று களை கையைத் தட்டி விரட்டினான். காக்கைகள் சிடுசிடுத்து கிழக்கு முகமாகப் பறந்து போய்க் கொண்டிருந்த போதுதான் அந்த மரக்கிளையைப் பார்த்தான். கலப்பை செய்ய தோதாய் வளைசலாய் ஒரு கிளை வயல்பக்கம் பரவி அனாவசியமாய் நிழல் கொடுத்துக் கொண்டிருக்கிறது. எந்நேரமும் நிழல் வாடையில் இருக்கிற பயிர் கதிர் வாங்காமல் தட்டையாய் நின்று போகும். விளைந்தாலும் சாவியாகிப் போய்விடும். அந்தக் கிளை பரவிக் கிடக்கிற வரைக்கும் ஒரு மூட்டை நெல்லுக்கு சேதம் உண்டாகி விடும். 'வேலாயுதத்தண்ணனிடம் சொல்லி அந்தக் கிளையை வெட்டி எடுத்துக் கொண்டால் கலப்பையும் செய்து விடலாம்; வயலுக்கும் சேதமில்லை. அவர் கேட்டால் கொடுப்பார். நல்ல மனசுக்காரர். ஆவல் உந்தித் தள்ளியது. இன்றைக்குச் செய்கிற வேலைக்குக் கூட காசு கேட்க வேண்டியதில்லை என்று இவன் எண்ணிக் கொண்டிருந்த போதுதான் வேலாயுதமே அங்கே வந்தார். செக்கைச் செவேல் என்ற நிறத்தோடும் அநேக மடிப்புகள் ஓடிய தொந்தியோடும். கையில் தூக்கு வாளி. மடியில் என்னமோ கனமாய்.

"என்ன தங்கராசு... அலுத்தாப்ல மர வாடையில குந்திட்டியளா? வேலை ஆச்சா?"

"வயலப்பாத்தா தெரியலையா, வேலை ஆயிகெடக்குறது? முக்காவாசிக்கி முடிஞ்சுப் போச்சி அண்ணே. மணி மூணுக்கெல்லாம் சொச்ச அண்டையைப் போட்டுட்டு கரை யேறிடுவேன்."

"செரி செரி... இந்தாங்க தூக்குவாளில

## "அப்படிக் கேட்காதீங்க"

" 'கர்நாடக சங்கீதத்தை யார் கேட்கிறாங்க. அதுக்குப் போய் இவ்ளோ முக்கியத்துவம் கொடுக்கறீங்களே' என்கிறார்கள் நேயர்கள் பலர். கர்நாடக இசைக் கலைஞர்களின் முன்னோடிகள் பலரும் திருச்சி



• விழாவில்...

வானொலி நிலைய எல்லைக்குள் வாழ்ந்தவர்கள். அவர்கள் நினைவாக இங்கு நிகழ்ச்சிகள் நடத்தப்படும்போது அதற்கு முக்கியத்துவம் கொடுப்பதுதான் நமது கடமை. அதனால இனிமே யாரும் அப்படி கேட்காதீங்க."

**– திருச்சி வானொலி நேயர் வட்ட இரண்டாமாண்டு விழாவில் நிலைய இயக்குனர் பி. தனலட்சுமி.**

**– திருநாவுக்கரசு.**

டீத்தண்ணிருக்கு குடிச்சிட்டு அண்டை போடுங்க. போண்டா வடை கூட வாங்கியாந்துருக்கன்; தின்னுட்டு டீயக்குடிங்க" மடியில் வைத்திருந்த பொட்டலத்தை எடுத்துக் கொடுத்தார்.

"இப்பத்தான் வீராயி இந்த நேரத்துல ஒரு குத்துச்சோறு கொண்டாந்தா நல்லாருக்குமேன்னு யோசிச்சன். நல்ல மனுச இருக்க வாசிதான பொளுது விடியிறதும் மழபேயிரதும் தொண்டு தொட்டு நடந்துகிட்டிருக்கு."

"அட நீ ஒன்னு தங்கராசு! வேல செய்யிற ஆளுக்கு இதெல்லாம் வாங்கிக் குடுத்தாத்தான தெம்பா வேல செய்ய முடியும்."

"இருக்கட்டும் இந்த நேரத்துக்கு இது பெருசுதான்" என்று சொல்லிக் கொண்டே பொட்டலத்தைப் பிரித்து போண்டாவை தின்ன ஆரம்பித்தான். டீயைக் குடித்துவிட்டு, "அண்ணே..." என்று அவர் முகத்தைப் பார்த்தான்.

"என்ன தங்கராசு?"

"அப்புடி அண்ணாந்து பாருங்க.. அந்தால ஒடுதே கருவக்கெளை அதால வயலுக்கு எம்புட்டு சேதம்.. அத நா வெட்டிகிட்டா..?"

"மாடு வாங்கியாந்துருக்க. கலப்பக்கி ஆவும்னு கேக்குறியாக்கும்.. இதுக்குப் போயி என்னுகிட்ட கேக்கணுமாக்கும். தாராளமா வெட்டி எடுத்துக்கிட்டுப் போயி கலப்பைய செப்பனிட்டுக்க. நாத்தாங்கா நரம்பு உளுவலாமுல்ல."

"அதுக்கு உண்டான காசு எம்புட்டோ அதை வேலை செய்யிறதுல எடுத்துக்கங்க."

"ஒங்கிட்டப் போயி ஆரப்பா காசு கேட்டது.. சும்மா வெட்டி எடுத்துக்கிட்டுப் போ ஆனா ஒன்னு தங்கராசு..."

"என்னண்ணே...?"

"ஏ வூட்டு நாத்தாங்கா நரம்பையெல்லாம் நீதான் உளுது குடுக்கணும் அதுக்குண்டான கூலியைக் குடுத்துடறன் சரிதானே?!"

டீயைக் குடித்துவிட்டு வேலையைப் பார்க்க ஆரம்பித்தான் தங்கராசு. சரக் சரக்கென்று மண் பாய்ந்து வரப்பில் ஏறிக் கொண்டிருந்தது. மணி மூன்றுக்கெல்லாம் வேலை முடிந்து வயல் அழகு கொட்டியது. தங்கராசு முண்டாசை அவிழ்த்துக்கொண்டு வயலை ஒட்டி ஓடிய வாய்க்காலில் குளிக்க ஆரம்பித்தான். ஈர வேஷ்டியைப் பிழிந்து இடுப்பில் கட்டிக் கொண்டு வரப்பில் ஏறினான். நாலாபுறமும் டிராக்டர் உழவு துரிதப்பட்டுக் கொண்டிருந்தது. யார் யார் வீட்டு வயல்களிலோ அண்டை போட்ட ஆட்கள் வீட்டுக்குப் புறப்பட ஆயத்தமாகிக் கொண்டிருந்தனர்.

வேலாயுதமும் இவனோடு நடந்து வீட்டுக்குப் புறப்பட்டார்.

**ம**று ரெண்டு நாட்களிலேயே கலப்பையைச் செப்பனிட்டு விட்டான் தங்கராசு. இவனிடம் ஏர்மாடு இருக்கிறது என்று சங்கதி தெரிந்தவர்கள் உழுவதற்குக் கூப்பிட்டார்கள். இவன் வேலாயுதத்தண்ணனின் வேலைகளை முடித்துவிட்டுத்தான் அடுத்தவர்களுக்குக் கூலி ஏருக்குப் போனான். ஓய்ச்சல் ஒழிவில்லாமல் வேலை இருந்து கொண்டு கையில் காசும் புழங்க ஆரம்பித்து விட்டது.

**ஒ**ருநாள் உத்திராபதி தயங்கித் தயங்கி தங்கராசுவிடம் வந்து கொண்டிருந்தார். ரொம்ப நாட்களாக அவர் இவனோடு கண்டால் கூட பேசுவது கிடையாது. அப்படி இருந்தவர் தானாய்த் தேடி வருவதைப் பார்த்து ஆச்சரியப்பட்டான் இவன்.

"என்ன மச்சர் திடீருன்னு இப்புடி...?!" தங்கராசுதான் புகையிலையை வாய்க்குள்

அடக்கியபடி கேட்டான்.

"ஒண்ணுமுல்லே... ஏ வயல் பூரா ராக்கெட்ரு வச்சி உளுது நட்டு முடிச்சிட்டன். அதுல ரெண்டு நாத்தாங்கால் மட்டும் உளுவ முடியல..."

"நாத்து இருந்து போச்சா...?"

"ஆமா பறிக்கல... அம்பது நாள் நாத்தப் பறிச்சி என்னமா நட்டு வெளைய வக்கிறதுன்னு வேற நாத்து வாங்கி வயலை நட்டன்."

"காலத்தோட உளுது பறிச்சி நட்டுருக்க வேண்டியதுதான?"

"ராக்கெட்டு வச்சிருக்குறவன் கூப்ட்டா ஒடனேயேவா வந்துடுறான்? அதுலதான் சொணங்கிப் போச்சு. நாத்தாங்கா பறிக்காம இருந்துட்டதால வயலோட சேந்தர்னையா நாத்தாங்காலையும் உளுவ முடியாமப் போச்சி..."

"இப்பத்தான் நாத்தாங்காலப் பறிச்சியளாக்கும்."

"ஆமா நாத்து கெடைக்காம அல்லாடிக்கிட்டிருந்த பொன்னுச்சாமி முத்துன நாத்தாருந்தாலும் பரவால்லன்னு பறிச்சிக்கிட்டுப் போனாரு... அந்த நாத்தாங்கால உளுவுறதுக்குதான் ஒன்னக் கூப்புடுறன்."

"அதையும் ராக்கெட்டுரு வச்சி உளுதுர வேண்டியதுதான்."

"ராக்கெட்டுரு வரமுடியாதபடிக்கு நாலா பக்கமும் நட்டாச்சி. ஏருமாடு வச்சி உளுதா தான் உளுவலாம், அதான் ஒங்கிட்ட சொல்லிட்டுப் போவலாமுன்னு வந்தன்."

இதைக்கேட்டதும் இவன் ஆச்சரியப்படவில்லை. இப்படியெல்லாம் ஆகும் என்பது தெரிந்த விஷயம்தான்.

"ஏருமாடெல்லாம் ஒங்களுக்கு எடுக்குமா மச்சான்... நீங்க மிசினை நம்பி விவசாயம் பண்ணுறவர்."

"நா முன்னாடி சொன்னதை மனசுல வச்சிகிட்டு கேள்விமொறை கேக்க வாணாம் தங்கராசு. நாத்தாங்காலுக்கு ராக்கெட்டுரு வர பாதை இல்லங்குறனல்ல."

"மிசினை நம்பியே காலத்தை ஓட்டிப்புடலாம்னு இருந்திங்க! இப்ப ஏர்மாட்டுக்கு வந்து நிக்கிறியளே... ஆயும் அப்பனும் இல்லாமயா புள்ளை வந்துர முடியும்? ஏரும் மாடும் எப்புடி உளுவுதுன்னு பாத்துதானே ராக்கெட்டரைக் கண்டுபுடிச்சிருப்பான்? சிமுனி வெளக்கு எதவச்சி எரியிதுன்னு பாத்துதானே கரண்டைக் கண்டுபுடிச்சிருப்பான்? வெதையில்லாம பயிரு வந்துர முடியுமா... நல்லா ரோசிச்சுப் பாருங்க!"

அவர் பேசவில்லை. தங்கராசுவின் சம்மதத்தை எதிர்பார்த்துக் காத்திருந்தார்.

'தமிழ்நாட்டிலுள்ள அறுபடைவீடுகள் முதல் உலகெங்கிலும் உள்ள பெரும்பாலான திருக்கோயில்களில் என் மாணவர்கள்தான் குருக்களாக இருக்கிறார்கள்'' என்கிறார் பிச்சைக் குருக்கள்.

மரபுகள் அழிந்து விடக்கூடாது என்பதற்காகப் பிள்ளையார்பட்டியில் ஸ்ரீகற்பக விநாயகர் வேத ஆகம பாடசாலையை நடத்தி வரும் அவரைச் சந்தித்தோம்.



• பிச்சைக் குருக்கள்

''1979ஆம் ஆண்டில் ஒரு நாள்.... 'பழைமையான மரபுகள், வேதம், ஆகமம் தெரிந்தவர்கள் குறைந்து கொண்டே வருகிறார்கள். அதைக் காப்பாற்ற ஏதாவது செய்தால் நல்லது என்று கம்பன் அடிப்பொடி சா. கணேசன் சொன்னபோது எனக்கும் சரி என்று தோன்றியது. அடுத்த ஆண்டே முதன்முதலாக ஐந்து மாணவர்களைக் கொண்டு இந்த வேத ஆகம பாடசாலையைத் தொடங்கினேன். இன்று 230 மாணவர்கள் படிக்கிறார்கள்...'' என்று சொல்லும் பிச்சைக் குருக்களுக்கு வயது 52.



• பாடசாலை முகப்பு

பிள்ளையார்பட்டி ஸ்ரீ கற்பக விநாயகர் திருக்கோயிலின் தலைமை அர்ச்சகர்தான் இந்தப் பிச்சைக் குருக்கள்!

நான்கு ஆண்டுகள் தொடர்ச்சியாக மூன்று வேளை இலவச உணவு, உறைவிடம், கொடுத்து மாணவர்களுக்கு வேதங்களும் ஆகமங்களும் திருமுறைகளும் சொல்லித் தருகிறார். இவர் தலைமையில் நடைபெறும் வெளியூர் குடமுழுக்கு விழாக்கள், ஹோமங்கள், யாகசாலைகள் மூலம் கிடைக்கும் வருமானத்தை இந்தப் பாடசாலைக்குப் பயன்படுத்திக்கொள்கிறார்.

"ஒவ்வொரு ஆண்டும் 'விஜயதசமி'யன்று மாணவர்கள் சேர்க்கை நடைபெறுகின்றது. மாணவர்களின் குறைந்தபட்ச கல்வித் தகுதி எட்டாம் வகுப்பு தேர்ச்சி என்று நிர்ணயித்துள்ளோம். சேர்க்கைக் கட்டணம் எதுவுமில்லை.

"ஏழு ஆசிரியர்களைக் கொண்டு வேதங்கள், ஆகமங்கள், வடமொழி, சாஸ்திரங்கள் நான்கு ஆண்டுகளுக்குக் கற்றுத் தருகிறோம். கடைசி ஒரு ஆண்டு அவர்களை நேரடியாக குடமுழுக்கு விழாக்கள், வேள்விகளில் பங்கேற்கச் செய்து பயிற்சி கொடுக்கப்படுகிறது. இது தவிர ஓர் ஆண்டு பயிற்சியாக "நித்ய பூஜை" சொல்லிக் கொடுக்கப்படுகிறது. அந்தப் படிப்பு முடிந்தவுடன் அவர்களுக்கு 'சைவாச்சாரியார்' பட்டமும் நான்கு ஆண்டுகள் தொடர்ந்து படித்து வெளியே செல்லும் மாணவர்களுக்குச் 'சிவாகம ரத்தினம்' என்ற பட்டமும் வழங்கப்படுகிறது.

''கடந்த இருபது ஆண்டுகளில் சுமார் ஆயிரம் மாணவர்கள் படித்து வெளியே சென்றுள்ளனர். இதில் மலேசியா, சிங்கப்பூர், கனடா, அமெரிக்கா உள்ளிட்ட வெளிநாட்டு மாணவர்கள் சுமார் நூறு பேர் படித்துவிட்டு, தங்கள் தாய் நாடுகளில் வேத ஆகமப் பணிகள் செய்து வருகிறார்கள்.

''தற்போது 230 மாணவர்கள் படிக்கின்றனர். இலங்கையிலிருந்து மூன்று பேரும், மலேசியாவிலிருந்து

# புரட்சி வேள்வி!



• கணேச கனபாடிகள்

மூன்று பேரும் சுவிட்சர்லாந்திலிருந்து ஒரு மாணவரும் ஆக ஏழு வெளி நாட்டு மாணவர்கள் தற்போது படிக் கின்றனர்.

"ஓய்வு நேரங்களில் இவர்களுக்கு காரைக்குடியிலிருந்து தனியார் கம்ப் யூட்டர் பயிற்சி மையத்தின் மூலம் 'விஷுவல் பேஸிக்' படிக்க ஏற் பாடுகள் செய்துள்ளோம்.

"பரம்பரை பரம்பரையாக பூஜை ஸ்தானிகர்களாக இருப்பவர்களான பண்டாரம், வேளார், பட்டர், சைவ சமூகத்தினரும் இந்தப் பாட சாலையில் சேர்த்துக் கொள்ளப்பட்டுப் பயிற்சி பெறுகிறார்கள். யார் எந்தக் கோயில் என்பதெல்லாம் பிரச்னை இல்லை. வழிபடப் போகும் பக்தர்களுக்கு முறை யாக மந்திரங்கள் சொல்லி தீபாராதனை காட்டினால் போதும். அதுதான் என் லட்சியம்" என்கிறார் பிச்சைக் குருக்கள்.



• கம்ப்யூட்டர் பயிற்சி

"**கா**லையில் ஒரு மணி நேரமும் மாலையில் ஒரு மணி நேரமும் வேத வகுப்பு, மற்ற நேரங் களில் ஆகமங்கள், பூஜை முறைகள், சாஸ்திர பாடம், தமிழ் அர்ச்சனை முறைகள், தேவார திருவாசக வகுப்புகள் நடைபெறுகின் றன. வேத வகுப்புகளில் கிருஷ்ண, யஜுர் வேதத்திலிருந்தும் மற்ற வேதங் களிலிருந்து முக்கிய பகுதிகள் போதிக்கப்படுகின்றன.

"விநாயகர், முருகன், சிவன், அம்பாள் முதலிய தெய் வங்களுக்கு நூற்றியெட்டு போற்றிகள் தமிழில் சொல்லிக் கொடுக்கும் முதல் பாடசாலை இதுதான்" என்கிறார் ஏழு ஆண்டுகளுக்கு மேலாக சம்பளம் எதுவும் பெறாமல் கௌரவ வேத ஆசிரி யராகப் பணியாற்றும் கணேச கன பாடிகள்.

நல்ல நிலையில் உள்ள பழைய மாணவர்கள் பாட சாலைக்கு உதவி செய்ய முன் வருகிறார்கள். ஆனால் நான்தான் அதை ஏற்றுக் கொள்ள மறுத்து விடு கிறேன். இது முழு மையாக என்னுடைய தொண்டாகவே இருக்க விரும்புகிறேன்'' என் கிறார் பிச்சைக் குருக் கள்...

தமிழில் அர்ச்சனை முறைகள்... தேவார திருவா சக வகுப்புகள்... பூஜை வழி பாரம்பரியமுடைய அனைத்து சாதியினருக்கும் வேத ஆகம கல்வி என்று ஒரு புரட்சி வேள்வி நடப் பது வியப்பாகத்தான் இருக் கிறது!



• மாலை நேர தோட்டவேலை

கட்டுரை, படங்கள்:
**கி. சிங்காரவடிவேல்**

# ஆங்கிலமே,

'Eat' என்றால் சாப்பிடு, 'drink' என்றால் குடி. ஆனால் வீட்டுக்கு வந்துள்ள விருந்தாளிகளைப் பார்த்து 'eat idly, drink tea' என்று நாம் சொல்வதில்லை.

இந்த eat, drink என்ற வார்த்தைகளுக்குப் பதிலாக 'have' என்பதைப் பயன்படுத்துவது நல்லது.

Drink some coffee (கொஞ்சம் காபி சாப்பிடுங்கள்) என்பதை Have some coffee என்று சொல்வதுதான் பொருத்தமாக இருக்கும்.

❒ வீட்டிற்கு வந்துள்ள உறவினர்கள் அல்லது நண்பர்களிடம் கொஞ்சம் காபி சாப்பிடுகிறீர்களா? என்று விசாரிக்க "Would you like to have some coffee?" என்று பணிவாக கேட்க வேண்டும்.

❒ என்ன சாப்பிடுகிறீர்கள்? என்று நீங்கள் விசாரிக்க விரும்பினால் "what would you like to have?" என்று கேட்கலாம்.

❒ என்ன சாப்பிடுறீங்க? ஏதாவது சூடாக சாப்பிடுறீங்களா இல்லை 'ஜில்'லுன்னு ஏதாவது தரட்டுமா என்பதை 'what would you like to have - hot or cold?' என்று கேளுங்கள்.

❒ 'ஏதாவது சாப்பிடுகிறீர்களா?' என்று item எதையும் குறிப்பிடாமல் கேட்க விரும்பினால் –

'Would you like to have something?' என்று கேட்கலாம்.

இந்த ஸ்வீட் வீட்ல செஞ்சீங்களா ரொம்ப நல்லா இருக்கு என்று விருந்தாளி உங்களிடம் கூறினால் அவருக்கு இன்னொரு ஸ்வீட் தேவைப்படுகிறது என்று அர்த்தம். இது போன்ற சந்தர்ப்பத்தில் 'Would you like to have one more (sweet)? என்று கேளுங்கள். இன்னும் ஒரு ஸ்வீட் சாப்பிடறீங்களா என்பது இதன் அர்த்தம். எல்லாம் சரிதான்,

நீங்க உங்க சொந்




U

வி. ராஜகோபாலன்

தக்காரங்க வீட்டுக்குப் போயிருக்கீங்க. அவங்க உங்ககிட்ட "Would you like to have some coffee?"னு கேட்கறாங்க. உங்க பதில் என்ன?




அது என்னமோ தெரியலீங்க.

நம்மவங்க ரொம்ப பேரு இது போல கேள்வியைக் கேட்டதும் சாப்பிடணும் போல இருந்தாலும், கூச்சத்தின் காரணமாக 'எதுவும் வேணாங்க'னு சொல்றது வழக்கமாயிடுச்சு.

நாம வேணாம்னு சொல்லுவோம்'னு நெனச்சுத்தான் இது போல கேள்வியைக் கேட்கறாங்கன்னு நெனக்கிறேன்.

இனிமே உங்ககிட்ட யாராவது "would you like to have some coffee?"னு கேட்டா yes pleaseனு சொல்லிடுங்க.

இதேபோல 'What would you like to have, hot or cold?'னு கேட்டா, 'something hot please'னு சொல்லுங்க. ஏதாவது 'ஜில்'லுன்னு சாப்பிட ஆசைப் பட்டா 'Something cold please'னு சொல்லுங்க.

ஸார், இவ்வளவு நாளா என்கிட்ட இருக்கற பழக்கத்தை என்னால திடீர்'னு விட முடியாது'னு நீங்க நெனச்சா No thanksனு சொல்லுங்க.

வேண்டாம்; (கேட்டதற்கு) நன்றி என்பது தான் இதன் அர்த்தம்.

ஒரு பிஸினஸ் விஷயமா பேசறதுக்காக சில பேர் உங்க ஆபீஸுக்கு வந்திருக்காங்க. அவங்க சாப்பிடறதுக்காக நீங்க coffee order பண்ணீங்க. Office boy coffeeஐ டேபிள் மேல் வைத்துவிட்டுச் சென்றுவிட்டான்.

நீங்க மும்முரமா discuss பண்ணிக்கிட்டிருக்கீங்க. ஆனா காபி ஆறிக்கிட்டே இருக்கு.

இது போன்ற சந்தர்ப்பத்துல காபியை டேபிள் மீது வைத்த சிறிது நேரத்திற்கெல்லாம் நீங்கள் கோப்பையைக் கையில் எடுத்துக்கொண்டு have the coffee please என்று மற்றவர்களிடம் சொல்லுங்கள்.

இதையே இன்னும் சுருக்கமாக have it please என்றும் சொல்லலாம். நீங்க பாட்டுக்குப் பேசிக்கிட்டே இருந்தீங்கன்னா காபி ஆறி அவலாப் போயிடும்!

சரி, அடுத்த வாரம் பார்க்கலாம்.

# அருகில் வா!

● எம்.டி. ரவிகாந்த், காஞ்சிபுரம்.

**? ஸ்பிக் வழக்கில் ஜெயலலிதாவின் பெயர் சேர்க்கப்பட்டுள்ளது குறித்து...?**

! இதிலென்ன இருக்கு; சேர்க்கப்படாவிட்டால்தானே வியப்பு!

● ஜி.ஜி. கிருஷ்ணன், விசலூர்.

**? நாட்டின் நிதி நிலை முன்னேற்றம் அடைந்திருப்பதாகவும் அன்னியச் செலாவணி கையிருப்பு திருப்திகரமாக உள்ளதாகவும் நிதியமைச்சர் யஷ்வந்த் சின்ஹா சொல்கிறாரே?**

! அது சரி, ரூபாயின் மதிப்பு படிப்படியாக வீழ்ச்சி அடைந்து டாலருக்கு 47 ரூபாய் அருகே சென்று மிரட்டுகிறதே... அதற்கு என்ன சொல்கிறார்?

● இதா, சென்னை – 4.

**? காசிக்குப் போய், டீ.வி. சீரியல் பார்ப்பதை விட்டுவிட்டு வந்ததாகக் கூறியுள்ளாரே டாக்டர் சாரதா நம்பி ஆரூரான்?**

! காசிக்குப் போனாலும் கருமம் தொலைக்காதவர்கள்தான் அதிகம் இருப்பார்கள்!

● ஜி. செல்வராஜன், ரிஷிவந்தியம்.

**? கூட்டணி அரசை ஆதரிக்க மாட்டார்கள் என்று கூறும் ஜெ. தனித்தே இனி போட்டியிட்டால் என்ன..?**

! ஊம்... அது எப்படி?... ஏறி வர்றதுக்கும் அப்புறம் எட்டி உதைக்கறதுக்கும் ஒரு ஏணி வேண்டுமே!



• ஏணி வேண்டும்!



● டி.எஸ். பாலு, சென்னை – 42.

**? "பொருள், மதம், அரசியல்– இவை சார்ந்த தலைவர்கள் உலகத்துக்குச் செய்த அநியாயங்கள்தான் உலக வரலாறு" என்கிறாரே வேதாத்ரி மகரிஷி...?**

! நெகடிவ் சிந்தனை! சாதனைகளும் சேர்ந்ததுதான்



• புகழ்ச்சியும்... ...நகைச்சுவையும் •



• மிரட்டலை மறந்தார்!

• வீரப்ப விமர்சனம்!



• ஆதரவின் அடையாளம்

உலக வரலாறு. அநியாயங்கள் நிகழ்ந்திருப்பதையும் மறுப் பதற்கில்லை. ஆனால் அவற்றிலிருந்து பாடம் கற்று ஒதுக்கி, சாதனைகளால் எழுச்சி கொள்வதுதான் புத்திசாலித்தனம்.

● மு. இராமசாமி, வயலூர்.

? சமீபத்தில் உங்களைத் துயரத்தில் ஆழ்த்திய நிகழ்ச்சி...?

! பாப் பாடகி நாசியா ஹாசன் இறந்த பின்னர் அவர் உடலை அடக்கம் செய்ய பிறந்தகமும் முன் வராது, புகுந்தகமும் முன் வராது அநாதைப் பிணமாக லண்டன் பிணக்கிடங்கில் பத்து நாட்கள் இருந்த சோகக் கதை!

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி.

? முதல்வர் கருணாநிதியின் சங்கத் தமிழ் இசை நாட்டிய நாடகத்தின் 150வது அரங்கேற்ற விழா...?

! பத்மா சுப்ரமண்யத்தின் மிகையான புகழ்ச்சியை முதல்வர் ஜோக்காக மாற்றியதை ரசித்தேன்!

● புளியரை கணேசன், சென்னை – 30.

? ஜாதிக் கட்சிகளை எதிர்க்க ஒரு புதிய கட்சி செப்டெம்பர் 15ல் உதயமாமே?

! அது கட்சியல்ல; ஓரங்கட்டப்பட்டவர்கள் சங்கம்.

● கு. கணேசன், மறைமலைநகர்.

• வரலாற்றுப் பார்வை!



• பத்து நாள் பரிதாபம்!



? 'வீரப்பனை உயிரோடு பிடித்துத் தூக்கு மேடைக்கு அனுப்ப வேண்டும்' என்கிறாரே பூலான்தேவி?

! சாத்தான் வேதம் ஓதுகிறது!

● வி.பி.மகராசி, மதுரை–16.

? மும்பை தொடர் குண்டு வெடிப்பு தீவிரவாதிகளை விடுவிக்க, வீரப்பன் பாணியில், இந்தி நடிகர் திலீப் குமாரைக் கடத்துவோம் என மும்பை பிராந்திய முஸ்லிம் லீக் மிரட்டல் விடுத்துள்ளதே?

! கடத்தலில் ஈடுபடப் போகிறவர்கள் அதை முன்னறிவிப்புச் செய்துவிட்டுச் செய்வதில்லை.

● என். பாலகிருஷ்ணன், மதுரை – 1.

## ஜெ. தனித்தீ... போட்டியிட்டால் என்ன?

? நான் முதல்வராக இருந்திருந்தால் வீரப்பன் கோரிக்கைக்குப் பணிந்திருக்க மாட்டேன் என்கிறாரே ஜெயலலிதா?

! என்ன செய்திருப்பாராம்? ராஜ்குமாரை எப்படிக் காப்பாற்றியிருப்பாராம்? அதைச் சொல்ல வேண்டாமோ?

● வி.எஸ். கோவிந்தன், மதுரை – 7. ✱

? பதினோராவது நிதிகமிஷன் பரிந்துரை பற்றி பிரதமரிடம் நாயுடு நேரடியாகவே பேசியிருக்கலாமே?

! பிரதமர் ஒப்புக் கொள்ளாததால் – நானே முதல்வர்களைத் தனியே அழைக்க வேண்டி வந்தது. அந்தக் கூட்டத்துக்கும் நாயுடுவுக்கும் கிடைத்த ஆதரவு அவருடைய நிலை எத்தனை நியாயமானது என்று உணர்த்துகிறது. ◎

❒ ரூ. 50 பரிசு பெறுபவர்:
ஜி.ஜி. கிருஷ்ணன்
விசலூர் அஞ்சல்,
திருவாரூர் மா.வ. 610101.

✱ ரூ. 25 பரிசு பெறுபவர்:
வி.எஸ். கோவிந்தன்,
16, கற்பக நகர்,
கே.புதூர், மதுரை – 625007.

# மாயி

**வோ**ட்டு கேட்க வரும் அரசியல்வாதிகளை வாக்குறுதிகளைக் காப்பாற்றச் சொல்லி மாயி மிரட்டுவது; பெற்ற மகனால் உதாசீனப் படுத்தப்படும் மனோரமாவை, "நானில்லையா உனக்கு?" என்று தேற்றுவது; சின்ன வீடு சமாசாரம் மகன் மாயிக்குத் தெரிந்துவிட்டது என்பதை கேள்விப்பட்ட விஜயகுமார் அடுத்த நிமிடம் தூக்கில் தொங்கி விடுவது; ஆடிப் பாடி தன்னை மயக்க வந்திருக்கும் மந்த்ராவிடம், "பணத்திற்காகத்தானே இத்தனையையும் செஞ்சே? இந்தா வைத்துக் கொள்!" என்று ரூபாய் கட்டை நீட்டுவது – மாயி காரெக்டர் பில்டு செய்யப்பட்டிருக்கும் விதம் வெகு நேர்த்தி. ஒவ்வொரு ஃப்ரேமிலும் வந்தாலும் சரத்குமாரின் காரெக்டர் பிரசென்டேஷனில் துளி பிசிறு இல்லை. சரத்குமாருக்கு ஒரு வெல்டன்! டைரக்டர் சூரியபிரகாஷிற்கு பல 'வெல்'கள், பல 'டன்'கள்!

தனக்கு வந்திருக்கும் தொழு நோயால் பெற்றெடுத்தப் பச்சைக் குழந்தை அழும்போது தொட்டுத் தூக்க முடியாமல், சிரித்து விளையாடும்போது அணைத்து உச்சி முகர முடியாமல், பசித்து அழும்போது பாலூட்ட முடியாமல் தாய் தவிப்பதும், "அம்மா, என்னைத் தொட்டுத் தூக்கும்மா, நோய் வந்தால் வந்திட்டுப் போகுதும்மா" என்று குழந்தை அம்மாவின் அரவணைப்பிற்கு ஏங்கிக் கதறுவதும், தொழுநோய் ஆராய்ச்சிகள் அதிகம் செய்யப்படாத காலத்தில் நடந்த கதை என்று டைரக்டர் முன்னெச்சரிக்கையாக சொல்லி விடுவதால் உருக்கமாகவே இருக்கிறது.

வடிவேலு 'பெண் பார்க்கிற ஸீன்'ல "அண்ணன் மாயி வந்திருக்காகஹூஹூ... அண்ணன் மொக்கச்சாமி வந்திருக்காகஹூஹூ... நம்ப உறவுக் காரங்க எல்லாம் வந்திருக் காஹூஹூ..." என்று பெரிய பொட்டுக்காரர் பிரமாதமாய் இழுத்துத் தள்ளுகிறாரே... நமக்குச் சிரிப்பு இழுத்தெரிகிறது.

"தென்னகம் வாழும் ராசனைப்பாரு" பாடலின் டான்ஸ் மூவ்மெண்ட்ஸ் ரொம்ப கிரேஸ்ஃபுல். கைண்டு அட்டென்ஷன் : ராஜு சுந்தரம்!

சண்டைக் காட்சிகள் இன்னும் கொஞ்சம் ரியலிஸ்டிக்காக இருந்திருக்கலாமோ? சரத்குமார் கூரையிலிருக்கும் தீவட்டியை எகிறிப் பிடிப்பது சொப்ப மாயாஜால ஸ்டைல்! எல்பிஜி காஸ் சிலிண்டரிலிருந்து இப்படியா வெள்ளை வெள்ளையாக காஸ் வரும்? அது கூட பரவாயில்லை; இவ்வளவு வேகமாக காஸ் லீக்காகும் போது தீவட்டி தேமே என்று எரிகிற ரகசியம் என்னவோ?

மேற்படி சமாசாரங்களை டிஸ்கௌன்ட் செய்துவிட்டுப் பார்த்தால் சென்னபின் படம் என்று தாராளமாகச் சொல்லலாம்!

— கிருஷ்ணா சிதம்பரம்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

